



# இலுப்பக்குடி

## திருக்கோயில் திருக்குட நன்னீராட்டு விழா மலர்







KMM 0488



8—2—1985

இலுப்பக்குடி நகரத்தார்

488
879

உ
சிவமயம்
ஸ்ரீ வயிரவ மூர்த்தி துணை

# இலுப்பைக்குடி
# அருள்தரும் சௌந்தரநாயகி அம்மன் உடனுறை
# அருள்மிகு தான்தோன்றி ஈசுவரர்
# வயிரவ சுவாமி திருக்கோயில்
# திருக்குட நன்னீராட்டு
# விழாச் சிறப்பு மலர்



**மலர்க்குழு**

இலுப்பைக்குடி நகரக்கோவில்
இலுப்பைக்குடி
(வழி) காரைக்குடி - 623 002
பசும்பொன் முத்துராமலிங்கம் மாவட்டம்



## திருக்குட நன்னீராட்டுக் குழுத்தலைவர்

சிக. அரு. சோம. ராம.
இராமனுதன் செட்டியார் அவர்கள்

## மலர்க் குழுத்தலைவர்

எல். சோமு அவர்கள்

## பதிப்பாசிரியர்கள்

டாக்டர் அர. சிங்கார வடிவேலன் அவர்கள்

சித. நடராசன் அவர்கள்

## கௌரவ ஆலோசகர்

"சோமலெ" அவர்கள்

## மலர் வெளியிட்டவர்கள்

டாக்டர் வ. சுப. மாணிக்கம் அவர்கள்

**மலர் வெளியிட்ட நாள் மார்ச்சு 25, 1985**

## மலர் மகிழ்வுடன் கிடைக்குமிடம்

1. இலுப்பைக்குடி நகரக்கோவில்
2. வள்ளிவளமனை,
   85, மேற்கு சம்பந்தம் ரோடு, கோயம்புத்தூர்-2
3. நாகப்பா சைக்கிள் மார்ட், மதுரை

Wrapper Printed at Vairam Printers, 144, Bells Road, Madras-5
Photos & Text Printed at
Jeevan Press, Madras-5, Devaneyan Press Madras-5 and
Karpagam Achagam, Madras-2.



மாண்புமிகு முதலமைச்சர்
தெய்வம் காத்த மகன் தென்னகத்து பாண்டியன்
வரலாறு பேசும் புகழ் வாழி !



மாண்புமிகு அறநிலையத்துறை அமைச்சர்

திருக்கோயில்கள்

அறம்காக்கும் தென்னவன் செட்டி மகன் புகழ் வாழி !

# பதிப்புரை

முல்லைப் பூவின் இனிய சுகந்தம் அறை முழுவதும் மணம் பரப்பி நிற்பது போன்று பக்கங்கள் தோறும் செம்பொருள் நயம் மிகுந்து விளங்கும் கட்டுரைகளை, கவிதைகளைக் கொண்டு கருத்துப் பேழையாக, கலைப் பெட்டகமாக இச்சிறப்புமலர் உங்கள் கைகளில் தவழ்கிறது.

கும்பாபிடேகத்தை யொட்டிச் சிறப்பு மலர் ஒன்று வெளிவர வேண்டியது அவசியம் என்றும் நம் இலுப்பக்குடிக் கோயிற் சிற்பங்களின் கலை நுட்பத்தை அனைவரும் அறிய அது ஒரு நல்வாய்ப்பாக இருக்கும் எனவும் நகரத்தார் அன்பர்கள் பெரிதும் விரும்பினார்கள். அவர்களின் ஆர்வத்தைச் செயல்படுத்த ஆர்வமே உருவான திரு. எல். சோமு அவர்கள் மலர்க்குழுத் தலைவராகப் பொறுப்பேற்றுச் செயல்பட்டார்கள்.

மலர்க்குழுவினர் ஊர் ஊராகச் சென்று பல நகரங்களிலும் உள்ள நம் வணிகப் பெருமக்களிடம் விளம்பரங்கள் சேர்க்கப் பெருமுயற்சி மேற்கொண்டார்கள்.

அதற்கு முன்நின்றவர்கள் ஒக்கூர் ராம. அவர்கள். அன்னாரைத் தொடர்ந்து மதுரை, சென்னை, கோயம்புத்தூர், சேலம், திருச்சி, நெய்வேலி, புதுக்கோட்டை, தஞ்சை மாவட்டத்தில் பல நகரங்களிலும் உள்ள நமது இலுப்பக்குடி நகரத்தார்கள் பெரிதும் உதவினார்கள். விவரம் மலரில் பிறிதோரிடத்தில் காண்க.

விளம்பரங்கள் கொடுத்துதவிய வணிகச் செம்மல்களுக்கும் அவற்றைச் சேகரிக்கத் துணை நின்ற செயல் தொண்டர்கட்கும் இச் சந்தர்ப்பத்தில் எங்கள் பெரு நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

மலருக்கு வாழ்த்துக்கள் அனுப்பி ஆசி வழங்கிய சமயப் பெரியார்கட்கும் சான்றோர் கட்கும் எங்கள் வணக்கம் உரியது.

இம்மலரைச் சிறப்பான முறையில் உருவாக்க வைரம் பதிப்பகம் திரு. S. வடிவேல் செட்டியார் அவர்களும் சோமலெ அவர்களும் மலர் வெளியீட்டுப் பணிகளில் பெரும் பங்கு கொண்டு உதவினார்கள்.

மேலும் தமிழக அரசு தொல்பொருள் துறைப் பதிவு அலுவலர் திரு. மா. சந்திரமூர்த்தி அவர்கள் இதற்கென இலுப்பைக்குடி கோவிலில் இரண்டு நாட்கள் தங்கியிருந்து, சிற்பங்கள், செப்புப் படிமங்கள் இவற்றை நுட்பமாக ஆய்ந்து அவற்றின் கலைச் சிறப்புக்களைத் தெள்ளிதின் விளக்கும் ஆய்வுக் கட்டுரைகளை மலருக்கு வழங்கியுள்ளார்கள்.

கவிதை, கட்டுரைகள், சிறு குறிப்புக்கள் ஆகியவற்றை அளித்துப் பெருமை சேர்த்துள்ள அனைவருக்கும் எங்கள் நன்றியினை நினைவு கூர்கின்றோம்.

கும்பாபிடேகம், கலை நிகழ்ச்சிகள் மற்றும் சிற்பங்கள் ஆகியவற்றைச் சிறந்த முறையில் நிழற்படம் (Photo) எடுத்துத்தந்த தேவகோட்டை திரு. லெட்சுமணன் அவர்கள், திரு. சிவ. முத்துகுமார் அவர்கள் மற்றும் காரைக்குடி மாடர்ன் ஸ்டுடியோ ஆகியோர்க்கு எங்களின் உளமார்ந்த நன்றி உரியதாகுக.

மலரை நேர்த்தியான முறையில் அச்சிட்டு சிறப்புடன் வெளிவர உதவிய சென்னை வைரம் அச்சகத்தார், தேவநேயன் அச்சகத்தார், கற்பகம் அச்சகத்தார், பாரதி பதிப்பகம் திரு. பழ. சிதம்பரம் செட்டியார் அவர்கள் மற்றும் பின்னணியில் நின்று பல வகையானும் உதவிய பேரன்பர்கள் பலருக்கும் எங்கள் உளங்கனிந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

அர. சிங்காரவடிவேலன்
சித. நடராசன்
பதிப்பாசிரியர்கள்

உ

ஸ்ரீ சந்திரமௌளீஸ்வராய நம:



ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு

# ஸ்ரீ சங்கராச்சாரிய ஸ்வாமிகள்
# ஸ்ரீமடம் ஸமஸ்தானம், காஞ்சீபுரம்

**தலைமை ஆபீஸ்: நெ. 1, சாலை தெரு**
**பெரிய காஞ்சீபுரம்-613 502**

நாம் இம்மை, மறுமை நற்பயன்களை அடைவதற்கு இன்றியமையாதது கடவுள் வழிபாடேயாகும் கடவுள் உண்மையில் ஒருவராயிருந்த போதிலும் பக்தர்கள் வழிபட்டு உய்வதற்காக அங்கங்கு ஆகம சாஸ்திரப்படியும் சில்ப சாஸ்திரப்படியும் முன்னோர்களால் அமைக்கப்பட்டுள்ள திருக்கோயில்களில் பல்வேறு உருவங்களுடன் வழிபடப்பட்டு பக்தர்களுக்கு அருள் புரிந்து வருகிறார்.

இவற்றுள் செட்டிநாட்டில் நாட்டுக்கோட்டை நகரத்தார்களால் பண்டைய காலத்திலிருந்து அமைக்கப்பட்டு பரிபாலிக்கப்பட்டு வரும் ஒன்பது திருக்கோயில்களுள் அடங்கியதும் இலுப்பைக்குடியில் விளங்குவதுமான ஸ்ரீ சௌந்திரநாயகி ஸமேத ஸ்ரீதான் தோன்றி ஈசர் ஸ்ரீ வயிரவ மூர்த்தி சன்னிதிகளுடன் கூடியதுமான திருக்கோயிலை நகரத்தார்கள் ஜிர்ணோத்தாரணம் செய்வித்து சமீபத்தில் மஹாகும்பாபிஷேகத்தை நடத்தி வைக்க முன் வந்திருப்பதை அறிந்து சந்தோஷிக்கிறோம்.

ஆஸ்திகர்கள் இக்கும்பாபிஷேகத்தை நன்கு நடத்தி வைப்பதுடன், இத்திருக்கோயிலின் நித்ய நைமித்திக பூஜைகள் உத்ஸவங்கள் இவைகளில் ஒத்துழைத்தும் ஸ்ரீ சௌந்திரநாயகி சமேத தான் தோன்றி ஈசர் அனுக்ரஹத்தினால் எல்லா மங்களங்களையும் அடைவார்களாக.

PRIVATE SECRETARY
To His Holiness Sri Jagadguru
Shankaracharya, Dakshinemnaya
**Sri Sarada Peetham**
SRINGERI-577 139 (Karnataka)

To

Secretary
Iluppaikudi Nattukottai Nagarathar Trust.
Nagara Viduthi,
Iluppakudi-628 202

நீங்கள் அனுப்பிய கும்பாபிஷேகப் பத்திரிகை கிடைத்து ஸ்ரீ ஸ்ரீ மஹாஸந்நிதானம் அவர்களின் பாத கமலங்களில் உங்கள் நமஸ்காரங்களுடன் ஸமர்ப்பிக்கப்பட்டது. மேற்படி கும்பாபிஷேகம் நிர்விக்னமாகவும், சிறப்பாகவும் நடந்து அதில் பங்கு கொள்ளும் ஆஸ்திக மஹாஜனங்கள் எல்லோரும் க்ஷேமமாகவும், ச்ரேயஸ்ஸுடனும் வாழ அனுக்ரஹித்தளித்த மந்திராக்ஷதையும் ஸ்ரீ சாரதா சந்த்ரமௌளீஸ்வரர் பிரஸாதமும் இத்துடன் அனுப்பியிருக்கிறோம்.

உ

சிவமயம்

கோவிலூர் ஆதீனம் 10-வது குருமகா சன்னிதானம்

ஸ்ரீ ல ஸ்ரீ

# அரு. ராமனுதஞான தேசிக சுவாமிகளின் வாழ்த்து

அருள்மிகு சௌந்தரநாயகி உடனுய
இருளறு தான்தோன்றீஸ்வரர் இறைவர்க்கு
ஆலயத்திருப்பணி அழகுடன் அமைத்து
சீலத் திருக்குட முழுக்குச் செய்த
இலுப்பக்குடியார் இன்புடன் வெளியிடும்
இந்த மா மலரும் சிறப்புடன் மலர
கோவிலூர் ஆண்டவர் குறைவிலா அருளால்
மேவியே எங்கும் மேன்மை பெறவே
வேண்டும் என்றே விரும்பிச் செய்யும்
ஈண்டு எம் வாழ்த்தை ஏற்பீர் இனிதே.

உ

குருபாதம்



திருக்கயிலாயபரம்பரைத் தருமையாதீனம் 26-வது குருமகாசந்நிதானம்

## ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

### தருமபுரம், மயிலாடுதுறை-609 001.

''ஞாலம் நின்புகழே மிகவேண்டும் தென்
ஆலவாயில் உறையும்எம் ஆதியே''

இறைவன் அங்கிங்கெனுதபடி எங்கும் நிறைந்திருந்தாலும் அவன் அருளைப் பெறுவதற்குரிய இடங்கள் ஆலயங்களேயாகும். ஆலயங்கள் இறைவனது திருமேனிக்கு நிகரானவை. அவற்றைப் பேணிப் பாதுகாத்து பன்னிரண்டு ஆண்டுகட்கு ஒருமுறை பழுது பார்த்து அஷ்டபந்தன மகா கும்பாபிஷேகம் செய்விக்க வேண்டுமென்று ஆகமங்கள் தெரிவிக்கின்றன. இவ்வகையில் இலுப்பைக்குடி ஸ்ரீ சௌந்தரநாயகியம்பாள் சமேத ஸ்ரீ தான்தோன்றீஸ்வர சுவாமி திருக்கோயில் திருப்பணிகள் செய்விக்கப் பெற்று மகா கும்பாபிஷேகம் நடத்தப் பெறுவதறிந்து மகிழ்கிறோம்.

இத்திருக்கோயில் நாட்டுக்கோட்டை நகரத்தாருக்குச் சொந்தமான ஒன்பது கோயில்களுள் ஒன்றாக விளங்குகிறது. தமிழகத்தில் முடியுடை மன்னர்கள் முதலானோருக்குப் பின் பல திருக்கோயில்களைப் பெரும் பொருட் செலவில் திருப்பணிகள் செய்வித்து வந்துள்ள பெருமை இம்மரபினருக்கு உள்ளது. அழகிய முறையிலும், ஆகம நெறிமுறைகள் வழுவாமலும் திருப்பணிகள் செய்வித்து மகா கும்பாபிஷேகம் செய்விக்கும் அன்பர்களைப் பாராட்டுகிறோம்.

மகா கும்பாபிஷேக விழா இனிது நிகழவும், விழா மலர் தெய்வீக மணத்துடன் நன்முறையில் வெளிவரவும் எல்லாம் வல்ல ஸ்ரீ செந்தமிழ்ச் சொக்கனை திருவருளைச் சிந்திக்கின்றோம்.

உ

சிவ சிவ



**ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித்தம்பிரான் சுவாமிகள் அவர்கள், அதிபர், ஸ்ரீ காசிமடம்**

**திருப்பனந்தாள்—612 504 (தஞ்சை மாவட்டம்)**

# வாழ்த்துரை

இலுப்பக்குடி, நாட்டுக்கோட்டை நகரத்தார் கோயில்களுள் ஒன்றாய அருள்மிகு தான்தோன்றி ஈஸ்வரர் சௌந்தரநாயகி அம்மன் திருக்கோயிலில் திருக்குட முழுக்கு விழா நிகழவுள்ளமையும், விழாத் தொடர்பாக சிறப்பு மலரொன்று வெளியிடுவதும் அறிந்து மகிழ்ச்சி.

பத்திமைத்திறம், அறப்பணிகளில் தோய்வு இவை நகரத்தார்தம் வழிவழிப் பண்புநெறியாகும். இப்பணியும் அத்தொடர்ச்சியினதே.

உள ஆரோக்கியமிக்க ஒரு சமுதாயம் ஒளி மிகுந்ததாக விளங்கிட, திருக்கோயில் மேன்மை இன்றியமையாத ஒன்றாகும். அவ்வழியில் ஆலயம் புதியன நிர்மாணித்தலினும் நிற்பன பலவற்றை புதுக்கிப் பொலிவுறச் செய்தல் சிறப்புடைய பணியாகும். இத்தகு அறப்பணியில் வேற்றுமைகள் களையப் படுகின்றன. ஒருமைப்பாடு நிலவிட உதவுகின்றது. ஒரே பாதையில் தனிமனித, சமுதாயச் சீரினை உருவாக்குவது ஆன்மீகமே எனில் அது மிகையன்று.

நல்ல பணியாக அன்பர்களின் கூட்டுழைப்பில் நிறைந்துள்ள திருக்குடமுழுக்கு விழாச் சிறப்புற நிகழ்ந்திடவும், பக்தியென்னும் ஆரா இன்ப அருங்கனி பிழிந்த சாரமாகக் கட்டுரைகள் சேர்ந்து மலர் மணமிகுந்திடவும் செந்திற்கந்தன் சேவடிகளைச் சிந்தித்து வாழ்த்துகின்றோம்

சுபம்

சிவ சிவ

உ

சிவமயம்

திருக்கயிலாய பரம்பரை

ஸ்ரீ-ல-ஸ்ரீ

# சிவப்பிரகாசதேசிக பரமாச்சாரிய சுவாமிகள்

குருமகாசந்நிதானம்

திருவாவடுதுறை ஆதீனம்

**திருவாவடுதுறை 609 303 (தஞ்சை மாவட்டம்)**

'நமச்சிவாய வாஅழ்க! நாதன்றாள் வாழ்க! இமைப்பொழுதும்
என் நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க!'

இலுப்பைக்குடி ஸ்ரீ சௌந்தரநாயகி சமேத தான் தோன்றி ஈசர் ஸ்ரீ வயிரவ மூர்த்தி திருக்கோயில் மகாகும்பாபிஷேகம் நடப்பதை அறிந்து மகிழ்கின்றோம்.

உலக மக்கள் அனைவர் நன்மைக்கும் என ஆன்றோரால் நிறுவப்பட்டன திருக் கோயில்கள் அக்கோயில்களில் சிறப்பொடு பூசனைகள் தவறாமல் நடந்து வருவதால் மறைவாய் இருந்தருளும் பெருமானே அங்கங்கே வெளிப்பட்டு நின்றும் மக்களுக்கு நன்மைகளைச் செய்தருள்கிறான்

திருக்கோயில்களும் அங்குள்ள மூர்த்திகளும் ஆகம முறைப்படி-தற்கால வழக்கில் அறிவியல் முறைப்படி-அமைக்கப்பட்டிருப்பதால் அம்முறைக்கு ஏற்ப உரிய காலங்களில் ஜீர்ணோத்தாரண அஷ்டபந்தன கும்பாபிஷேகம் செய்யப்படுவது இறைவனது அருள் வெளிப்பாட்டிற்குரிய சாதனங்களை மீண்டும் மீண்டும் வலுப்பெறச் செய்வதாகும்.

இத்தகைய குடமுழுக்கு விழாச் செய்வது ஒரு சிவ புண்ணியச் செயலாகும். இப்பெருங் குடமுழுக்கு விழா இனிது நிறைவேறவும், உலக நன்மை கருதி இதனைச் செய்ய முன்வந்த இலுப்பைக்குடி கோயில் நகரத்தார்க்கும் மற்றும் மக்கள் அனைவர்க்கும் எம் வழிபாடு கடவுளாகிய திருஞானமா நடராசப் பெருமானின் திருவருள் மேன்மேலும் பெருகவும் அப்பெருமான் திருவடிமலரை என்றும் சிந்திக்கின்றோம்.

* * * *

உ

சிவ சிவ

தன்கடன் அடியேனையும் தாங்குதல்
என் கடன் பணி செய்து கிடப்பதே.

# தவத்திரு குன்றக்குடி அடிகளார்

குன்றக்குடி-623 206.

தொலைபேசி : குன்றக்குடி 27

அன்புடையீர்

திருவருள் இன்புற்று வாழ்வீர்களாக.

தாங்கள் அனுப்பி வைத்த திருக்குட நீராட்டு விழா பத்திரிகை கிடைத்தது.

மிக்க மகிழ்ச்சி.

திருக்கோவில் விழா இனிதே நிறைவெய்த திருவருளைச் சிந்தித்து வாழ்த்துகின்றோம்.

இப்புண்ணிய பணியில் ஈடுபட்டுள்ள அனைவருக்கும் நமது பாராட்டுக்கள் ! வாழ்த்துக்கள்.

என்றும் வேண்டும் இன்ப அன்பு
அடிகளார்

கும்பாபிஷேக விழாக்குழுவினர்,
நகரக்கோவில்,
இலுப்பைக்குடி.

உ

சிவமயம்

# பாதரக்குடி சுவாமிகள் வாழ்த்து

ஸ்ரீ பேரன்பு நிறைந்த இலுப்பக்குடி நகரத்தார் அவர்களுக்கு ஆசீர்வாதம் செய்து எழுதியது.

''கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்'' என்ற முதுமொழிக்கேற்ப தாங்கள் செல்லும் இடங்களிலெல்லாம் கோயில்களை அமைத்தும், கோயிலுக்குப்புள்ளிவரி அளித்தும், கோயிலையே தாங்கள் கோத்திரமாகக் கொண்டும், கோயிலை முன்னிட்டே திருமணம் முதலிய சடங்குகளை நடத்துவதுமாகக் கோவிலையே தங்கள் உயிர் மூச்சாகக் கொண்டவர்கள் நகரத்தார்கள். அத்தகைய நகரக்கோவில் 9-ல் ஒன்றும், புராதனமானதுமான இலுப்பக்குடி ஆலயத்தில் திருப்பணிகள் நிறைவேறித்திருக்குட நன்னீராட்டு விழா நடைபெற விருப்பதை யறிந்து பெருமகிழ்ச்சியடைந்தோம்.

இங்கு சிவபெருமான் தான்தோன்றி ஈஸ்வரர் என்ற திருநாமத்துடன் அருள்பாலித்து வருகிறார். ஆம் அவர் ஒரு தான்தோன்றியே ஏனென்றால், மற்ற எல்லாமும் அவரால் தோற்றுவிக்கப்படுகின்றன. அவர் வேறு யாராலும் தோற்றுவிக்கப்படுவதில்லை. எனவே தான் அவர் தானே தோன்றீசுவர் சுயம்பு என்று அழைக்கப்பெறுகிறார்.

நாம் நமக்குத் தோன்றியபடியெல்லாம் செயல்பட முடியாது. இயற்கையின் நடைமுறைகளுக்கொப்பவே செயல்படமுடியும். கடவுள் அப்படிப்பட்டவர் அல்ல. அவர் தனக்குத் தோன்றும்போது உலகத்தைப் படைப்பார். தனக்குத்தோன்றியபடியே படைப்பார். தனக்குத்தோன்றியபடி அதைக்காப்பாற்றுவார். தனக்குத்தோன்றும் பொழுது அதை அழிக்கவும் செய்வார். எனவே தனக்குத்தோன்றியவாறெல்லாம் செய்யக்கூடிய தான் தோன்றி என்று சிவபெருமானை அழைப்பது முற்றிலும் சரியே.

அப்படிப்பட்ட எல்லாம் வல்ல இறைவனை மறந்து நாம் தான்தோறியாக மனம்போன போக்கில் சென்று துன்பத்தை வரவழைத்துக் கொள்ளலாமா? கூடாது. 'அன்பே சிவம்' என்பதனை உணர்ந்து தீவினைகளை விலக்கவேண்டும். நல்வினைகளையே புரிய வேண்டும். இப்பிறவியிலும், முற்பிறப்பிலும் நாம் அறிந்தும் அறியாமலும் செய்த தீவினைகள் நீங்க இறைவனிடம் பிரார்த்திக்க வேண்டும். காதலாகிக்கசிந்து கண்ணீர் மல்கி அவருடைய திருநாமத்தை, திருமந்திரத்தை ஜபம் செய்யவேண்டும். அவ்ருடைய ஆலயத்துக்குச்சென்று முறைப்படி தரிசனம் செய்ய வேண்டும். ஆலயங்களை நன்கு பேணி தூய்மையாகப் பாதுகாக்கவேண்டும். அங்கு இறைவனின் சான்னித்தியம் குறையா வண்ணம் நித்தியநைமித்திக வழிபாடுகள் சிறப்புற நடக்க ஆவன செய்யவேண்டும். அப்பொழுதுதான் நாமும் உலகமும் நன்மையடைய முடியும். இதுவே நம் ஒவ்வொவருடைய தலையாய கடமையும் ஆகும்.

இதனை நன்கு உணர்ந்து இத்திருப்பணியில் ஈடுபட்டிருக்கும் அன்பர்கள் அனைவருக்கும் எல்லா நலன்களையும் அள்ளி வழங்குமாறு எல்லாம் வல்ல இறைவனை பிரார்த்திக்கிறோம்.

ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ சுந்தரேஸ்வரர் துணை.

உ

சிவமயம்

# ஸ்ரீ நிரம்பவழகியராதீன மடம்,

## துலாவூர், குன்றக்குடி வழி.

ஸ்ரீமான், அன்புள்ள இலுப்பக்குடி நகரத்தார் அவர்களுக்கு ஆசீர்வாதம் செய்து எழுதிய திப்பவும். தாங்கள் அனுப்பியிருந்த 22-1-85ம் தேதி கடிதமும் கும்பாபிஷேகப் பத்திரிகையும் வந்து சேர்ந்தது. மிக்க மகிழ்ச்சி.

நாமும் நமது குடும்பமும் நலமடைவதற்காக நாம் வீட்டில் செய்யும் வழிபாடு ஆத்மார்த்த பூஜை எனப்படும். அதுபோல் ஊரும் உலகமும் நலம் பெற்று வாழவும் வானவரும் பசுக்களும் வேந்தனும் சிறந்து விளங்கவும் மாதம் மும்மாரி பெய்து, பஞ்சம் வெள்ளம் போன்ற தீமைகள் நீங்கி நன்மைகள் பெருகவும் செய்யப்படும் வழிபாடு பரார்த்த பூஜை எனப்படும். பரார்த்த பூஜை செய்வதற்கு ஆலயம் வேண்டும். அந்த ஆலயம் ஆகம சாத்திர விதிப்படி அமைய வேண்டும். அவ்வாறு அமைந்த இலுப்பைக்குடியில் கோவில் கொண்ட ஸ்ரீ சௌந்தர நாயகி சமேத தான்றோன்றீசர் ஸ்ரீ வயிரவமூர்த்திகளுக்கு, பிராணப் பிரதிஷ்டை செய்யும் பொழுது ஆயிரக்கணக்கான பக்தர்கள் கூடி இறைவனைப் பிரார்த்திக்கும் பொழுது இறைவன் அந்த மூர்த்திகளில் ஸான்னித்தியம் கொண்டு பக்தர்களுக்கு அருள்பாலிக்கின்றான். எனவே ஆலயங்கள் பவர்ஸ்டேஷன் போன்றவை. அவற்றிலிருந்து நாம் சக்திகளைப் பெற முடியும். அந்த சான்னித்தியம் குறைவு படாமலிருக்கும் பொருட்டு அவ்வப்பொழுது ஜீர்ணோத்தாரண கும்பாபிஷேகத்தை தரிசனம் செய்தாலே பாவம் நீங்கி இறையருளைப் பெறலாம். கோபுர தரிசனம் பாப விமோசனம், எனவே இந்த சிறந்த திருப்பணியை சிறப்பாகச் செய்து வரும் நமது நகரத்தார் அன்பர்கள் எல்லோரும் மேன்மேலும் புகழும் தீர்க்க ஆயுளும் சகல ஐசுவர்யங்களும் பெற்று வாழ வேண்டும் என்று நகரத்தார் பெண்கள் குரு முதல்வர் ஸ்ரீ நிரம்பவழகிய தேசிக சுவாமிகள் திருவருளைச் சிந்தித்து வாழ்த்துகிறோம்.

இங்ஙனம்
பா. ஞானப்பிரகாச தேசிகர்.
இளவரசு
துலாவூர் மடம்.
குன்றக்குடி வழி.
PIN. 623 206.

உ

ஆதிபகவன் முதற்றே உலகு

# குருபழநி ஆதீனம், திருக்குறள் பீடம்

குருகுலம், மதுராந்தகம்-603 306

நிறுவனர் :- சிவத்திரு. அழகரடிகள்

திரு நிருவாகி அவர்கள்

அருள்மிகு சவுந்தரநாயகி உடனுறை

அருள்மிகு தான்தோன்றீசுவரர் நகரத்தார் திருக்கோயில்

இலுப்பைக்குடி.

அன்புடையீர்,

திருவருளால் திருக்குடமுழுக்கு நன்னீராட்டுப் பெருவிழா அழைப்பிதழ் கிடைக்கப் பெற்றோம். மகிழ்ச்சி.

சைவ சமயமும் திருக்கோயில்களும் இன்றுவரை நன்கு விளங்குவதற்கு (நாட்டுக்கோட்டை) நகரத்தார் முக்கிய காரணமாவார்கள். கல்வி நலத்திலும் அவர்கள் கருத்தூன்றி வருவது நாட்டு நலனுக்கு அடிப்படையாக விளங்குவது எல்லாரும் அறிந்த ஒன்று.

சைவ சமயம் வாழ வளரத் திருமடங்கட்கு ஈடாக ஏன்? முதன்மையாகக் கூட நகரத்தார் செயல்படுவது குறிப்பிட்டு மகிழ்வதற்கு உரியது.

நகரத்தார் சமயத் தொண்டும் கல்வித் தொண்டும் மேலும் சிறக்க வேண்டும்.

இலுப்பைக்குடி நகரத்தார் திருக்கோயிலான அருள்மிகு சவுந்தரநாயகி உடனுறை அருள்மிகு தான்தோன்றி ஈசர் மகா கும்பாபிஷேக விழா சிறக்க நிறைவுறவும் ஈகைத் திறத்தினில் சிறந்த நீரார் ஆன நகரத்தார் தொண்டு வளரவும்

" வாள்ஆர்கண் செம்துவர்வாய் மாமலையான் தன்மடந்தை
தோள் ஆகம் பாகமாகப் புல்கினான்'' தான்றோன்றீசன்

இணையடிகளை இறைஞ்சி 'ஆதிபகவனை' வந்தித்து வாழ்த்துகின்றோம்.

நலமெலாம் பெற்று வாழ்க நகரத்தார்
வேண்டும் இன்ப அன்பு.

உ

ஸ்ரீ சுவர்ண காளீஸ்வரர் துணை



# AL. AR. SM. Narayanan Chettiar

**PALACE, DEVAKOTTAI-623 302.**

கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம் என்னும் முதுமொழியை சிரமேற்கொண்டு தாங்கள் வாழும் பகுதிகள் தோறும் கோயிலைக் கட்டிய பெருமை உடையோர் நகரத்தார்கள். ரிஷிகளைத் தங்கள் குடிக்கு முதன்மையாக்கி அந்தணர் வாழ்கின்றனர். ஆனால் நகரத்தார்களோ கோயில்களின் பெயர்களையே தங்கள் குடிக்குச் சூட்டி வாழும் மாண்பு சொல்லுதற்கு அரியது.

அத்தகைய நவரத்தினங்களில் ஒன்றான இலுப்பைக்குடியில் நகரத்தார்கள் ஒன்றுகூடி அண்மையில் ராஜகோபுரம் எழுப்பி ரக்தாட்சி ஆண்டு தைத்திங்கள் இருபத்தாறும் நாள் மகாகும்பாபிஷேகம் செய்வது பாராட்டுதற்குரியது.

செய்க்கிட்ட உரமும் சிவனுக்குச் செய்த பணியும் ஒருபோதும் வீண்போவதில்லை. இலுப்பைக்குடி நகரத்தார் எல்லாரும் இணைந்து சிறப்புற்று வாழ எல்லாம் வல்ல ஸ்ரீ சௌந்தரநாயகி உடனுய தான்தோன்றீசுவரர் திருவருளை வழுத்துதும்.

அன்பன்,

**நாராயணன்**

உ

சிவமயம்

ஸ்ரீ வயிரவமூர்த்தி துணை









# இலுப்பைக்குடி நகரக் கோவில்

## ஸ்ரீ சௌந்தரநாயகி சமேத தான்தோன்றி ஈசர் ஸ்ரீ வயிரவமூர்த்தி

## திருக்கோயில் ஜீர்ணோத்தாரண அஷ்டபந்தன

# மகா கும்பாபிஷேகப் பத்திரிகை

### சுந்தர விநாயகர் துதி

பூமேவுநான் முகனும் மாமேவு
மார்பினனும் புலவோர் தாமும்
தூமேவுமேனேருஞ் சென்னி மிசைக்கரங்
குவித்துத் தாழ்ந்து நின்று
பாமேவுதுதியி னிடுங்குட்டுகள் கொண்டுட்டு
களைப்பாற்றுந்தெய்வக்
காமேவுமதுகபுரச் சுந்தர விநாயகனருள்
கருதி வாழ்வாம்

### சுப்பிரமணியர் துதி

பங்கயற்சிறையிட் டெல்லாம் படைத்து
விண்ணவரைக் காத்து
வெங்கொடுஞ்சூரன் முன்னுமிண்டரைச்
சங்கரித்துத்
தங்குமுத்தொழிலுஞ் செய்து தானேமும்
மூர்த்தியாகி
எங்கணு நிறைந்த செவ்வேள் யிணையடி
முடிமேல் வைப்பாம்

### வயிரவ மூர்த்தி துதி

ஒருகையி லுடுக்கும் மற்றையொரு கையினுக
பாச
மொருகையின் முத்தலைச் சூலொரு கையிற்
கபாலங் கொண்டே
இருகையுங்கு ரைப்பாமோத்தை யிசைக்கு
நாய்சூழவில்வ
மிருகையுஞ் சூழ்வனத்திலியல் வயிரவன்ருள்
போற்றி

### தான்றோன்றியீசர் துதி

சீர்கொண்ட செஞ்சடையிற் பிறையிரண்
டென்ன நிழறெரிக்குங் கங்கை
நீர்கொண்டு புதுமதுரத் தேன்றுளித்து
நறியமண நிறைக்குங் கொன்றைத்
தார்கொண்டு தண்ணளியே தன்னடியார்க்
கருள் குறிப்பைத் தந்து வாழு
மேர்கொண்ட மதுகபுரத் தான்றோன்றி
யீசன்று ளிணைகள் போற்றி

### சௌந்திரநாயகி துதி

பார்பூத்த பலவுயிரும் படைத்தானைப்
படைத்தானே பாகம் பற்றும்
பேர்பூத்த வலத்தானே வலத்தானுக்கிய
பெருமை பெற்றிட் டாளைக்
கார்பூத்த மதுக்கமலங் கடுக்குமெனக் கருணை
பொழி கடைக்கண் ணாளைச்
சீர்பூத்த இலுப்பை நகர் சவுந்தரிய நாயகியைச்
சிந்தை செய்வாம்

அன்புடையீர்,

பரங்கருணைத் தடங்கடலாகிய சிவபெருமான் ஆன்மாக்கள் தம்மை வழிபாடு செய்து உய்யும் பொருட்டுத் திருக்கோவில் கொண்டு எழுந்தருளியிருக்கும் திருத்தலங்கள் பலவற்றுள் மங்கலப் பாண்டி வளநாட்டின் கண், மகுட தனவணிக நாட்டுக்கோட்டை நகரத்தார்களின் திருப்பணி-பரிபாலனம் ஆகியவற்றால், இன்றைக்கு ஆயிரத்து முந்நூறு ஆண்டுகளுக்கு முன்பிருந்தே, சீரும் சிறப்புமாக விளங்கிவரும் ஒன்பது திருக்கோயில்களுள் இலுப்பைக்குடித் திருத்தலமும் ஒன்று. இங்கு எழுந்தருளியுள்ள ஸ்ரீ தான்றோன்றி ஈசரையும், ஸ்ரீ சௌந்தர நாயகியையும், பிரமதேவர், வேதங்கள், கிருஷ்ணர், கொங்கணச் சித்தர், திரிபுவன மாமன்னர், அதிவீரபாண்டியர் முதலியோர் பூசித்துப் பேறுபெற்றதாகப் புராண வரலாறு கூறுகின்றது. ஔவைப்பிராட்டியால் பந்தன் அந்தாதி பாடப் பெற்ற நம் நகரத்தார் மரபில் தோன்றிய பந்தன் வழிவந்த, தனபதி என்பவருக்குக் கனவில் தோன்றி இறைவன் "சூடாமணி" ஒன்றை வழங்கி, இத்திருத்தலத்தில் சிவபுண்ணியங்களைச் செய்யக் கட்டளையிட்டதால் இத்திருத்தலத்துக்கு "சூடாமணிபுரம்" என்ற பெயரும் இறைவன் வலிய ஆட்கொண்டு புகலிடங் கொடுத்தமையால் இத்திருத்தல உரிமை பெற்ற நகரத்தார்களுக்குப் "புகலிடங் கொடுத்த பட்டினத்தில் சூடாமணிபுரம் உடையார்" என்ற பெயரும் வழங்கி வருகின்றன. கைலாய பதியின் கட்டளையை ஏற்றுக் காளியாகி, முண்டாசுரனைக் கொன்ற உமாதேவி சௌந்தரநாயகியாகி இத்திருத்தலத்துக்கு வந்து தான்றோன்றி ஈசரைப் பூசித்து ஒரு சித்திரைச் சோம வாரத்தில்

அவ்வரை மணந்து கொண்டார். இந்திரன், பிரமன், திருமால் ஆகியோரின் விண்ணப் பத்தை யேற்று, அநுக்கிரக மூர்த்தியாகிய தான்தோன்றீசர் நிக்கிரகாநுக்கிரக மூர்த்தி யாக வயிரவக்கோலம் பூண்டு கும்பாண்டகன் என்னும் அசுரனை அழித்து இங்கே எழுந்தருளி யிருக்கிறார். இரசவாதத்தால் இரும்பை ஆயிர மாற்றுத் தங்கமாக்கப் பல இடங்களுக்குச் சென்று பலவாறாக முயன்ற கொங்கணச் சித்தருக்கு, இத்திருத்தலத்தில் இறைவன் பல்லாயிரம் மாற்றுப் பொன்னொளியுடைய வராகக் காட்சிதர, அவர் இரசவாத ஆசை நீங்கி, ஓடும் செம்பொன்னும் ஒக்கநோக்கும் மெய்யறிவைப் பெற்றார். மூர்த்தி தலம் தீர்த் தங்களால் சிறப்பு வாய்ந்த இவ்விலுப்பைக் குடித் திருக்கோயில் சிறந்த முறையில் பழுது பார்க்கப் பெற்றும் இராஜகோபுரம் புதிதாக அமைக்கப் பெற்றும் நிறைவெய்தி இருக்கிறது. ஸ்ரீ சௌந்தரநாயகி உடனாய தான்தோன்றி ஈசுவரருக்கும், ஸ்ரீ வயிரவமூர்த்தி, பரிவார தேவர்களுக்கும் நிகழும் ரக்தாக்ஷி ஆ தைமீ 26உ (8-2-85) வெள்ளிக்கிழமை உத்தர நட்சத் திரம் சித்தயோகம் கூடிய நன்னாள் உதயாதி நாழிகை 15க்கு மேல் 17½ நாழிகைக்குள் (பகல் 12 to 1 மணி) மகாகும்பாபிஷேகம் நடைபெறவிருக்கிறது.

| 1985 ஆ | ரக்தாக்ஷி ஆ | கிழமை | நேரம் | விவரம் |
|---|---|---|---|---|
| பிப்ரவரி 3 | தைமீ 21 | ஞாயிறு | பகல் 11-45 மணி | அனுக்ஞை, விக்னேஸ்வர பூஜை, தனபூஜை |
| ,, 4 | ,, 22 | திங்கள் | இரவு 8 மணி<br>இரவு | கலாகர்ஷணம்<br>முதல் கால யாக பூஜை |
| ,, 5 | ,, 23 | செவ்வாய் | காலை<br>மாலை | இரண்டாம் கால யாக பூஜை<br>மூன்றாம் கால யாக பூஜை |
| ,, 6 | ,, 24 | புதன் | காலை<br>மாலை | நான்காம் கால யாக பூஜை<br>ஐந்தாம் கால யாக பூஜை |
| ,, 7 | ,, 25 | வியாழன் | காலை<br>மாலை | ஆறாம் கால யாக பூஜை<br>ஏழாம் கால யாக பூஜை |
| ,, 8 | ,, 26 | வெள்ளி | காலை<br>பகல் 12 மணிக்கு மேல் 1 மணிக்குள்<br>மாலை 5 மணி<br>இரவு | எட்டாம் கால யாக பூஜை<br>மகா கும்பாபிஷேகம்<br>மகாபிஷேகம்<br>பஞ்சமூர்த்திகள் திருவீதியுலா |

வேத பாராயணம் - தேவார இன்னிசை - நாதசுரம் இசை நிகழ்ச்சிகள் நடைபெறும்.
சிவநேசச்செல்வர்கள் அனைவரும் வந்து தரிசித்து இம்மை மறுமைப் பேறுகளைப் பெற்றுய்ய வேண்டுகிறோம்.

இலுப்பைக்குடி
12—12—84

அன்புள்ள,
இலுப்பைக்குடிக் கோவில் நகரத்தார்

# நகரக்கோவில் இறைவன் இறைவியர்

டாக்டர். அர. சிங்காரவடிவேலன்

**காப்பு-மரகதவிநாயகர்**

ஒன்பான் நகரத்தார் ஓங்கு திருக்கோவில்
முன்பார்க்க வீற்றிருக்கும் மூர்த்திகளை — வெண்பாவாம்
மாலையிட்டுப் போற்ற மரகதப் பிள்ளாய்நீ
கோலை எடுத்துக் கொடு.

**முருகப்பெருமான்**

மாவின் கனியை மறுத்ததனுல் பெற்றோர்மேல்
மேவும் சினப்படியில் மேலேறிக் — கூவும்
மயில்மீதும் ஊர்ந்தவனே! மாம்பழமே! பெற்றோர்
ஒயிலை உரைக்க உதவு.

**தோற்றுவாய்**

எல்லாம் சிவமே; இயக்கும் உமையைத்தான்
வல்ல துணையாய் வகுத்துள்ளார் — பல்லூர்க்குத்
தக்க பெயரிட்டுத் தாபித்த தெய்வங்கள்
துக்கம் தவிர்க்கும் துணை.

**இளையாற்றங்குடி கயிலாசநாதர்-நித்திய கல்யாணி**

இளையாமல் தங்குடியை எந்நாளும் காக்க
மலையாக நம்பும் மனத்தில் — நிலையாய்க்
கயிலாச நாதருடன் கல்யாணி அம்பாள்
ஒயிலாக நிற்பாள் உவந்து.

**மாற்றூர்க்கோவில்-ஐந்நூற்றீசர்-பெரியநாயகி**

ஆயிரத்தில் பாதியவர்; ஐந்நூற்றூர்; மாபெரிய
நாயகியார் அன்னாரின் மாதேவி — போயினிமேல்
வேற்றூரில் சுற்றி வினையைப் பெருக்காமல்
மாற்றூர்க்கே செல்வீர் மகிழ்ந்து.

(அடுத்தப் பக்கம் பார்க்க)

### வயிரவன்கோவில்-வளரொளிநாதர் வடிவுடையம்மை

வளரொளியார் வார்க்க வடிவுடையாள் தாங்கத்
தளர்வின்றி வாழ்கின்ற தக்கோர் — உலகில்
வயிரம் கொழிக்க வளரினத்தார் தம்முள்
வயிரவன் கோவில் வகை.

### இரணியூர்-ஆட்கொண்டநாதர்-சிவபுரந்தேவி

ஆட்கொண்ட நாதருடன் அம்பாள் சிவபுரத்தாள்
பாக்கொண்டு நித்தம் பணிவோரைக் — காக்கத்
தரணியிலே வந்துறையும் தக்கதிருக் கோவில்
இரணியூர் என்றே இயம்பு.

### பிள்ளையார்பட்டி-திருவீசர்-சிவகாமவல்லி
### மருதீசர்-வாடாமலர்மங்கை

திருவீசர்; தேவி சிவகாமவல்லி
மருதீசர் என்போமேல் வாடா மலர்மங்கை
என்று பெயரிரண்டை ஏற்றவரைப் பிள்ளையார்
கன்றுவளர் பட்டியிலே காண்.

### நேமங்கோவில்-ஜெயங்கொண்ட-சோழீசர் சவுந்தரநாயகி

ஐயன் ஜெயங்கொண்டார் அம்மை சவுந்தரத்தைப்
பையச் சிரித்தே பயன்கொண்டார் — வையத்தார்
சேமம் தினம்கண்டார் செல்வம் கொழிக்கின்றார்
நேமந்தான் கோவில் நெறி.

### இலுப்பைக்குடிக்கோவில்-தான்தோன்றிஈசர் சவுந்தரநாயகி

தான்தோன்றி ஈசர் சவுந்தர நாயகியார்
வான்தோய என்றும் வளர்கோயில் — மீன்பாய
ஏடு மலரும் இலுப்பைக் குடி; நாட்டின்
சூடா மணியென்றே சொல்.

### சூரைக்குடி-தேசிகநாதர்-ஆவுடையநாயகி

தேசு திகழ்கின்ற தேசிக நாதருடன்
ஆசி மழைபொழியும் ஆவுடையாள் — நாசியெனப்
பாரை வளர்த்துவரும் பக்தி வளர்கோவில்
சூரைக் குடியைத் தொழு.

### வேலங்குடி-சண்டீசர்-காமாட்சி

வண்டுவிழிக் காமாட்சி வாழ்வருளும் சண்டீசர்
கொண்டாடும் அன்பர் குலம்காக்கச் — செண்டாகக்
காலமெலாம் தோன்றிக் கருணை தரும்கோயில்
வேலங் குடியாம் விளக்கு.

# இலுப்பக்குடி தான்தோன்றீஸ்வரர் உடனுய
# சௌந்தரநாயகி அம்மன் திருக்கோவில்
# நன்னீராட்டு விழா



நிகழ்ச்சி நிரல்

879

சிவமயம்

அன்புடையீர்,

எல்லாம் வல்ல அருள்மிகு தான்தோன் றீஸ்வரர் உடனுய செளந்தரநாயகி அம்மன் திருக்கோவில் திருப்பணி வேலைகள் நிறை எய்தி புதியதாக ஐந்து நிலை கொண்ட ராஜகோபுர மும் நிர்மாணிக்கப் பெற்று ரக்தாட்சி ஆண்டு தைத் திங்கள் 21ம் நாள் (3—2—85) ஞாயிறு யாகசாலை ஆரம்பித்து 26ம் நாள் (8—2—85) வெள்ளி காலை திருக்கோவிலின் திருக்குட நன்னீராட்டு விழாவும், அதை யொட்டிய கலை நிகழ்ச்சிகளும் நடைபெற இருக்கின்றன. அனை வரும் அனைத்து நிகழ்ச்சிகளிலும் கலந்து கொண்டு இறைவனின் அருள் பெற்று உய்யு மாறு அன்புடன் அழைக்கின்றோம்.

இலுப்பக்குடி நகரத்தார்

## யாகசாலை விபரங்கள்

பிப்ரவரி 3 தை மீ 21 ஞாயிறு

| | |
|---|---|
| பகல் 11-45 மணி | —அனுக்ஞை, விக்னேஸ்வர பூஜை, தன பூஜை. |

பிப்ரவரி 4 தை மீ 22உ திங்கள்

| | |
|---|---|
| இரவு 8 மணி | —கலாகர்ஷணம் |
| இரவு | —முதல் கால யாக பூஜை |

பிப்ரவரி 5 தை மீ 23உ செவ்வாய்

| | |
|---|---|
| காலை | —இரண்டாம் கால யாக பூஜை |
| மாலை | —மூன்றும் கால யாக பூஜை |

பிப்ரவரி 6 தை மீ 24உ புதன்

| | |
|---|---|
| காலை | —நான்காம் கால யாக பூஜை |
| மாலை | —ஐந்தாம் கால யாக பூஜை |

பிப்ரவரி 7 தை மீ 25உ வியாழன்

| | |
|---|---|
| காலை | —ஆறும் கால யாக பூஜை |
| மாலை | —ஏழாம் கால யாக பூஜை |

பிப்ரவரி 8 தை மீ 26உ வெள்ளி

| | |
|---|---|
| காலை | —எட்டாம் கால யாக பூஜை |

பகல் 12 மணிக்குமேல்

| | |
|---|---|
| 1 மணிக்குள் | —மகா கும்பாபிஷேகம் |
| மாலை 5 மணி | —மகாபிஷேகம் |
| இரவு | —பஞ்சமூர்த்திகள் திருவீதியுலா |

## இலுப்பக்குடி கோவில் கும்பாபிஷேகத்தில் கலந்துகொள்ளும் ஓதுவா மூர்த்திகள்

தேவார இன்னிசை வேந்தர்
திரு. து, சோமசுந்தர தேசிகர் அவர்கள் திருவாவடுதுறை

இன்னிசை மாமணி
திரு. திருஞானசம்பந்தம் அவர்கள் சீர்காழி

தமிழ்மறை பண்மணிகள்
T. M. விஸ்வலிங்கம் சபாபதி சகோதரர்கள் திருவாவடுதுறை
நாருயண ஓதுவார் அவர்கள் காரைக்குடி

முத்தையா ஓதுவார் அவர்கள் மதுரை

திருஞானசம்பந்தம் அவர்கள் திருப்பரங்குன்றம்

ராமச்சந்திர ஓதுவார் அவர்கள் விருத்தாசலம்

S. A. கோபாலன் அவர்கள் சிதம்பரம்
(புல்லாங்குழல்)

N. S. S. சுவாமிநாதன் அவர்கள் மதுரை
(பிடில்)

அனந்தகிருஷ்ணன் அவர்கள் மதுரை
— (மிருதங்கம்)

தைத் திங்கள் 24உ 6—2—85 புதன்கிழமை

நேரம்: மாலை 6 மணி மங்கல இசை

## பாலர் கவியரங்கம்

பொருள்: ''ஐம்பெருங்கடவுளர்''

தலைவர்:

செல்வன் சபா. அ.ந. சிவமணி

வரவேற்பு:

செல்வன் ச. மீனாட்சிசுந்தரம்

பிள்ளையார்—

செல்வன் அரு. தவராசன்

முருகன்—

செல்வன் அரு. அண்ணாமலை

சிவபெருமான்—

செல்வி கா. சிநேகவல்லி

பார்வதி—

செல்வி அ.ந. சோ. மங்கையர்க்கரசி மீனாட்சி

சண்டீசர்—

செல்வன் அரு. காளத்திநாதன்

## கருத்தரங்கம்

தலைவர்:

பழ. முந. ரத்தினம் செட்டியார்

பொருள்: காப்பிய நோக்கில்
திருவிளையாடற் புராணம்
—டாக்டர் தமிழண்ணல்

பொருள்: காப்பிய நோக்கில்
பெரிய புராணம்
—டாக்டர் சுப. அண்ணாமலை

தைத் திங்கள் 25உ (7—2—85) வியாழக்கிழமை

நேரம்: மாலை 6 மணி

கும்பாபிஷேகமும் வழிபாட்டுப் பயனும்
என்ற தலைப்பில்
ஸர்வ சாதகம் திருக்கோலக்கா
ராமநாத சிவாச்சாரியார்
உரையாற்றுவார்கள்

நேரம்: இரவு 7 மணி

## பட்டி மண்டபம்

பொருள்: செயற்கரிய செய்தாரில் சிறந்தார்
மனுநீதிச்சோழனே
சிறுத்தொண்டரே

நடுவர்: பேராசிரியர் கண. சிற்சபேசன்

மனுநீதிச் சோழனே

பேராசிரியர் பா. நமசிவாயம்
பேராசிரியர் வ. தேனப்பன்
பேராசிரியை சி. எஸ். விசாலாட்சி
பேராசிரியர் மா. கண்ணப்பன்

சிறுத்தொண்டரே

பேராசிரியர் சோ. சத்தியசீலன்
டாக்டர் கரு. முத்தையா
புலவர் அ. மணிமேகலை
புலவர் சோம. சிவப்பிரகாசம்

தைத் திங்கள் 25உ (7—2—85) வியாழக்கிழமை

நேரம்: இரவு 10 மணி

## பரதநாட்டியம்

சென்னை ஸ்ரீ சண்முகாநந்தா
பரதநாட்டியப் பள்ளி மாணவிகள்
'நாட்டிய கலாமணி',
'நாட்டிய திலகம்', 'நடன கலைஅரசி'
செல்வி AR. சிகப்பி
(தேவகோட்டை முத்து. க. அ. லெ. அ.மகள்)

'நாட்டிய கலாமணி'
செல்வி **A. சிவகாமி**
தேவகோட்டை முத்து. க. அ. லெ. அ. ந.
அண்ணாமலை மகள்)

தைத் திங்கள் 26உ (8—2—85) வெள்ளிக்கிழமை

நேரம்: காலை 10 மணி

## கவியரங்கம்

தொடக்கவுரை:

மதுரை அருள்மிகு மீனாட்சி சுந்தரேஸ்வரர்
திருக்கோவில் தக்கார்
திரு. **V. N. சிதம்பரம் செட்டியார்**

பொருள்: 'வழிபாட்டுப் பொருள்கள்'

தலைவர்: பேரசிரியர்
டாக்டர் **அர. சிங்காரவடிவேலன்**

தேங்காய்
பொற்கிழிக்கவிஞர்
**அரு. சோமசுந்தரம்**

பழம்
டாக்டர் **சபா. அருணாசலம்**

மலர்
பொற்கிழிக்கவிஞர்
**சொ. சொ. மீ. சுந்தரம்**

வெற்றிலைப்பாக்கு
கவிஞர் **நா. மீனவன்**

கற்பூரம்
கவிஞர் **சேது. அருணாசலம்**

பிரசாதம்
செல்வி **கவிதாரமணி**

தைத்திங்கள் 26உ (8—2—85) வெள்ளிக்கிழமை

நேரம்: மாலை 4 மணி

## நாதஸ்வர கச்சேரி

தமிழக அரசவைக் கலைஞர்கள்
மதுரை **M. P. N. சேதுராமன்**
**M. P. N. பொன்னுசாமி**
குழுவினர்

கலைமாமணி தஞ்சாவூர்
**T. R. கோவிந்தராஜன்**
இசைமாமுரசு தேவாரண்யம்
**V. G. பாலசுப்ரமணியம்**
ஸ்பெஷல் தவுல்

## இலக்கியப் பேருரை

நேரம்: மாலை 6 மணி
பேராசிரியை **சரஸ்வதி ராமநாதன்**
பொருள்: 'காரைக்காலம்மையார்'

தைத்திங்கள் 26உ (8—2—85) வெள்ளிக்கிழமை

நேரம்: இரவு 7-30 மணி

## இன்னிசைக் கச்சேரி

ஜனாதிபதி விருதுபெற்ற
திருமதி **M. R. விஜயா** குழுவினர்

தொடர்ந்து

அன்னியூர் **A. P. ஷண்முகம்** குழுவினரின்
கரகம் காவடி நிகழ்ச்சி நடைபெறும்



ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி துணை

ஸ்ரீலஸ்ரீ

# சத்குரு திருச்சி சுவாமிகள்

கைலாச ஆச்ரமம், ராஜராஜேஸ்வரி நகர்

**கெஞ்சனஹல்லி-பெங்களூர்**

நமது புராதனமான மதத்தைப் பரப்பவும் பக்தியைப் பெருக்கவும் ஆசாரங்களையும் புராதன கலாசாரத்தையும் பாதுகாக்கவும் கோவில்களைக் கட்டவும் துறவிகளை ஆதரிக்கவுமே சக்தியால் படைக்கப் பட்டது நகரத்தார் சமூகமே.

நமக்கு முப்பது ஆண்டுகளாக இலங்கையிலும் இந்தியாவிலும் மலேசியா சிங்கப்பூரிலும் நகரத்தார் தொடர்பு உண்டு. அவர்கள் எல்லா ஊர்களிலும் செய்து வரும் திருப்பணிகளை பாராட்டியும் ஆசீர்வதித்தும் வந்திருக்கிறோம்.

ஸ்ரீ சௌந்தரநாயகி சமேதராக ஸ்ரீ தான் தோன்றி ஈசுவரர் இலுப்பக்குடியில் எழுந்தருளி நகரத்தார்களுக்கு அபயம் அளித்து வருவதால் அங்கு உள்ள நகரக் கோயிலையும் பரிவார தேவதைக் கோயில்களையும் மிகவும் பெரிய செலவில் புதுப்பித்தும் புதிதாக ராஜகோபுரம் கட்டியும் கும்பாபிஷேகம் நடத்துவதை அறிந்து சந்தோஷப்படுகிறோம். அவர்களுடைய முயற்சி இனிது நிறைவேறவும் வாழ்த்துகிறோம்.

சிறப்புமிக்க இலுப்பக்குடிக் கோயில் மற்றும் எல்லா நகரத்தார்களும் என்றென்றும் வளமாய் வாழ ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி திருவருளை வேண்டுகிறோம்.

ஓம் சக்தி

உ

சிவமயம்



**Dr. M. A. M. Ramaswamy,** B.A., D. LITT.,

CHETTINAD HOUSE

RAJAH ANNAMALAIPURAM

MADRAS-600 028

திரு, எல். சோமு அவர்கள்,

மலர்க்குழு தலைவர்

இலுப்பக்குடி

இலுப்பக்குடி கோவில் நகரத்தார்கள் முயற்சியால் அருள்மிகு சௌந்தரநாயகி அம்பாள் சமேத தான்தோன்றி ஈஸ்வரர் திருக்கோவிலுக்கு சமீபத்தில் நடைபெற இருக்கும் ராஜகோபுரத்துடன் கூடிய திருக்குட நன்னீராட்டு விழா நிகழவிருப்பதை அறிந்து மிக்க மகிழ்ச்சியடைகிறேன்.

நமது நகரத்தார்கள் தமிழகமெங்கும் செய்து ரும் கும்பாபிஷேகங்களும் கோவில் திருப்பணிகளுமே நமக்குக் கிடைத்த பெரும் பாக்கியமாகக் கருதி பெரு மகிழ்ச்சியுடன் செய்து வருகிறோம். அதுபோல் இலுப்பக்குடி நகரத்தார்கள் பெருமுயற்சியால் இப்போது செய்து வரும் வரலாற்றுச் சிறப்புமிக்க பணி, காலங் காலமாய் போற்றி வணங்கவும் வருங்கால சந்ததியினர் பின்பற்றி மேன்மேலும் ஆத்தீகத்தை வளர்க்கவும் பெரும் உதவியாக இருக்கும்.

கும்பாபிஷேகம் எல்லா வகையிலும் சிறப்பாக அமைய அருள்மிகு சௌந்தரநாயகி அம்பாள் சமேத தான்தோன்றி ஈஸ்வரர் பாரத கமலங்களில் என் வணக்கத்தைச் சமர்ப்பித்துக் கொள்கிறேன்.

உ

சிவமயம்

பாலரூவராயர் துணை

''தருமபுர ஆதீன வித்துவான், திருவண்ணாமலை, ஆதீன விரிவுரையாக,
மதுரை ஆதீனச் சித்தாந்த சைவ வித்தகர், சித்தாந்தப்புலவர் மாமணி,
பெரும்புலவர், பாலகவி''

**வயிநாகரம் வே. இராமநாதன் செட்டியார்**

**தத்புருஷதேசிகர்,**

பாலரூவாயர் நிலையம், சம்பந்தர் தெரு,

**தேவகோட்டை.**



# வாழ்த்து

மான்றேன்று கருணைவிழிச் சவுந்தரநா
யகியொருபான் மருவ வைத்த
தான்றேன்றி நாதரிரு சரணமுடி
மிசைவைத்த தகுதி மிக்கார்
வாண்றேன்று பொழிவிலுப்பைக் குடிக்கோயி
லுரிமைகொண்ட வணிகர்க் கெல்லாந்
தேன்றேன்று மினிமைகுன்றுப் பெருவாழ்வு
தினமோங்கிச் சிறக்க மன்றே நலமே தழைக.

உ

# திருக்குட நன்னீராட்டு விழா

திருக்குட நன்னீராட்டை முன்னிட்டு 6—2—85-ம் தேதி நடைபெற்ற திருத்தரங்கத்தில் முரு. பழ. இரத்தினம் செட்டியார் அவர்களுடைய சொற்பொழிவிலிருந்து,

பேரன்புமிக்க நகரத்தார் பெருமக்களே அன்பர் டாக்டர் சுப. அண்ணாமலை அவர்களே அன்பர் முத்தப்பன் அவர்களே மெய்யன்பர்களே இன்றைய தினம் இலுப்பக்குடி தான்தோன்றி ஈசுவரருடைய கும்பாபிஷேக விழா துவங்கு கிறது. யாகசாலை இன்று ஆரம்பித்திருக்கின்றது வெள்ளிக்கிழமை 12 மணிக்குமேல் 1 மணிக்குள் குடமுழுக்கு நடைபெறப்போகின்றது. இலுப் பக்குடி நகரத்தார்களாகிய உங்களுக்கு ஒரு மந்திரம். அதாவது முதன்முதலில் நாம் அந்த மந்திரத்தைச் சொல்லும்பொழுது அந்த மந்திரத்திற்குரிய கௌரவத்தோடு நீங்கள் அதை கவனிப்பீர்கள் என்று நம்புகிறேன். அது இலுப்பக்குடியாருக்கே உரிமையான மந்திரம். அதை நீங்கள் காலையிலும் இரவு படுக்கப் போகும்போதும் அந்த மந்திரத்தை ஜெபிக்க லாம். அது உங்களுக்காகவே ஏற்படுத்தப்பட்ட மந்திரம்.

''சங்கரா நம தானுவே நம
பொங்கரா அணிப் புண்ணியா நம
திங்கள் சூடிய சேகரா நம
துங்கமான் தான் தோன்றியே நம''

இது நான் பாடிய மந்திரமல்ல. உங்களுடைய தலபுராணத்திலே, உங்கள் வம்சத்திலே ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் இருந்த தனபதி செட்டியார் இங்கு வந்து இலுப்பக்குடி தான் தோன்றி ஈசுவரரை வழிபடும்போது சொன்ன மந்திரம் இது. இந்த மந்திரத்தை அவர் ஜெபித்து இறைவனுடைய காட்சியைக் கண் டார். அவர் உங்கள் வம்சத்திலே தோன்றிய வர். அவருடைய பெயர் தனபதி செட்டியார் என்று நீங்கள் கேள்விப்பட்டிருப்பீர்கள். அவர் அப்படி ஈஸ்வரனை வழிபட்ட உடனே எம்பெரு-மான் காட்சி கொடுத்து உனக்கு என்ன வேண் டும் என்று கேட்டார். அதில்தான் இலுப்பக் குடி நகரத்தார்களுடைய தனிப்பெருமை தெரி கிறது. உனக்கு என்ன வேண்டுமென்று எம்-பெருமானே காட்சி அளித்து கேட்கும்போது நாம் என்ன சொல்லுவோம் அதுவும் நகரத் தார் பெருமக்களாயிருக்கிற நாம் என்ன வரம் கேட்போம். நிறைய பணம் வேணும். அது தானே நாம் கேட்போம். நிறைய பணம் வேணும் என்னுடைய பெண்சாதி பிள்ளைகள் எல்லாம் சௌக்கியமா இருக்கனும். பொம் பிளைப்பிள்ளைகளுக்கு கல்யாணம் ஆகாம இருக்கு நிச்சயமா கல்யாணம் ஆகனும். அதை தானே முதலிலே கேட்போம். ஏன்? நகரத் தார் பெருமக்களே பெண்களுக்கு கல்யாணம் பண்ணிவைக்கறதுதான் பெரிய சிரமமான காரியம். நாம் கூட சொல்வதுண்டு. இந்த வினைப்பயனைப்பற்றி சைவ சித்தாந்தத்திலே படிக்கும்பொழுது அதாவது நாம் இப்ப ஒருவனை அடிக்கிறோம் போன ஜென்மத்திலே அவன் பிறந்து நம்மனை அடித்தான். அந்த மாதிரி வினைப்பகுதி உண்டு. இது போல போன ஜென்மத்திலே ஒருவரிடம் கடன் வாங்கியிருப்ப தாக வைத்துக்கொள்வோம். அந்தக்கடனை கொடுக்காமல் ரிக்கார்ட் இல்லாமலே நாம கடனைத்திருப்பிக் கொடுக்காமல் நாமும் செத்துப் போய்விடுகிறோம். கடன் கொடுத்த வனும் செத்துப்போயிடுறான் என வைத்துக் கொள்வோம். மறுபிறப்பிலே அவன் எப்படிப் பிறப்பான் தெரியுமா பிறப்பில் நாமும் செட்டி யாராகத்தான் பிறப்போம் ஆனால் கடன் கொடுத்தவன் நமக்கு மகளாக வந்து பிறப்பான்.

(கூட்டத்தில் சிரிப்பு)

★ ★ ★

# வரவேற்புரை

இலுப்பக்குடி திருக்குட நன்னீராட்டுக்கு வருகைத் தந்த தமிழ்நாடு இந்து சமய அறநிலையத்துறை ஆணையர் திரு. ஆளுடையபிள்ளை அவர்களையும், மற்றும் வருகைதந்தவர் களையும் கோவில் அறங்காவலர் திரு. எல். சோமு அவர்கள் வரவேற்றுப்பேசியது.

இலுப்பக்குடி தான்தோன்றி ஈஸ்வரரையும், சௌந்தர நாயகி அம்மனையும், வயிர வரையும் பட்டாடை கட்டிப்பார்க்கின்ற நேர மதில் பத்தினியை காண்கின்றேன். எட்டாத தேர் நடுவே ஏற்றி உனை வைக்கையிலே இன் தமிழை காண்கின்றேன். கொட்டாத மேளங்கள் கொட்டுகின்ற கோல நடராசன் துணையே.

கொடி வளரும் இலுப்பக்குடியில் வீற்றிருக்கும் சௌந்தர நாயகி உமையே இலுப்பக்குடி நகரத்தார்களுடைய நல் முயற்சியாலும், பெரும் ஆர்வத்தாலும், உயர் திரு. ஒக்கூர் ராம. அவர்களுடைய சீரிய தலைமையிலே ஒரு கும்பாபிஷேகம் செய்வோம் என்று, தேவகோட்டை இலுப்பக்குடி நகரத்தார்களும், எங்களுடைய மேனேஜிங் டிரஸ்டி அரு. அவர்களும், மற்றும் 32 ஊர்களிலே இருக்கக்கூடிய இலுப்பக்குடி நகரத்தார்களும் ஒரு முடிவுக்கு வந்தோம். அது ஒருவரை யொருவர் புரிந்து கொள்வதற்காகவாவது இந்த கும்பாபிஷேகத்தை செய்வோம் என்ற எண்ணத்திலே தொடங்கப்பெற்ற ஒரு சாதாரண வேலை.

நாங்கள் சேர்ந்த அதிர்ஷ்டமோ அல்லது எங்கள் இலுப்பக்குடி நகரத்தார்களும் நகரத்தார் பெருமக்களும் செய்த பெரும்பயனே. எங்களை அறியாமல் உள்ளமும், ஆர்வமும், உணர்ச்சியும் ராஜகோபுரம் வரை கொண்டு போய் விட்டுவிட்டது.

அதற்கு நான் நன்றி சொல்லவேண்டுமென்றால் யார்யாருக்கு நன்றி சொல்ல வேண்டுமென்று நினைத்துக்கொண்டே வந்தேன். முத்து அழகப்பண்ணன் அவர்களுக்கு நன்றி சொல்வதா. யாகசாலையை மேற்பார்த்த ''சாமி'' அவர்களுக்கு நன்றி சொல்வதா அல்லது ராஜகோபுரத்தை கட்டி முடித்த சுப்பையா செட்டியார் அவர்களுக்கு நன்றி சொல்வதா? அல்லது ஓடியாடி பம்பரமாய் திரிந்த பாஸ்கரனுக்கு நன்றி சொல்வதா. நாங்கள் சொன்ன நேரத்திலெல்லாம் வசூலுக்காக வந்த சிவலிங்கண்ணன் அவர்களுக்கு நன்றி சொல்வதா.

நன்றி சொல்லிக்கொண்டே வரும்போது ஒரு பயம் வந்துவிட்டது. நன்றி சொல்கிறேன் என்று சொல்லி பேர்களை சொல்லச் சொல்ல எந்தப்பேராவது விட்டுப்போய் விடுமோ என்ற அளவுக்கு அச்சப்படுகின்ற அளவு இலுப்பக்குடியிலுள்ள 2400 புள்ளிகளும் அவர்களுடைய உழைப்பால் உருவாக்கப்பட்ட இந்த கும்பாபிஷேகத்திற்கு அமைக்கப்பெற்ற ராஜகோபுரத்தின் சிகரமாக சூடாமணியாக கமிஷனர் ஆளுடையபிள்ளை வருகை தந்திருக்கிறார்கள். அவர்களையும் மதுரை அருள்மிகு மீனாட்சி அம்மன் கோவில் தக்கார் வி. என். சி. டி. அவர்களையும் நினைத்த உடனே பொங்கும் கவிதை சொல்லும் கண்ணதாசன் வழிவந்த கவிஞர் களையும், இங்கு கூடியிருக்கும் அனைவரையும் துணை ஆணையர் அவர்களையும் உதவி ஆணையர் அவர்களையும் ஒவ்வொரு நகரத்தார்களின் சார்பாக வருக வருக எனக்கூறி வரவேற்கிறேன்.

✵ ✵ ✵

# அஷ்டபந்தன மருந்து இடிக்கும் முறை

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | கொம்பரக்கு | — | 1,592 | கிராம் |
| 2. | கருங்குங்கிலியம் | — | 4,287 | ,, |
| 3. | சுக்கான் | — | 13,300 | ,, |
| 4. | காவிக்கல் | — | 2,122 | ,, |
| 5. | வெண்மெழுகு | — | 1,487 | ,, |
| 6. | செம்பஞ்சு | — | 376 | ,, |
| 7. | வெண்ணெய் | — | 1,489 | ,, |
| 8. | உலர்ந்த லிங்கம் | — | 2,262 | ,, |

மேற்கண்ட எட்டுப் பொருள்களின் அளவிலிருந்து கோயில் மூர்த்திகள் அளவிற்குக் கூட்டியும் குறைத்தும் கொள்ளலாம். மூர்த்தியின் கீழ் ஒரு அங்குலத்திற்கு 26 கிராம் வீதம் மருந்து பூசவேண்டும்.

**செய்முறை :**

சுக்காங்கல், பொம்பரக்கு, கருங்குங்கிலியம், காவிக்கல், இந்த நான்கையும் தனித்தனியாகக் கருங்கல் உரலில் இடித்து, தூயதுணியில் வடிகட்டித் தனித்தனியாக வைத்துக்கொள்க.

ஆந்திராவில் கிடைக்கும் செம்பஞ்சியை கைகளால் பிய்த்துக் கொள்க. வெண் மெழுகை மெல்லிய ஓலைபோல் சீவிக்கொள்ள வேண்டும். உலர்ந்த லிங்கத்தைக் கல்வத்தில் சிறிது சிறிதாக அறைத்து எடுத்துக்கொள்ளவேண்டும்.

வெண்ணெய்யை இரண்டு பங்குகளாக்கி ஒரு பங்கை பஞ்சைத்தவிர ஏனைய பொருள்களுடன் கலந்து நன்ருகப் பிசைந்து உருண்டைகளாக்கிக் கொள்ள வேண்டும். பர உரவில் சிறிது வெண்ணெய் தடவி உருண்டையைப் போட்டு மர உலக்கைவால் இடையிடையே வெண்ணெய் சேர்த்துக் கொண்டே நன்ருக இடிக்கவேண்டும்.

இவ்வாறு 2, 3 நாட்களுக்கு ஒரு முயையாக ஏழு தடவை இடித்து, மருந்து சாத்தும் நாளிகி எட்டாம் முறையும் இடித்த பிறகு, ஓர் அங்குலத்திற்கு 26 கிராம் வீதம் அழுத்தமாக சாத்த வேண்டும்.

48 நாட்கள் வரை எலுமிச்சை, தயிர் போன்ற புளிப்புச் சத்துக்களை அபிஷேகம் செய்யாமல் நிரம்பி வழியும்படி தூய எண்ணெய் சாத்தி வந்தால் சாத்திய மருந்து பல்லாண்டுகளுக்கு உறுதியாக இருக்கும்.

# சமூகப் பணி

இலுப்பக்குடி நகரக் கோயிலைச் சேர்ந்த ஏறத்தாழ 450 ஏக்கர் நிலத்தை காரைக்குடியில் அழகப்பா கல்லூரி நிறுவுவதற்கு உதவியாக, கொடைவள்ளல் டாக்டர் இராம. அழகப்பச் செட்டியார் அவர்களுடைய அறக்கட்டளைக்கு 1947-ஆம் ஆண்டில் மிகக் குறைந்த விலைக்கு (NOMINAL PRICE) வழங்கியிருக்கின்றனர்.

ஸ்ரீ-ல-ஸ்ரீ திருச்சி சுவாமிகள் அவர்கள் விரும்பியவாறு, பெங்களூர் கெஞ்சஹைல்லி ஸ்ரீ கைலாச ஆசிரமத்தின் கிளை அமைக்க இலுப்பக்குடி நகரத்தார்கள் சுமார் பதினேழு ஏக்கர் நிலத்தை சமூக நலம் கருதி அவர்கள் உபயோகித்துக் கொள்ள இலுப்பக்குடி நகரத்தார்கள் பேரன்புடன் இசைந்திருக்கிறார்கள்.

# இலுப்பைக்குடி கோயிலும் இளையூர் கிராமமும்

**வீர. சுயம்பிரகாசம்**

நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் செய்திருக்கும் அறப்பணிகள் எண்ணற்றவை, அவற்றிற்கு சான்றாய் அவர்கள் உருவாக்கிய கோயில்கள் உலகத்தில் எல்லாப் பகுதிகளிலும் இருக்கின்றன.

நமது இலுப்பைகுடி பற்றி பலவித புராண இதிகாச வரலாறுகள் உண்டு அதனை தொடர்ந்து தொன்று தொட்டு போற்றத்தகுந்த பல சிறப்புக்களை பெற்று இருக்கிறது. அதற்கு சான்றாக பல சிற்பங்களும், சித்திரங்களும் ஆதாரமாக இருந்துவருகின்றன.

ஒன்பது நகர கோயில்களுக்குள் ஒன்றான நமது இலுப்பக்குடியில் நமது காலத்தில் ஐந்து நிலை கோபுரம் உருவாக்கப்பெற்றிருப்பது இனி வருங்கால சந்ததிகளுக்காக நாம் சேர்ப்பித்த பெருமையாகும். நம் திருக்கோயிலுக்கு காஞ்சி சங்கராச்சாரிய சுவாமி அவர்கள் எழுந்தருளி இன்னும் பெருமை சேர்க்க இருக்கிறார்கள்.

நம் கோயிலுக்கு இளையூர் கிராமம் கிடைத்தது பற்றி ஒரு சுவையான கதை உண்டு. கௌரி வல்லப மஹாராஜவுக்கும் மருது பாண்டியர்களுக்கும் இடையே சிவகங்கை ஜமீன் உரிமை பாத்தியதை பற்றி போராட்டம் நடந்தது, அந்த சமயம் கௌரி வல்லபமஹாராஜா தலைமறைவாக இருந்து வந்தபொழுது திசையறியாது வயிற்றுப்பசியோடும் தன்னுடன் துணைக்கு வந்தவேடர்களுடன் இலுப்பைகுடியருகே தவித்துக் கொண்டிருந்தார். அதுசமயம் அவ்வழியே சென்ற அரு. லெ. குடும்பத்தை சார்ந்த அருணாசலஞ் செட்டியார், பஞ்சு வியாபாரத்திற்காக சென்று கொண்டிருந்தவர் மகராஜாவை சந்திக்க நேர்ந்தது. மஹாராஜாவுடைய இக்கட்டான சூழ்நிலையை அறிந்த அருணாசலம் செட்டியார் மஹாராஜாவுக்கு தன்னிடமிருந்த கட்டுச்சாதத்தை அளித்துப் பசியாற்றிப் பின்னும் தன்னிடமிருந்த ஐந்து பரங்கி விராகன்களையும் அளித்து மன்னர் திரும்பும் வழியும் கூறி உதவினர். அப்போது இலுப்பைகுடிக் கோவிலுக்கும் மன்னரை அழைத்துச் சென்று தான்தோன்றீஸ்வரரையும் உடனுறை சௌந்தரநாயகி அம்பாளையும், வைரவமூர்த்திகளையும் தரிசனம் செய்வித்து மன்னர் மனசஞ்சலம் நீங்க தான்தோன்றீஸ்வரர் அருள்பாலிப்பார் என்றும் கூறினர். அப்போது மன்னர் மனசஞ்சலம் நீங்கியபின் கோயிலுக்கு நிலம் தருவதாகக் கூறினர். அதுபோல் சில காலங்களிலேயே மனசஞ்சலம் நீங்கி இழந்த ஜமீன் மீண்டும் கிடைக்கப்பெற்றனர். உடன் மன்னர் தான்தோன்றீஸ்வரரின் அருளை நினைத்து மந்திரியை அழைத்து கோயிலுக்கு நிலம் வழங்கி நான்கு மால் கட்டியும் உதவினர்.

இன்று நாம் இறைவனின் அருளால் குலம் தழைத்து மனநிறைவோடு வாழ்ந்து வருகிறோம்.

சிவமயம்

# இலுப்பக்குடி தான்றேன்றிநாதர் பதிகம்

கி. கரு. ராம. சாமிநாதன் செட்டியார்

### விநாயகர் வணக்கம்

பாமாலை பாடப் பணிகின்றேன் உன்பதத்தை
ஆமாறு சொல்லளிப்பாய் ஐங்கரனே—தேமாந்தி
தேன்றேய் இலுப்பநகர் தேனினங்கள் பாவிசைக்கும்
தான் றேன்றிநாதர் தமக்கு.

### நேரிசை வெண்பா

1. வாருலாங் கொங்கை மடவரல் தன்னேடும்
நீருலாங் கொங்கைசேர் நீள்சடையோன்—ஏருலாம்
செந்நெல் விளைகழனிச் சீர் இலுப்பை ஈசன்ருள்
சென்னி கரங்குவித்துச் சேர்.

2. அன்னமொடு ஏனம் அயனும் திருமாலாய்
இன்னமும் காணறிய எம்மிறையைப் — பன்னரும்சீர்
அண்ணுமலையானை ஆரூர்ப் பெருமானை
பண் இலுப்பை நன்னகரிற் பார்.

3. கொன்றையொடு மத்தம் குறைமதியம் பூண்டானை
தென்றல் தவச்சோலை தென்னிலுப்பை — மன்றுபதி
சௌந்தரநாயகியாள் தான்றேன்றி நாதர்தான்
சந்தமும் போற்று நலம்தா.

4. பெண்ணிற்கே பாதியிடம் பேணியளித்தானை
மன்னவரைக் காக்கும் மகிபனைத் — தண்ணளிசேர்
நல்லோர் பணியிலுப்பை நன்னகரில் வீற்றிருக்கும்
நல் மலையின் வில்லானைக் காண்.

5. எருக்கரவம் பூண்டானை என்புமணி கொண்டானை
தருக்குமிக தக்கன் தலையைச் — செருக் ககல
வெட்டி எறிந்தருளி வேறுதலை வைத்தானை
மட்டிலுப்பை நன்னகரில் வாழ்த்து.

6. பாண்டிவள நாட்டில் பகர் ஒன்பான் கோவிலினுள்
ஈண்டிவிளங்கும் எழிற்கோயில் — சேண்டிகழும்
பொற்பள நகரிலுப்பைப் பொன்வணிகர் போற்றுகின்ற
சீர்பரன் நற்ருளினையே சேர்.

7. மாதுமையாள் பங்கன் மணிமகுடம் பூண்ணியான்
தாதவிழும் மாலைச் சடைமுடியான் — ஆதிசிவன்
நச்சரவம் பூண்டு நறுவிடத்தை யுண்டுவிப்பான்
பச்சிலுப்பை நன்னகரிற் பார்.

8. எம் தாயாய் இன்னமுதாய் எவ்வுயிரும் தானேயாய்
நம் தம்மைக் காக்கும் நனிசிறந்தோன் — எம்மிறைவன்
போன்ருேய் மதில்புடைசூழ் மாமதுக நன்னகரிற்
தான்ருேன்றி நாதன் நற்ருள்.

9. ஏற்றமிகும் எம் வணிகர் எந்நாளும் உன் பணியே
தேற்றமுடன் செய்யும் திறமருள்வாய் — நீற்றறையில்
சொல்வேந்தர் பாடச் சுகிர்த மளித்தவனே
நல்லோய் நீ தான்ருேன்றி நாத.

10. மங்குல் தவழும் மதுகபுரம் வாழ்கோவே
கங்குல் பகலாய்க் கதிர் விரிக்கும் — பங்கமுற்ற
வெண்ணிலவை முன்னுள் வினையகற்றிக் காத்தவனே
கண்ணியமாம் வாழ்வளித்துக் கா.

---

# கன்னியர் புலம்பல்

(முதுபெரும் புலவர் வ.சுப. மாணிக்கம் பாடியது)

1. தெய்வத் திருப்பணிகள் செய்யும் நகரத்தார்
பொய்யில் பெருங்குடியில் பூத்திருக்கும் கன்னிநான் ;

2. திக்கெல்லாம் பல்லறங்கள் செய்த தனவணிகர்
தக்ககுலம் தோன்றித் தவஞ்செய் குமரிநான் ;

3. சிங்கமும் பஞ்சும் சிறந்த மகுடத்தார்
தங்கக் கலத்தில் தலிர்வாடும் பூவை நான் ;

4. மானஞ் சிறந்த மதிசிறந்த மன்னினையர்
தானக் குடியில் தலித்திருக்கும் பாவைநான் ;

5. பெற்றோர் குறையில்லை பெண்மைக் குறையில்லை
மற்றோர் குறையில்லை மங்கலநாள் ஏறவில்லை ;

6. நான்பிறந்த சாதி நகரத்தார் நாணவில்லை
ஏன்பிறந்தேன் இன்னும் எனைநாடும் வண்டில்லை ;

7. தனமிக்க வைசியர்தம் சார்கோயில் வந்த
தனமிக்க நங்கை தளர்வாள் பராபரமே ;

8. குடமுழுக்குச் செய்வார் குலத்துப் பிறந்தேன்
நடைமுழுக்கு நின்றொழிய நானின்றிச் சாய்வேனோ ?

9. ஆயிரத்து மேலாம் அழகுநலி மெல்லியலார்
பாயிரமாய்ப் புண்பாடும் பாழாட்டுக் கேளீரோ ?

10. கேட்டுத் துடித்தோம் கிளர்ந்தெழுந்தோம் நல்லதிருப்
பூட்டுத் திருமணங்கள் பொங்குமெனச் சொல்லுங்கள் ?

11. செடியும் கொடியோடு சேர்ந்திருக்கக் கண்டு
வடியுமிரு கண்ணீர்க்கு வாய்க்காலும் போதாதே ;

12. பாம்பும் கலந்துறையும் பல்விலங்கும் சேர்ந்துலவும்
நாம் பிறந்த சாதி நமக்கே தனிமைதரும் ;

13. வாலி யினத்துக்கும் வாழ்வுண்டு மானிடம்பெண்
தாலி கழுத்தைத் தழுவுநாள் எந்நாளோ ?

14. உறவாக்கித் தாயாக்கி ஒட்டாமல் நம்மைத்
துறவாக்கி வைக்கும் தொடர்கதையும் புண்ணியமோ ?

15. இல்லறமாய் நாட்கனவு எண்ணும் குமரியர்கள்
இல்லறமாய்த் தானே இருந்தழுதல் புண்ணியமோ?

16. நகரத்தார் கன்னியர்க்கு நாளேறும் பாடு
பகரத்தான் வாயுண்டோ பட்டினதுச் சான்றோரே ;

17. பெண்ணினத்தார் பெண்ணுக்குச் செய்யும் பெருங்கொடுமை
மண்ணினத்துள் வேறு மறுசாதி கண்டதில்லை ;

18. இப்படியே கன்னியர்கள் இல்லொழிந்தால் சாதிக்குச்
செப்பவரும் ஊர்ப்பழியும் சீதனமாம் என்பீரோ ?

19. பிறப்பொக்கும் என்றான் பெரும்புலவன் எங்கட்கு
இறப்பொக்கும் என்றால் இரங்காரோ வள்ளுவரே ;

20. தெய்வதங்கள் நாளும் திருப்பள்ளி சேர்வதுண்டு
செய்தவங்கள் கன்னியர்க்கோ செப்பாய் பராபரமே ;

21. திருமணம் செய்பணியும் தெய்வப்பணி யென்று
வருமணம் கூட்டும் வழிநாள் பிறவாதோ?

22. கன்னியர்கள் வாழ்வைக் கருதாக் குலத்தாயம்
என்ன சிறப்பிருந்தும் எரிந்த மரமாமே ;

23. நாங்கள் பெருஞ்சுமையா நாட்டுநற் கோட்டையர்க்குத்
தாங்க முடியாதா தம்புள்ளி கூடாதா?

24. பாரார்க்கு வீசும் பணக்கொடையை நம்குமரி
ஊரார்க்கு மாற்றும் உயர்மனத்தைக் கொள்ளுங்கள் ;

25. அருட்செல்வர் கையசைத்தால் ஆயிரமாம் கன்னியர்கள்
பொருட்செல்வக் கேள்பெற்றுப் பொற்றாலி பூண்பார்கள்.

நாளது தேதி வரையில்

# இலுப்பக்குடி கோயில் டிரஸ்டிகள்

1838ம் ஆண்டு முதல் தொடர்ந்து டிரஸ்டிகளாக அரு. லெ. குடும்பத்தினர் இருந்து வருகிறார்கள். அதற்கு முன்னர்—நினைவுக்கு எட்டிய வரையில் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

| | | |
|---|---|---|
| 1800 to 1833 | ... | அருணாசலம் செட்டியார் |
| 1833 to 1846 | ... | அரு. லெ. லெட்சுமணன் செட்டியார் |
| 1846 to 1866 | ... | அரு. லெ. சேவு. சேவுகன் செட்டியார் |
| 1866 to 1877 | ... | அரு. லெ. சேவு. ராம. பெரிய ராமன் செட்டியார் |
| 1877 to 1887 | ... | அரு. லெ. நா. ராம. சின்ன ராமன் செட்டியார் |
| 1887 to 1896 | ... | அரு. லெ. நா. லெ. லெட்சுமணன் செட்டியார் |
| 1896 to 1902 | ... | அரு. லெ. சேவு. லெட்சுமணன் செட்டியார் |
| 1902 to 1910 | ... | அரு. லெ. சேவு. லெ. ராமநாதன் செட்டியார் |
| 1910 to 1914 | ... | அரு. லெ. அரு. ராம. அருணாசலம் செட்டியார் |
| 1914 to 1917 | ... | அரு. லெ. அரு. ராம. சேவுகன் செட்டியார் |
| 1917 to 1922 | ... | அரு. லெ. சேவு. லெ. சேவுகன் செட்டியார் |
| 1922 to 1927 | ... | அரு. லெ. அரு. ராம. பெரிய வீரப்ப செட்டியார் |
| 1927 to 1954 | ... | அரு. லெ. அரு. ராம. சி. வீர. வீரப்ப செட்டியார் |
| | | அரு. லெ. சேவு. லெ. சேவுகன் செட்டியார் (மானேஜிங் டிரஸ்டி.) |
| | | அரு. லெ. நா. லெ. வீர. வீரப்ப செட்டியார் |
| | | அரு. லெ. நா. ராம. அரு. சேவுகன் செட்டியார் |

(தொடர்ச்சி பின்பக்கம்)

1954க்குப் பின் சென்னை உயர்நீதி மன்ற ஸ்கீம்படி (1951ம் வருஷத்திய 491, 492 & 743 நம்பர்களின்மேல் AS 300 1954ம் ஞு மே மீ 5வ ஏற்பட்ட ஸ்கீம்படி) அரு. லெ. குடும்பத்தைச் சேர்ந்த ஒருவர் பரம்பரை டிரஸ்டியாகவும் இலுப்பக்குடி கோயில் நகரத்தார்களில் இருவர் அரசாங்க நியமன டிரஸ்டிகளாகவும் ஆக மூன்று டிரஸ்டிகளால் நிர்வாகம் நடைபெற்று வருகிறது.

| | | |
|---|---|---|
| 2-12-54 to இன்றுவரை | ... | தேவகோட்டை பரம்பரை அறங்காவலர் திரு ராம. அருணசலம் செட்டியார் அவர்கள் |
| 2-12-54 to 1-12-59 | ... | தேவகோட்டை முத்து. கரு. அரு. கரு. அரு. அருணசலம் செட்டியார் அவர்கள் |
| 2-12-54 to 1956 | ... | கீழப்பூங்குடி சூ. அரு. சு. சுப. சுப்பிரமணியன் செட்டியார் அவர்கள் |
| 22-8-85 to 1-12-59 | ... | கோனபட்டு சு. மு. ராம. முருகப்ப செட்டியார் அவர்கள் |
| 5-7-60 to 25-6-65 | ... | தேவகோட்டை கி. கரு. ராம. சாமிநாதன் செட்டியார் அவர்கள் |
| 29 12-61 to 1965 | ... | பள்ளத்தூர் மு. நெல்லியான் செட்டியார் அவர்கள் |
| 1969 to 1973 | ... | தேவகோட்டை க. அரு. ராமநாதன் செட்டியார் அவர்கள் |
| 1965 to 30-12-72 | ... | பள்ளத்தூர் மு. நெல்லியான் செட்டியார் அவர்கள் |
| 28-7-82 முதல் இன்று வரை | | |
| | ... | நச்சாந்துபட்டி எல். சோமு செட்டியார் அவர்கள் |
| | ... | தேவகோட்டை சோம. சுப. அருணசலம் செட்டியார் அவர்கள் |

**கல்விப் பணிக்கு . . . . .**

நமது இலுப்பக்குடி நகரக் கோயில், காரைக்குடி அழகப்பா கல்லூரி நிறுவுவதற்கு இடம் தந்து உதவியதுடன், அங்கு ஆசிரியர் பயிற்சி கல்லூரிக்காக, 1955ம் ஆண்டு சுமார் இரண்டு இலட்சம் ரூபாய் மதிப்புக்குரிய கட்டிடத்தையும் தந்து கல்விப் பணிக்கும் பேருதவி புரிந்திருக்கிறது என்பதை மகிழ்வுடன் தெரிவித்துக்கொள்கிறோம்.

# உபாஸனா தெய்வங்கள்

கா. ப. மா. மாணிக்கம் செட்டியார்

---

எங்கும் நிறைந்த பரம் பொருள். ஒன்று விண்ணிலிருந்து விழுகின்ற துல்லியமான மழைநீர். விழுகின்ற நிலத்திற்கேற்ப, கருமை, செம்மை முதலிய நிறங்களை அடைந்து தனது ஆரம்ப ஸ்தானமான ஸமுத்திரத்தை நதிகளாகப் பெருகிச் செல்கிறது.

உக்ரம், வீரம், சாந்தம், முதலிய குணங்களுடன் மூர்த்தி பேதங்களாக தோன்றி அருள்பாலிக்கிறது. அந்த பரமசிவமே பல சமயங்களில் பல பேதங்களுடன் எக்காரணத்தை முன்னிட்டுத் தோன்றியதோ அதை லக்ஷணங்களுடன் அருள் பாலித்து வருகிறது.

சிவாம்சமான பைரவமூர்த்தி உலகம் எங்கும் வியாபித்திருப்பவர். பயங்கர வடிவமும் பெரிய தோற்றமும் கொண்ட பைரவரின் கடைக்கண் பார்வையில் தீமையும் சூதும் அழிந்து மடிகின்றன. உக்கிர மூர்த்தியான பைரவர் உபாஸனை தீமைகளிலிருந்து காத்தருள வல்லது. உபாஸனையின் மூலம் கடுமையான தவநெறிகளைப் பின்பற்றி சிவனருளை அடைய விரும்பிய பல சிவனருட் செல்வர்கள் பைரவ உபாஸனையின் மூலம் பேரின்பம் கண்டிருக்கின்றனர். கபாலிகர்கள் பைரவ உபாஸனையில் தீவிர ஈடுபாடு கொண்டவர்கள்.

ஸௌந்தர்ய லஹரி என்ற கிரந்தம் 41வது சுலோகத்தில் காலாகனி ருத்ரனால் மஹா பிரளயத்தில் பஸ்பமாக்கப்பட்ட உலகத்தை மீண்டும் உண்டுபண்ணுகின்ற காரணத்திற்காக அம்பிகை ஆனந்த பைரவியாகவும் பரமசிவன் ஆனந்த பைரவராகவும் தாண்டவமாடிக்கொண்டு இருப்பதால், ச்ருங்காரம், வீரம், ஹாஸ்யம், அத்புதம், பீவத்ஸம், ரௌத்ரம், பயானகம், கருணை, சாந்தி என்று ஒன்பது விதமான ரஸங்களும் வெளிவருகின்றன என்று கூறப்படுகிறது.

''லலிதாஸஹஸ்ரநாமம் 'பைரவி' என்று அம்பாளை அழைக்கிறது. பாபத்தை போக்குவதால் 'ருத்ரம்' என்றும் ''பைரவன்'' என்றும் சிவன் அழைக்கப்படுகிறான்.

''ருக் து : கம் து : கஹேதுர்வா தத்ராவயதி ய : ப்ரபு :
ருத்ர இத்யுச்யதே தஸமாத் சிவ : பரம காரணம் ''.

பைரவ தந்திரத்தையே வெளிப்படுத்தியவர் ஆனந்த பைரவர்தான். ஜகத் சிருஷ்டியே ஆனந்த பைரவரால்தான் நடக்கிறது. சித சக்திதான் ஆனந்த பைரவி என்பது. அதன் அதிஷ்டானம்தான் ஆனந்த பைரவர் என்பது. மஹாகால ஸம்ஹிதை, காலீ தந்திரம், விஞ்ஞான பைரவர் முதலிய கிரந்தங்களில் இதன் விரிவைக் காணலாம்.

''சுவாநதவஜாய வித்மஹே
சூலஹஸ்தாய தீமஹீ
தன்நோ பைரவ; ப்ரசோதயாத்''

என்பது பைரவரின் பேரருளுக்கு வழிகாட்டும் காயத்ரீ மந்திரமாகும். இதை ஆசாரத்துடன் தகுந்த குருநாதனால் உபதேசிக்கப்பட்டு ஓதிப் பயன்பெற வேண்டும்.

''ரக்த ஜ்வால ஜடாதரம் சசிதரம்
ரகதாங்க தேஜோமயம்
ஹஸ்தே சூலகசாலபாப டமரும்
லோகஸ்ய ரக்ஷாகரம்
நிர்வாணம் சுருவாஹனம் திரிநயனம்
ஆனந்த கோலாஹலம்
வந்தே பூதபிசாசநாத வடுகம் ஸ்ரீ:''

என்பது மனதினுள்ளே பைரவரின் மெய் வடிவை நாட்டும் பைரவ த்யான மந்திரம்.

சிவனது பல அம்சங்களுள் பைரவ அம்சம் மிகவும் முக்கியமானது. ஆலயங்கள் தோறும் பைரவருக்கு சன்னதி உண்டு. ஆலயத்தில் தினமும் காலையில் பூஜைகள் துவங்கும் முன்னரும் இரவு அர்த்தஜாமத்தில் பூஜை முடிவுறும் போதும் பைரவருக்கு விசேஷமாக பூஜைகள் செய்ய வேண்டுமென்று ''ஸ்ரீ பரார்த்த நித்யபூஜா விதி'' என்னும் நூல் கூறுகிறது.

''நிர்வாண ரூபத்தையும், மூன்று கண்களையும் சர்ப்ப ஆபரணத்தையும் குண்டலங்களையும், சிரசிலே மாலையும் கட்கர், சூலம், கபாலம், உடுக்கை, கோரப்பல் ஆகியவற்றை உடையவராக நாய் வாஹனத்தின் மீது அமர்ந்திருக்கும் பைரவரை வணங்குகிறேன் என்று பைரவ பூஜையின் முன்பாக இறைவனை வணங்கவேண்டும்''.

ஓம் ஹ்ராம் ஹ்ரீம், ஹ்ரூம்: ஹ்ரைம்
ஹ்ரெளம், க்ஷம் க்ஷேத்ரபாலாய நம:

என்ற பைரவ மூல மந்திர உச்சாடனத்துடன் பைரவ பூஜை துவங்குகிறது.

பைரவருக்கு க்ஷேத்திரபாலர் என்னும் ஓர் பெயருண்டு. க்ஷேத்திரம்: புண்ணிய நதிதீரம், பரிசுத்தமான தூய தவச்சாலை இங்கெல்லாம் பைரவரின் காவலுக்கு அருளாட்

சிக்கு உட்பட்டவை, ஆலயத்திலும் அவர் ஊரின் எல்லைகளிலும் காவல் தெய்வமாக விளங்குவதாகவும் கூறப்படுகிறது. (நமது ஞான கருவூலங்களான நூல்கள் காசியம் பதியை புருவமத்தியாக கூறுகின்றன. நம்மவரால் புராதன காலந்தொட்டு புனித யாத்திரை தலமாக கருதி, கிடைக்கக் கூடாத பாக்கியமாக கருதும் இப்புண்ணிய தலத்தின் காவல் நாயகன் கால பைரவமூர்த்தி. இவர் ஸந்நிதியில் கருப்புக் கயிறு கட்டிக்கொள்வதும், வாங்கி வருவதும் இன்றும் உண்டு.)

பைரவ அருளை ஈட்டுத்தரும் மூலமந்திரத்திற்குரிய பஞ்ச ப்ரஸ்மஷடங்க மந்திரம் பின்வருமாறு :

ஓம் ஹோம் க்ஷம் க்ஷேத்ரபாலாய
ஈசான மூர்த்தயே நம :

ஓம் ஹேம் க்ஷேத்ரபாலாய
தத்புருஷவகத்ராய நம :

ஓம் ஹூம் க்ஷம் க்ஷேத்ரபாலாய
அகோர ஹ்ருதாய நம :

ஓம் ஹீம் க்ஷம் க்ஷேத்ரபாலாய
வாம தேவகுஹயாய நம :

ஓம் ஹம் க்ஷேத்ரபாலாய
ஸத்யோஜாதாயபாதாப்யாம் நம :

ஓம் ஹாம் க்ஷேத்ரபாலாய
ஹ்ருதயாய நம :

ஓம் ஹிம் க்ஷம் க்ஷேத்ரபாலாய
சிரசேஸ்வாஹா

ஓம் ஹீம் க்ஷம் க்ஷேத்ரபாலாய
சிகாயை வஷட்

ஓம் ஹைம் க்ஷேத்ரபாலாய
கவசாயஹீம்

ஓம் ஹெளம் க்ஷம் க்ஷேத்ரபாலாய
நேத்ரத்யாய வெளஷட்

ஓம் ஹ : க்ஷம் க்ஷேத்ரபாலாய
அஸ்தராயபம்

மஹாபைரவர் : ஒளி பொருந்திய உக்கிரமும், எண் கரங்களில் சர்ப்பம், உமருகம், அங்குசம். கட்கம், அமிருதகபாலம், வரம், அபயம் ஆகியவற்றைத் தாங்கியும் உள்ள மஹாபைரவர் மரகதம் போன்ற நிறமுடையவர். சந்திரனை சிரசில் கொண்டவர். ஜடாமுடியும் மூன்று கண்களும் உடையவர் என்று சில்ப நூல்கள் கூறுகின்றன. இவரது வாகனம் சுவாநம் (நாய்) ஆகும்.

காலபைரவர் : கபாலத்தைக் கையில் ஏந்தியவர் காதுகளில் அழகிய குண்டலங்களைத் தரித்திருப்பவர். கையில் தண்டத்தை வைத்திருக்கும் இவர் கருமை நிறமுடையவர். சர்ப்பத்தைப் பூணூலாகக் கொண்டவர். போர்க் கோலத்தில் காட்சி தருபவர். இடையூறுகளை மாய்த்து தம் பக்தர்க்கு அருள் அளிப்பவர்.

உக்கிரபைரவர் : காண்போரை மிரளச் செய்யும் உக்கிர வடிவம் இது. முகத்தில் கோபக்கனல் கொந்தளிக்க ஆவேசத்துடன் பிரம்மசிரஸ்சேதம் செய்தவரே உக்கிர பைரவர். ஆலயச் சிற்பங்களில் காண்கின்ற உக்கிர பைரவர். சிற்பங்களில் ஜடாமுடி தீச்சுடர் போன்று சித்தரிக்கப்பட்டுக் காணப்படும். கரங்களில் பயங்கர ஆயுதங்களை உக்கிரபைரவர் தரித்திருப்பார்.

வடுகநாதன் : சுவாந வாகனத்தின் (நாய்) மீது அமர்ந்து அருள் புரிபவர் வடுகநாதன் பைரவ மூர்த்தங்கள் பலவற்றுள் சாதாரணமானவர்களின் உபாஸனைக்கு உகந்த வடிவம் இது. பல ஆலயங்களில் கருணைமிக்க வயிரவருக்கு சன்னதிகளும், சிற்பங்களும் இருக்கின்றன.

சட்டைநாதன் : இவர் பைரவ மூர்த்தியின் மற்றோர் வடிவம். நரசிம்ம உக்கிரத்தைக் குறைந்த சட்டைநாதனுக்கு தஞ்சைமாவட்டத்து சோழர் பழைய கோவில் களில் சிற்ப, படிமக் கோலங்கள் காண்கின்றன. ஆவேசமாக நரசிம்மத்தை கவ்வி அதன் உக்கிரத்தை உரிஞ்சுவதைபோல் சட்டைநாதனின் வடிவங்கள் சித்தரிக்கப்படுகின்றன.

திருவண்ணமலை அருணாசலேஸ்வரர் ஆலயத்தில் உள்ள பைரவ சன்னதி ஏகப் பிரசித்திபெற்றது, பைரவருக்கு உக்கிரகம் அதிகமானதால், பின்னர் உக்கிர சக்தியை குறைத்தார்கள். இன்றும் பெருமையுடன் விளங்குகிறார் அண்ணாமலை பைரவர்.

---



சி. க. அரு. சோம. இராமநாதன் செட்டியார் அவர்கள்

தலைவர் : திருக்குட நன்னீராட்டு

முல்லை புன்னகை முன் நிற்கும்
முகத்தின் மலர்ச்சி கவிகூட்டும்
செல்லச் சிரிப்பு நிதி சேர்க்கும்
நிதியும் சேர்ந்தால் செயல் பிறக்கும்.

உப தலைவர்கள்







கி. கரு. ராம. சாமிநாதன் செட்டியார், தேவகோட்டை
முத்து. கரு. அரு கரு. சுப்பிரமணியன் செட்டியார், தேவகோட்டை
சுப. சொ. சுப்பிரமணியன் செட்டியார், நாச்சியாபுரம்
அரு. அரு. சோம. சுந்தரேசன் செட்டியார், தேவகோட்டை
பெ. ராம. ராம. சித. இராமன் செட்டியார், நச்சாந்துபட்டி

## செயலாளர்கள்







என். எல். விஆர். வீரப்ப செட்டியார், தேவகோடடை
RM. முத்தழகப்ப செட்டியார் (பொருளாளர்) கோனுபட்டு
ஆர். வயிரவன் செட்டியார் (பாஸ்கர்) தேவகோட்டை
நாக. ஏக. நாகப்ப செட்டியார், தேவகோட்டை
கூ. அரு. க. அரு. கண்ணப்ப செட்டியார், கீழப்பூங்குடி











நச்சாந்துபட்டி எல். சோமு (அறங்காவலர் & மலர்குழுத் தலைவர்

தேவகோட்டை ராம. அருணசலம் செட்டியார் அறங்காவலர் குழுத்தலைவர்

தேவகோட்டை எஸ். வடிவேலு செட்டியார்

கண்டனூர் அர. சிங்காரவடிவேலன் செட்டியார்
நச்சாந்துபட்டி சித. நடராஜன் செட்டியார் } பதிப்பாசிரியர்கள்

## திருக்குட நீராட்டுக்குழு மலர்க்குழு உறுப்பினர்கள்











நச்சாந்துபட்டி பெ. ராம. லெ. ராம. ராமனுதன் செட்டியார்
நேமத்தான்பட்டி SE. SV. நாராயணன் செட்டியார்
தேவகோட்டை ப. அருணசலம் செட்டியார் (டிரஸ்ட்டி)
சிறுவயல் L. சண்முகம் செட்டியார்
சிறுவயல் L. சபாரெத்தினம் செட்டியார்











தேவகோட்டை கே. ஆர். முத்தையாசெட்டியார்
தேவகோட்டை என். வெங்கடாசலம் செட்டியார்
குளபிறை PR. RM. Y. யேகப்ப செட்டியார்
பனையப்பட்டி அரு. சு. ராம. சுப்பிரமணியன் செட்டியார்
தேவகோட்டை சேது. அருணாசலம் செட்டியார் (கட்டுரை ஆசிரியர்)











தேவகோட்டை ஆர். எம். கணேசன் செட்டியார்
தேவகோட்டை பி. ச. அரு. செந்தில்நாதன் செட்டியார்
கோனூபட்டு மெ. சித. மெய்யப்ப செட்டியார்
குளிபிரை வயி. மு. முத்துபழநியப்ப செட்டியார்
தேவகோட்டை மு. சிவலிங்கம் செட்டியார்







தேவகோட்டை V. R. வீரப்ப செட்டியார்
தேவகோட்டை S. M. L. வெள்ளையன் செட்டியார்
ராங்கியம் நாமு. ப. நாகப்ப செட்டியார்
காரைக்குடி பெரி. நா. நா. அ. தேவராஜன் செட்டியார்
அலவாக் கோட்டை சுப. கண. லெ. சுப்பிரமணியன் செட்டியார்








கட்டுரை ஆசிரியர்கள்

தேவகோட்டை ராம. அரு. வீரப்ப செட்டியார்
நச்சாந்துபட்டி பெ. ராம. ராம லெ ராமநாதன் செட்டியார்
நச்சாந்துபட்டி பெ. ராம ராம மா சம்பந்தம் செட்டியார்
ஒக்கூர் எஸ். டி. அண்ணுமலை செட்டியார்
தேவகோட்டை கே. ஆர். பழனியப்ப செட்டியார்
முரு. பழ. ரெத்தினம் செடியார் (கட்டுரை ஆசிரியர்) விரையாச்சிலை







வி. லெட்சுமிபுரம் அ. மெய்யப்ப செட்டியார்
தேவகோட்டை ராம. அரு. வீர பெரிய அருணாசலம் செட்டியார்
நடராசபுரம் முத்து. உல. சுப. உலகப்பன் செட்டியார்
கண்டரமாணிக்கம் நா. மெய்யப்ப செட்டியார்
நாச்சியாபுரம் வயி. ச. மாணிக்கம்









நச்சாந்துபட்டி வீர. மு. சுப்பையா செட்டியார்
கோனுபட்டு சு. மு. ராம முரு. முருகப்ப செட்டியார்
கண்டனூர் நாக.பழ. அ பழனியப்ப செட்டியார்
ஒக்கூர் கி. கரு. சிவ ஆதப்ப செட்டியார்











வி. லெட்சுமிபுரம் வ மு ப. மெ. ராமசாமி செட்டியார்
ராங்கியம் பெ சொ. பெரிய கருப்பன்
விரையாச்சிலை வெ. லெ. வெங்கிடாசலம் செட்டியார்
நேமத்தான் பட்டிசுப. முருகப்ப செட்டியார்
தேவகோட்டை தெ. அ. று. வீர. வீரப்ப செட்டியார்







வேந்தன்பட்டி AN. AR. ராமநாதன் செட்டியார்
தேவகோட்டை சி. வீர ந. முத்தையா செட்டியார்
வேந்தன்பட்டி வீர அண நாகப்ப செட்டியார்
வேந்தன்பட்டி PR A. ஆண்டியப்ப செட்டியார்
தேவகோட்டை எஸ். சோமசுந்தரம்







மெ. லெ. மெ. நாச்சியப்ப செட்டியார், தேவகோட்டை
முரு. அ. அண்ணமலை, தேவகோட்டை
எஸ். பி. எஸ். மெய்யப்ப செட்டியார், தேவகோட்டை
லெ. அரு. லெ. அண்ணமலை செட்டியார், மானகிரி
தேவகோட்டை சிதம்பரம் செட்டியார்







தேவகோட்டை மெ. ராம. கரு. ராம. லெட்சுமணன் செட்டியார்
கோனபட்டு உ. அரு. சா. அருணாசலம் செட்டியார்
நேமத்தான்பட்டி ஈ. கா. சு. பழ. பழனியப்ப செட்டியார்
தேவகோட்டை M. தனலெட்சுமி நாராயணன்
தேவகோட்டை சேவு. ராம. அரு ராம. சுப்பிரமணியன் செட்டியார்











குளிபிரை நா. வவி. ராமசாமி செட்டியார்
தேவகோட்டை கே. ஆர். செந்தில்நாதன் செட்டியார்
விரையாச்சிலை காசி விஸ்வநாதன் செட்டியார்
தேவகோட்டை எ. செ. செல்லப்ப செட்டியார்
புதுப்பட்டி செ. ராம. செ. அ. ராமசாமி செட்டியார்











தேவகோட்டை ராம சோமசுந்தரம் செட்டியார்
தேவகோட்டை சி. வீர. இராமநாதன் செட்டியார்
நற்சாந்துபட்டி கா. ப. ராம. மாணிக்கம் செட்டியார்
புதுப்பட்டி K. R. சிவலிங்கம் செட்டியார்
குழிபிறை யெ. சித. லெ. சிதம்பரம்
நாச்சியாபுரம் வயி. ச. மாணிக்கம்









தேவகோட்டை மு. கா. நடராஜன்
சிறுவயல் சோம ரெங்கநாதன்
தேவகோட்டை எல். லெட்சுமணன் (ஒலி, ஒளி அமைப்பாளர்)
சிங்கப்பூர் K. R. வீரப்பன்
தேவகோட்டை லெ. நாராயணன்











நாச்சியாபுரம் கரு. தெ. வே. தேனப்பன்
தேவகோட்டை M. சிதம்பரம்
தேவகோட்டை சு. அரு. முருகப்பன்
தேவகோட்டை ந. முத்தையா
தேவகோட்டை வீர. சுயம்பிரகாசம்









தேவகோட்டை முரு. அ. முருகப்ப செட்டியார்
முன்னாள் நகர விடுதி டிரஸ்ட்டி

தேவகோட்டை வெ. சுப, இராமநாதன் செட்டியார்
பொது நிர்வாகக் குழு

தேவகோட்டை ஈரோடு ''மீ''
முன்னாள் செயலர்—திருக்குட நன்னீராட்டுக் குழு

கண்டனூர் நா. க. பழ. அண்ணாமலை செட்டியார்











V. R. ஷண்முகம்
திருக்கோயில் ஸ்டோர் கீப்பர் (உதவியாளர்)

இலுப்பக்குடியில் சர்வசாதகம் N. இராமநாத சிவாச்சாரியார்
32, திருக்கோலக்கா

நாகபட்டினம் நாராயண அய்யர்
மாஸ்டர்குக் இலுப்பக்குடி திருக்குட நன்னீராட்டு

இலுப்பக்குடி வி. கல்யாணசுந்தரகுருக்கள்
திருக்கோயில் தலைமை குருக்கள்

இலுப்பக்குடி ராஜகோபுர அமைப்பாளர்V. R. காசிநாதஸ்தபதியார்

அரிமளம் A. L. பழனியப்பன்
உதவியாளர்









திருக்கோயில் மணியம் எஸ். சுப்பிரமணிய அய்யர்
திருக்கோயில் 'மானேஜர் சங்கர நாராயண பிள்ளை
நாகலிங்க ஸ்தபதியர்
தேவகோட்டை ஷண்முகம் ஸ்தபதியார்
இதரகோபுரம் செப்பனிட்டவர்கள்
தேவகோட்டை குருசாமி
யாகசாலை கொட்டகை அமைப்பாளர்



பாலும் தெளிதேனும் பாகும் பருப்புமிவை
நாலும் கலந்துனக்கு நான்தருவேன்—கோலஞ்செய்
துங்கக் கரிமுகத்துத் தூமணியே நீஎனக்குச்
சங்கத் தமிழ்மூன்றும் தா.



புதிதாக திருக்கோயிலில் நிறுவப் பெற்ற
லெக்ஷ்மி நாராயணப் பெருமாள்

# தனம் தரும் பைரவர்

- உபாசனா குலபதி ஸ்ரீ துர்க்கை சித்தர்.

★ இலுப்பைக்குடி பைரவர் எல்லா நலன்களையும் வளங்களையும் வாரி வழங்குபவர். இலுப்பைக் குடியில் பழைய காலத்தில் இலுப்பை மரங்கள் அதிகமாக இருந்தன. இந்த மரங் களின், காடுகளின் நடுவில், தான் தோன்றி நாதர் கோவில் எழுந்து விளங்கியது. இந்த கோவிலில், தான் தோன்றி நாதர் மூலக்கடவுளாக விளங்குகின்றார். இருந்தாலும் பெருமையும் புகழும் பைரவருக்குத் தான் போய்ச் சேருறது. காரணம் என்ன ?

## பைரவர் பிறந்த கதை

மாத்தூரிலிருந்து கிளம்பிய கொங்கண சித்தருக்கு பேரொளி—அதாவது தானே தான் என்றும் நிரந்தரமான ஒளிவிடும் பொருள் என்பதை 'சுயம்பிரகாசர்' காட்டினார். உண்மை ஞானம் வந்தால் பின்பு வேறு என்ன வேண்டும் ? அந்த சுகத்தில் சுகபிரும்மமாக விளங்கினார் கொங்கணசித்தர்.

அஷ்டமா சித்திகளை தருபவர் பைரவர். பைரவமூர்த்தி எப்பொழுதும் சந்தோஷத் துடன் விளங்குகின்றவர். அவர் சந்தோஷமாக விளங்குவதால அவரை பூஜை செய்கிறவர் களும் சந்தோஷமாக விளங்குகின்றார்கள். பைரவமூர்த்தியை வழிபட்டு எட்டுவகை சித்தி களையும் அடைந்தவர் கொங்கணர். அவருக்கு தங்கத்தின் மீது அதாவது செம்பை மேலும் மாற்று அடையச்செய்யும் சித்திக்கலையில் கை கொடுத்தவர் இந்த பைரவர். மருந்துகள், ரசவாதம், பாஷாணக்கட்டு போன்ற கலைகள் சித்தர் பெருமானின் கைக்குள் அடக்கமாக விளங்கியது. தான் பெற்ற சித்திகளுக்கு மூல காரணமான பைரவரை இவர் அர்த்த ஜாமத் தில் சித்தர்கள் நெறிப்படி வழிபாடுகள் செய்து வந்தார். தன்னுடைய உண்மையறிவு என்றும் ஒளிவிடுவதற்காக தான்தோன்றி நாதர் தலத்தில் தன் உபாசனைக் கடவுளான பீடத் தில் அமைத்து வழிபட்டார். இந்த பைரவ பீடம் ஸ்வர்ண ஆகர்ஷண பீடம், தரித்திரம், துக்கம், பயம், இடையூறு, அவமானம் ஆகியவைகளிலிருந்து வழிபடுகிறவனை விடு படச்செய்வது.

இந்த பீடத்தின் மீது சிவாலய நெறிப்படி ஆகம சாஸ்திரங்களுக்கு உட்பட்டு பைரவ மூர்த்தி முன் நாளில் அமைக்கப்பட்டது. இந்த திருமேனி ''வடுக பைரவ திருமேனி''.

## உக்ர பைரவர்

கொங்கணசித்தர் தான்தோன்றி நாதரை வழிபட்டு பைரவரின் பேரருளுக்கு ஏற்ற தவயோகியாக விளங்கினார். சிவாலயங்களில் பைரவருக்கு தனி சன்னதி சில இடங்களில் உண்டு. பல இடங்களில் பைரவ மூர்த்தி தனித்து விளங்கும். இலுப்பைக்குடி பைரவர் இவைகளுக்கு அப்பாற்பட்டவர். பிரக லாதனை இரண்யன் கேட்டான் நாராயணன் எங்கே இருக்கிறான் என்று ? தூணிலும் இருப் பான் துரும்பிலும் இருப்பான் என்று அந்த பாகவத உத்தமன் சொன்னான். அதைப் போல இலுப்பைக்குடி பைரவர் இந்த கோவிலின் தூண்களிலும் சாளரங்களிலும் நிறைந்து விளங்குவார். பைரவ மூர்த்தியின் ஆட்சிக்கு உட்பட்டது இந்த கோவில் என்ப தினால் தான் பைரவருடைய பல்வேறு மூர்த் தங்கள் இந்த திருக்கோவிலில் பல இடங்களில் செதுக்கப்பட்டுள்ளன.

## தக்ஷிணாமூர்த்தி சன்னதி

தக்ஷிணாமூர்த்தி சன்னதியில் பைர வருடைய சிறியதும் பெரியதுமான சிற்பங்கள் ஒளிவிடுகின்றன பொதுவாக ஒரு தெய்வ மந்திரத்தை ஜபம் செய்து சித்தி அடைவதற்கு ஏற்ற இடங்கள் பல உண்டு. ஜீவநதிக்கரை ஜபம், வடவிருக்ஷமூலஜபம், ஹஸ்வத்தவிருக்ஷ மூலஜபம், கோசாலாஜபம், அஸ்வசாலா ஜபம், ருத்திர பூமி ஜபம், சவாருட ஜபம், குருபாதுகா ஜபம் என்று ஜப சித்திக்கான இடங்களைச் சொல்லுவார்கள். இவற்றின் பொருள் என்ன?

வற்றாத நதிக்கரையில் ஜபம் செய்வது, ஆலமரத்தடியில் ஜபிப்பது, அரச மரத்தடியில் ஜபிப்பது, பசுமாடுகளின் நடுவே ஜபிப்பது, குதிரை லாயத்தில் மந்திரங்களை ஜெபிப்பது, ஸ்மசான் பூமியில் ஜபிப்பது, பிணங்களின் மீது இவர்ந்து ஜபிப்பது, எல்லாவற்றிற்கும் மேலாக தன்னுடைய குருவின் திருவடிகளை கண்ணால் பார்த்து, மனதால் நினைந்து, வாயினால் மந்திரம் சொல்லுவது ஏற்றத்திலும் ஏற்றம் குருவே பிரும்மா, குருவே விஷ்ணு, குருவே சிவம். எல்லாமாய் விளங்குபவர் குருவே இதனால்தான் நம்முடைய நாட்டில் பழைய காலத்தில் ஒரு பாடல் சொல்வது உண்டு.

"நன்றாக குரு வாழ்க! குருவே துணை." எல்லா காரியங்களும் நன்றாக நடக்க குருதான் மூலவர். குரு வாழ்ந்தால் உலகம் வாழும். உலகம் வாழ்ந்தால் உயிர்கள் வாழும். இந்த உயிர்கள் வாழ குருவே துணை செய்ய வேண்டும். எல்லாவற்றிற்கும் மூலம் குருதான். குரு மூலம் கல்லாத கல்வி உருவில்லாத கல்வி. அந்த கல்வி இகத்திலும் இன்பம் தராது, பரத்திலும் பழுக்காது. குரு மூலம் கல்லாத கல்வி அடியற்ற ஏற்றச்சால். இந்த பேருண்மை உபாசனை நெறியில் இருப்பவர்களுக்கு நன்றாகத் தெரிந்தது, பழக்கமான செய்தி. பைரவருடைய மஹா மந்திரத்தை கொங்கணர் தக்ஷிணா மூர்த்திசன்னதியில் அமர்ந்து ஜபித்ததால் இந்த இடத்தில் பைரவ மூர்த்தங்கள் பிரகாசிக்கின்றன.

### வரம் தரும் வடுகர்

இலுப்பைக்குடியில்வாழ்ந்தபெரியவர்களுக்கும் கோவிலைச் சார்ந்த நகர பிரமுகர்களுக்கும் ஒரு வழக்கம் உண்டு. தாங்கள் ஒரு வீடு வாங்குவதாக இருந்தாலும், சரி திருமணம் செய்ய வேண்டுமென்று நினைத்தாலும் சரி எல்லா நல்ல காரியங்களுக்கும் பைரவருடைய அனுமதியை பெற்றே செய்திருக்கிறார்கள். அதிகாலையில் கோவிலுக்கு வந்து தாமரை தடாகத்தில் குளித்து பிழிந்து கட்டிய வேட்டியுடன் பைரவர் சன்னதியில் போய்நிற்பார்கள். தங்களுடைய எண்ணத்தை வடுகநாதன் முன்பு வைப்பார்கள். நடத்த வேண்டும் என்றாலும் சரி நடத்தக்கூடாது என்றாலும் சரி அதற்கு ஏற்றபடி அவர்களுக்குஉத்தரவுகள் கிடைக்கும். அந்த உத்தரவுகளின்படி நடந்து நன்மைகளை அடைந்தார்கள். இப்படி வேண்டிக் கொள்கின்றவர்கள் நடுநிலை மனத்தவர்களாக காலப் போக்கில் இல்லாமல் போய்விட்டார்கள். தங்களுடைய விருப்பு வெறுப்புகளுக்கு பைரவரை வேண்டுவது, விடாப்பிடியாக அவரைபிடித்துக் கொண்டு தங்கள் எண்ணங்களை ஈடேற்ற வேண்டுமென்று வற்புறுத்துவது போன்ற செயல்கள் தொடர்ந்தன. இதனால் பைரவ மூர்த்தியின் சாந்தி விலாசம் உக்கிரகமாக மாறும் நிலை ஏற்பட்டது.

### கோபக்கனல்

அடியார்களுக்கு அடிமைப்படுவது ஆண்டவன் பண்பு. இது சிவத்தின் சிறப்பு இயல்பு. அடியார்களின் எண்ணங்களைச் சுமந்து நிறைவேற்றும் பணியில் பைரவர் இழுத்து வரப்பட்டார். அகோர பக்தியால் பைரவருடைய நல்லருள் கோபக்கனலாக கொழுந்து விட்டது. இந்த நிலையில் பைரவ மூர்த்தத்திடமிருந்து நல்லவைகளை நாடிப்பெறுவதைவிட அல்லவைகளை அணுகிப்பெறுவது சுலபமாக இருந்தது. இந்த கோபக்கனல் எளியவர்களால தாங்க முடியாத நிலையில் கொழுந்து விட்டது.

### குடும்பக் காவலர் பைரவர்

இலுப்பைக்குடி பைரவர் ஆயிரக் கணக்கான நகரத்தார் குடும்பங்களின் காவலர். இலுப்பைக்குடி வாழ் மக்களின் தந்தையும் தாயுமாக விளங்குகின்றவர். குடும்பத் தலைவனுக்குக் கோபம் வந்தால் குடும்பத்தில் சந்தோஷம் இருக்காது. உக்கிரக பைரவரால் அவரைச் சார்ந்த குடும்பங்களுக்கு கிடைக்க வேண்டிய உதவிகள் தடைபட்டு நின்றது கோபத்தோடு விளங்குபவன் முன்பு பங்காளி வந்தாலும் ஒன்றுதான், பகையாளி வந்தாலும் ஒன்றுதான். பெற்ற மகன் வந்தாலும் ஒன்றுதான். கோபம் கண்ணை மறைக்கும். கோபத்தினாலேதான் தன் மைந்தனைக் கூட இரண்யனுக்குக் கண்ணுக்குத் தெரியவில்லை பைரவர் சன்னதியின் எதிரில் உள்ள கருப்பர், கருப்பாயி மூர்த்தங்களின் முன்பு குட்டிச் சிறப்புக்கள் வெட்டிச் செய்யப் பட்டன. ரத்தம் கண்டால் சத்தம் ஓங்கும். மூர்த்தங்களின் சாந்தங்கள் குறைந்து போயின.

### சாந்தியின் பிறப்பிடம்

இந்த நிலையில் பைரவர் தன்னைச் சார்ந்தவர்களிடம் செய்த திருவிளையாடல்கள் அதிகம். வினைக்கு ஏற்றபடி வேலைகள் நடக்கும் என்பதைப் போல நகரத்தார்களில் பலர் பைரவரை விட்டு விலகிப் போனார்கள். அவர்கள் விலக விலக தன்னை விட்டு இவர்கள் விலகுகிறார்களே என்ற எண்ணம் பைரவருக்கு இருந்தது. தன்னுடைய குழந்தைகள் தன்னை விட்டுப் பிரிந்து இருப்பதை எந்தத் தாயும் தகப்பனும் விரும்ப மாட்டார்கள். தன் உள்ளத்தில் இருக்கும் தாபத்தை நகரப் பிரமுகர்களில் உபாசனை வழிபாடு செய்பவர்களின் உள்ளங்களில் அவ்வப்போது எடுத்துச் சொல்லி வந்தார்.

### தனம் தரும் பைரவர்

பொதுவாக ஒரு கோவிலுக்கு முப்பது வருஷங்களுக்கு ஒரு தடவை கும்பாபிஷேகம் செய்ய வேண்டும். சித்தர்களால் பிரதிஷ்டை செய்யப்பட்ட கோவில்கள் எப்போதுமே அருள் தருபவைகள் இலுப்பைக்குடி திருக்கோவில் கொங்கண சித்தரின் பேரருள் கொண்டு விளங்குவது. இதைப் போல சித்தர்களால் அமைக்கப்பட்ட கோவில்கள் தமிழகத்தில் பல உண்டு. பல கோவில்களை அமைத்துவிட்டும் இருப்பார்கள். அவர்கள் வேறு எங்கேயாவது வெளிப்பட்டுப் போய் விடுவார்கள். இலுப்பைக்குடி திருக்கோவிலில் கொங்கணர் தன்னுடைய பேரருளைப் பொழிந்து தானும் அங்கேயே விளங்குகின்றார், மூர்த்தி, தலம், தீர்த்தம் மூன்றும் முழுமையாக உள்ளது இலுப்பைக்குடி கோவில்.

இயல்பாக தனம் தரு பைரவராக இங்கு விளங்குகின்றார் பைரவர். காஞ்சிபுரத்தில் காளிகாம்பாள் தன்னுடைய உக்கிரக தாண்டவத்தால் பயமுறுத்தினாள். ஆதிசங்கரர் வந்தார் ஸ்ரீசக்கர பிரதிஷ்டை செய்தார். கோபம் தணிந்தது. கொடூரம் மறைந்தது. படியளக்கும் பரமேஸ்வரியாக காமாட்சியாக அன்னை ஒளி விட்டாள். திருஆனைக்காவில் வாராஹி வடிவில் கோபக் கனலில் கொழுந்து விட்டாள் தேவி. தாடங்கத்தில் ஸ்ரீ சக்கரத்தை பிரதிஷ்டை செய்து அகிலாண்ட ஈஸ்வரியாக அறம் வளர்க்கும் நாயகியாக அன்னையை விளங்கச் செய்தார் ஆதிசங்கரர், இதைப் போலவே மந்திரங்கள் மூலம் திருவருளைப் பெருக்கச் செய்வது ஒரு முறை மந்திரங்களை ஜெபித்து மூர்த்தங்களுக்கு தத்தம் கொடுப்பதன் மூலம் மாற்றியமைப்பது ஒரு முறை. இதைப்போலவே தெய்வ மூர்த்தங்களின் குண குணங்களை மாற்றுவதற்கு பல வழிகள் உள்ளன. இந்த வழிகள் பற்றி மந்திர சாஸ்திரங்கள் மிக விரிவாக எடுத்துச் சொல்கின்றன. உபாசனை முறையில் இருப்பவர்களுக்கு இந்த வழிகளைப் பற்றி நன்றாகத் தெரியும்.

இலுப்பைக்குடி பைரவர் இயற்கையிலேயே சந்தோஷமானவர். பொருள்வளம் மிக்கவர் ஸ்வர்ண ஆகர்ஷண பைரவர்.

ஸ்வர்ணாகர்ஷண பைரவர் என்பதை தனம் தரும் பைரவர் என்று சொல்லுவோம். ஏழைகளுக்கு இவர் ஒரு வழிகாட்டி தனவந்தர்களுக்கு இவர் ஒரு கூட்டாளி. இதனால்தான் பழைய காலத்து நகரத்து மக்கள் பைரவருக்கு தொழிலில் பங்கு வைப்பது பழக்கம். அந்த பங்கை முற்றும் முழுதுமாக செலுத்தியவர்கள் இன்று கொத்தும் குலையுமாக விளங்குகின்றார்கள். இப்படிபைரவருடைய பேரருளால் பெற்ற பொருளை வெள்ளி உருண்டைகளாகவும், தங்க உருண்டைகளாகவும், நகை நட்டுக்களாகவும், காசுபணங்களாகவும், பைரவருடைய உண்டியலில் பயபக்தியுடன் செலுத்தினார்கள் பைரவர். அடியார்களுக்குபணத்தை ஈட்டிக் கொடுத்து அவர்கள் மூலம் தானும் தனத்தை ஈர்த்துக்கொண்டிருந்தார். கோவில், கோவிலைச் சார்ந்தவர்கள், கோவில் குடும்பத்தவர்கள், கோவில் குலவிளக்குகள் எல்லோருமே குன்றிவிட்ட விளக்காக ஒளிவிட்டு வாழ்ந்தார்கள்.

## தந்தையின் வடிவில் தாய்

பைரவருடைய கோப நிறைவில், சாப முடிவில் பராசக்தி பைரவரின் இடத் தொடையில் அமர்ந்தாள். இந்தக்கோலம் கோபம் தணிந்த சீலம். இந்த கோலத்தை வழிபடுகின்றவர்கள். கொடுத்து வைத்தவர்கள். வறுமை வராது. துக்கம் தொடராது. எதிர்ப்பு எழும்பாது. மகிழ்ச்சி குறையாது. எங்கு சிவமும் சக்தியும் கூடுகின்றதோ அங்கு நல்லவைகளுக்குக் குறைவில்லை. தீயவைகளுக்கு இடமில்லை தனித்து பழனியாண்டவர் இருந்தபொழுது பண்டாரமாய் விளங்கினார். அந்தக் கோலத்தில் அவருடைய உருவ அமைப்பு கோவணம் கட்டிய உடல், மழுங்க மழித்த தலை, கையிலே தண்டம், காலிலே பாதக்குறடு. இந்தக் கோலம் பண்டாரத் திருக்கோலம். பழனியாண்டவர் கோபம் தணிந்து குணம் மிகுந்து தெய்வானை கேள்வனாய், வள்ளி மணாளனாய் விளங்கினார். அப்போது பண்டாரக்கோலம் மறைந்தது. கிரீடம் சூட்டி, பட்டாடை அணிந்து, மாலை அணிந்து மங்கல அணிகள் அணிந்து, மணவாளனாய் மணந்தார். இதைப் போலவே கோபம் தணிந்து சாபம் மறைந்த பைரவர் ஸ்வர்ண பைரவியுடன் மங்கலத் திருக் கோலத்தில் வலது கையில் ஸ்வர்ண கலசத்துடன் அம்பிகையை இடப்புறத்தில் அணைத்துக் கொண்டு அருள் பாலிக்கின்றார்.

நீங்கள் சுகங்களை விரும்புகிறீர்களா? வளம்மிகுந்த வாழ்க்கையை விரும்புகிறீர்களா? நிலையான செல்வத்தை விரும்புகிறீர்களா? அப்படியானால் உடனே வாருங்கள். இலுப்பைக்குடி தனம்தரு பைரவரின் இரு திருவடிகளையும் பிடித்துக்கொள்ளுங்கள். சந்தோஷம் வந்துவிட்டது. வாழ்க்கை படகுக்கு பைரவரின் கலங்கரை விளக்கம் தெரிகிறது. பழைய கவலைகளை விட்டு விடுங்கள். நேற்று நடந்ததை நினைத்துக் கொண்டிருக்காதீர்கள். இன்று இதோ உங்கள் கையில் புது வாழ்வு வந்து விட்டது. நீங்கள் புண்ணியவான்கள். நீங்கள் சந்தோஷவான்கள். நீங்கள் பைரவரின் குடும்பத்தவர்கள்.

**தனம் தரும் பைரவா சரணம்**

  

# இலுப்பைக்குடியின் சிறப்பு

## சோமலெ

### நகரத்தார்

நகரத்தாரின் தத்துவம் "ஈட்டிய பொருளெல்லாம் இறைவன் பொருட்டே" என்பதாகும்.

சைவ சமயத்தைக் காப்பது, பேணுவது, வளர்ப்பது, பரவச் செய்வது இவையே நகரத்தார் சமூகத்தினரின் குறிக்கோள்கள் எனலாம். தேவாரம் பெற்ற தலங்களைக் கருங்கல் திருப்பணியாகச் செய்தும், புதிய கோயில்களை ஏராளமாகக் கட்டியும் நகரத்தார் செய்திருக்கும் பணி நாடறிந்தது.

18-19 ஆம் நூற்றாண்டுகளில் தென் கிழக்கு ஆசிய நாடுகள் பலவற்றில் தண்டாயுதபாணி கோயில்களை இவர்கள் கட்டினார்கள். செட்டி கப்பலுக்குச் செந்தூரான் துணை என்ற நம்பிக்கை இவர்களுடைய இரத்தத்தில் ஊறியிருப்பதால் உருவான ஒரு சில தண்டாயுதபாணி கோயில்கள், பிற்காலத்தில் பெரிய அளவில் சிவன் கோயில்களாக முழு வடிவம் பெற்றன.

கடந்த சில ஆண்டுகளாக அமெரிக்காவில் ஏற்பட்டுள்ள இந்து சமய மறு மலர்ச்சியிலும் கோயில்களைக் கட்டி வருகின்ற பணியிலும் நகரத்தார்க்குப் பெரிய பங்கு உண்டு.

இந்தக் கட்டுரையின் நோக்கம், நகரத்தார் புகழுக்குச் சங்கு ஊதுவது அன்று; பழமையைச் சொல்லிப் புதுமைக்குப் புதிய ஊக்கம் பெறச் செய்வதே ஆகும்.

பாடல் பெற்ற சிவத் தலங்கள் 274. இவற்றுள் ஏறத்தாழ 200 தலங்களில் நகரத்தார் திருப்பணியைக் காணலாம்.

### இலுப்பைக்குடி நகரத்தார்

நகரத்தார் சமூகத்தின் திருக்கோயில் பணியிலே முதலாவது இடத்தைப் பெறுபவர்கள் இலுப்பைக்குடியார்.

கோயில்களின் எண்ணிக்கை மிகுதி என்ற கணக்கு ஒருபுறமிருக்கட்டும். வரலாற்றுச் சிறப்புடைய கோயில்களில் அரிய பெரிய திருப்பணியைச் செய்தவர்கள் இலுப்பைக்குடி நகரத்தார்.

போட்டி போட்டுக்கொண்டு ஒரு ஐயா வீட்டைச் சிறந்த கோயிலை மற்றொரு ஐயா வீடு கட்டிய வரலாறும் இலுப்பைக்குடி நகரத்தாரின் அறப் பணியில் அடங்கும்.

திருக்காளத்தி என்பது ஆந்திர மாநிலத்திலுள்ள பெரிய தலம். அங்கு கோயில் கொண்டுள்ள காளத்தியப்பனுக்கு எவ்வளவோ பெரிய திருப்பணியைச் செய்திருக்கிறார்கள்.

காஞ்சிபுரம் ஏகாம்பர ஈசுவரர் கோயில் தமிழ் நாட்டின் மிகப்பெரிய கோயில்களுள் ஒன்று. அதன் பெருமையும் புகழும் அளவிடற்கரியன.

இறைவன் சம்பந்தர்க்குப் படிக்காசு வழங்கிய இடம் திருவீழிமிழலை. இங்கு சிற்பக் களஞ்சியமாக ஒரு கோயிலை உண்டாக்கி

யிருக்கிறார்கள். திருக்கொள்ளம் புதூர், தில்லை வளாகம், இலங்கையின் புகழ் பெற்ற கண்டி மாநகரில் விநாயகர் கோயில் திருப் பணிகளும் குறிப்பிடத்தக்கவை.

இந்தக் கோயில்களில் சிலவற்றைக் கட்டியபோது, இலுப்பைக்குடி நகரத்தார்க் கும் மடாதிபதிகளாகிய ஆதீனகர்த்தர்களுக் கும் கடுமையான கருத்து வேறுபாடுகள் ஏற் பட்டன. எனினும் எடுத்த திருப்பணியை இனிது முடித்தார்கள். அதே சமயத்தில் தங் களுடைய குலப் பெருமையையும் வாழையடி வாழையாக, மானத்தைப் பெரிதாக மதிக்கும் பண்பையும் விட்டுக் கொடுக்கவில்லை. இந்த நிகழ்ச்சிகளை விரிவாகக் கூற இக்கட்டுரை இடம் தராது.

இலுப்பைக்குடிக் கோயில் நகரத்தார் சிலர், சிவகங்கை அரசு குடும்பத்துக்கு அன் புடன் செய்த உபசாரங்களும் பலவாகும்.

கோவிலூர் மடத்தில் கொலுவீற்றுப் புகழ்சேர்த்த துறவிகள் சிலர் குடிப்பிறப்பால் இலுப்பைக்குடி நகரத்தார் ஆவர்.

### இலுப்பைக்குடிக் கோயில்

இதுவரை இலுப்பைக்குடி நகரத்தாரின் பெருமையைச் சொன்னோம். இனி இவர்க ளுக்கு உரிய நகரக்கோயிலின் தனித்தன்மை களை இயம்புவோம்.

### *1985 - திருப்பணி*

பல ஆண்டுகளுக்குப் பிறகு இக்கோயில் மிக நன்றாகப் புதுப்பிக்கப்பெற்றிருக்கிறது. இராஜ கோபுரம் இல்லாத குறையும் நிறைவு செய்யப் பெற்றிருக்கிறது.

சேங்கைக்கு அருகில் இருந்ததாகக் கருதப் படும் ஒரு பெருமாள் கோயிலின் இடிபாடு களுக்கு இடையே கிடந்த மகாவிஷ்ணு விக்கி ரகம் இந்தக் குடமுழுக்கு விழாவின்போது நகரக் கோயிலின் சுற்றுப் பிராகாரத்தில் பிரதிட்டை செய்யப்பெற்றிருக்கிறது.

### பெருமை

ஒரு கோயிலுக்குப் பெருமை சேர்ப்பது அதன் மூர்த்தி, தலம், தீர்த்தம் என்பர். இம் மூவகைச் சிறப்புக்களோடு மட்டும் அமைந்து விடாமல் கலை வளமும், இலக்கியச் சிறப்பும், சித்தர் தொடர்பும், திருவிழாப் பெருமையும் இக் கோயில் பெற்றிருக்கிறது.

### *மூர்த்திகளின் கீர்த்தி*

இக்கோயில் நுட்பமான வேலைப்பாடு களை உடையது.

நடராசப் பெருமான் சந்நிதிக்கு எதிரில் உள்ள ஒரு தூணில் சிறிய அளவில், அதா வது இரண்டு விரல் கட்டை உயரமே கொண் டதாக, விநாயகர் வடிவம் அருமையாகப் படைக்கப் பெற்றுள்ளது. இதைக் காணும் இளைஞர்கள் எண்ணெய் இட்டும், சந்தனம் தேய்த்தும் இந்தச் சிற்பத்தைச் சேதப்படுத் தத் தொடங்கியிருக்கிறார்கள். தூணின் உரிய பகுதியில் இரும்புக் கம்பிகளால் வலை போட்டு இந்தச் சிற்பத்தைப் பாதுகாக்க வேண்டுவது. இலுப்பைக்குடி நகரக் கோயில் அறங்காவலர்களின் கடமை ஆகும்.

பெரும்பாலான கோயில்களில் உள்ள லிங்கம், கல்தச்சர்களான ஸ்தபதிகளால், உளி கொண்டு பொளியப்பட்டது. இந்தக் கோயிலின் மூலவர் தானே முளைத்தலிங்கம். சுயம்பிரகாசர் என்றும் தான்தோன்றி ஈசு வரர் என்றும் பெயர் பெறுவதிலிருந்தே இதனுடைய அருமை உணரத்தக்கது.

அம்மனின் பெயர் சௌந்தர நாயகி. தனித்தமிழில் இதை வடிவுடைய நாயகி என் போம். வடிவுடையாள், வடிவு என்ற பெயர் களை நகரத்தார் பெண் குழந்தைகளுக்கு இடலாம்.

இந்தக் கோயிலில் அடுத்த படியாகக் குறிப்பிட வேண்டிய மூர்த்தி வயிரவர். வயிரவநாத சுவாமியே இந்தக் கோயிலில் வழிபடுவர்களுடைய பிராத்தனையை வழங் குபவராக இருந்து வருகிறார் என்பது, நாட் டார் நகரத்தார் அனைவருடைய நம்பிக் கையாகும். உக்கிரமான இந்தத் தெய்வத் திற்கு ராஜ அலங்காரம் செய்திருக்கும் பொழுது நாம் காணும் காட்சி கண்கொள் ளாக் காட்சியாகும். ஏனைய வயிரவர் களுக்கெல்லாம் ஒரு நாய் மட்டும் இருக்க, இந்த வயிரவருக்கு இரண்டு நாய்கள் இருப் பது கூர்ந்து கவனிக்கத்தக்கது.

**தலம்**

நகரக் கோயிலாகிய மாத்தூர் கோவில் தொன்று தொட்ட பெருமைக்குரிய கோவிலூர் கொற்றவாள் ஈசுவரர் கோவில், அரியக்குடி பெருமாள் கோவில் சூழ அமைந்தது, இலுப்பைக்குடி.

இலுப்பைக்குடி கோயிலுக்கு உரிய தல விருட்சம் வில்வம்.

**தீர்த்தங்கள்**

அம்மன் சந்நிதிக்கு எதிரே பிரம்ம தீர்த்தமும், கோயிலுக்கு மேற்கே சிவ கங்கைத் தீர்த்தமும், கோயிலுக்கு வடக்கே கௌரி தீர்த்தமும் இத்தலத்தில் உள்ளன.

**சித்தர் தொடர்பு**

கொங்கணச் சித்தர் வழிபட்ட பெருமை இக்கோயிலைச் சாரும். நடராசர் சந்நிதிக்கு வலப்புறத்தில் கொங்கணச் சித்தரின் அழகிய விக்கிரகம் உள்ளது. இது கலைப்படைப்பாக அமைந்த உற்சவத் திருமேனியாகும்.

நாகர் மண்டபத்தில் கல் வடிவாக அமைக்கப்பட்டிருக்கின்ற தல விருட்சத்தில் தான்தோன்றி ஈசுவரருக்கு கொங்கணச் சித்தர் அபிஷேகம் செய்யும் காட்சி, கல்லில் செதுக்கப்பட்டிருக்கிறது.

**திருவிழாச் சிறப்பு**

நகரக்கோயில்கள் ஒன்பதிலும், இந்தக் கோயிலில் மட்டுமே பிரம்மோற்சவம் நடைபெறுகிறது. அவ்விழாவின் போது சித்திரை மாதத்தில், சித்திரை நட்சத்திரத்தில் வயிரவருக்கு வடை மாலை சாத்துவதும்அக்கினிச் சட்டி எடுப்பதும், பால் குடம் எடுப்பதும் மரபாக உள்ளன.

**இலக்கியச் சிறப்பு**

வன்றொண்டர் அவர்களின் மாணவருள் ஒருவரும், ஏறத்தாழ நூறு ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்தவருமான தஞ்சாவூர் சதாவதானம் சுப்பிரமணிய ஐயர் என்ற பெரும் புலவர், இலுப்பைக்குடி தல புராணத்தை இயற்றியுள்ளார்.

இது 1035 பாடல்கள் உடையது. இப்பாடல்களில் சில, கவிச்சக்ரவர்த்தி கம்பருடைய பாடல்களுக்கு இணையானவை. மகாமகோபாத்தியாய டாக்டர் உ.வே. சாமிநாத ஐயர் அவர்களுடைய அணிந்துரையுடன், எழுபது ஆண்டுகளுக்குமுன் இந்த நூல் அச்சிடப் பெற்றது.

இப் புராணத்தில் நகரத்தார் வரலாறு சுருக்கமாகச் சொல்லப்படுகிறது. நம் சமூகத்தாரின் நாணயத்தை இப்புராணம் பலபடப் பாராட்டுகிறது. சில பாடல்களில் அரிய குறிப்புகள் இடம்பெற்றிருக்கின்றன. உரையுடன்இதைப்பதிப்பிப்பது, இலுப்பைக்குடி நகரத்தார் கடமை ஆகும்.

**கோயிலின் வரலாறு**

இக்கோயில் 1,500 ஆண்டுகளுக்கு முன் பாண்டிய அரசர்கள் காலத்தில் ஒரு வில்வ மரத்தின் நிழலில் தோன்றியது. பிறகு மண் சுவர், நாட்டு ஓடு ஆகியவற்றுடன் சற்று விரிவாக இருந்திருக்கிறது.

ஓராயிரம் ஆண்டுகளுக்கு முன்பாண்டிய அரசர்கள் இந்தக் கோயிலை நகரத்தார்களுக்கு வழங்கியிருக்கிறார்கள். செம்பூரான் கல்லில் நகரத்தார் இந்தக் கோயிலைக் கட்டினார்கள்.150 ஆண்டுகளுக்குமுன் நகரத்தார்கள் இதைக் கருங்கல் திருப்பணி ஆக்கினார்கள். அக்காலத்தில் அருமையான சிற்பங்கள் செதுக்கப்பட்டன.

**விக்கிரகங்கள்**

பல்லவர் காலத்து விக்கிரகங்கள் தவிர முற்கால, இடைக்கால, பிற்காலப் பாண்டியர் காலத்து விக்கிரகங்கள், நாயக்கர் காலத்து விக்கிரகங்கள், நகரத்தார் செய்து வைத்த விக்கிரகங்கள் ஆகிய எல்லாம் இருப்பதால், இக்கோயிலின் தொன்மை உறுதிப்படுகிறது.

கோயில் கட்டிடக் கலை வரலாற்றில் நகரத்தார்களின் பாணியை அறிவதற்கு இக்கோயில் முக்கியமான சான்றாகத் திகழ்கிறது என்று தொல்பொருள் ஆய்வாளர் முடிந்த முடிவாகக் கூறுகின்றனர். □

# இலுப்பைக்குடிக் கோவில் கும்பாபிஷேக யாகசாலை

S. P. S. *மெய்யப்பன்*

யாகசாலேப்பணி தேவகோட்டைப் பங்காளிகட்குத் தரப்பெற்ற பணிகளிலொன்று. அதன் அமைப்பையும் நிர்வாகத்தையும் நேரில் கவனிக்கத் தேவகோட்டைப் பங்காளிகள் 19 பேர்களை தேவகோட்டையார் தனிக் கூட்டமொன்றில் தேர்வு செய்து, அப் பொறுப்பை ஒப்புவித்திருந்தனர். அவ்வனை வரும் யாகசாலேப் பணிகளில் வைதீகம், சாஸ்திரம்—ஏன், லௌகீகமுங் கூடச் சிறிதும் வழுவாது தம் தம் அனுபவங்களை யும் பரிந்துரைகளையும் வழங்கினர். அவை அனைத்தையும் அகமகிழ்வோடு ஏற்று, அத்துடன் தனது ஆழ்ந்த அனுபவத்தையும் நிர்வாகத் திறனையும் இழைந்து கலந்து, முன் நின்று பணியாற்ற முற்பட்டோர் அனைவரையும் அரவணைத்துக் கொண்டு, யாகசாலேயைக் கண்கொள்ளாக் கயிலேயங்கிரியோ எனப் போற்றும் வண்ணம் அமைத்துநடாத்தித் தந்த பெருமை தேவகோட்டை சிவ நெறிச் செல்வர் திரு. கி. கரு. ராம. சாமிநாதன் செட்டியார் அவர்களைச் சாரும். அவர்களோடு அப்பணியில் ஒத்துழைத்தவர்களில் சிறப்பாக திருவாளர்கள் ராம. லெ. லெக்ஷ்மணன் செட்டியார், S. P. S. மெய்யப்பன், அரு. ராம. சுப்பையா செட்டியார், சோம. பழனியப்ப செட்டியார், மு. ராம. லெ. ராம. அண்ணாமலே செட்டியார், வயி. யே. மா.ஏகப்பசெட்டியார் ஏனையோர் குறிப்பிடத்தக்கவராவர்.

யாக சாலேயின் உக்கிராணம் கோயிலின் உள்ளே அமைக்கப் பெற்றிருந்தது. யாக சாலைக்குத் தேவையான ஆகமப் பொருட்களை அங்கு குவித்து வைத்திருந்தனர். பொருட்கள் வகைப்படுத்தப்பட்டு தட்டுக்களிலும் கூடைகளிலும் அழகுற அடுக்கி வைக்கப்பட்டிருந்தன.

மேலும், குறிப்பிட்ட நேரங்களில் அப் பொருட்களை வேளா வேளைக்கு யாகசாலே பூஜைக்கு அனுப்பி வைத்த அழகும், ஒழுங்கு முறையும் பல்லாற்றானும் பயன்தர வல்ல தாகும்.

மேலும், ஒவ்வொரு கால யாக கால பூஜை முடிந்ததும் விநியோகம் செய்யப் பெற்ற பிரசாதங்களின் சுவையோ சுவை, அருஞ்சுவை; தெவிட்டாத தேன் சுவை யாகும்.

சர்வ சாதகம் திருக்கோலக்கா திரு. ராமு சிவாச்சாரியாரைத் தலேவராகக் கொண்டு அறுபது சிவாச்சாரியார்களுடன் 39 யாக குண்டங்கள் அமைத்துப் பெருந் திட்டமாக வகுத்து யாகசாலேப் பணிகள் மேற்கொள்ளப் பட்டன. சிவாச்சாரியார்கள் அனைவரும் தாமரைத் தடாகத்தில் யாக சாலேச் சந்தியாவந்தனம் செய்து பட்டுத் தலேப்பாகை கட்டி அணிவகுத்துச் சென்ற அழகுக் காட்சி ஆன்மீகத்திற்கு முத்திரை சேர்ப்பதாகும்.



## மக்கள் பிரார்த்தனை பயன் பெற்றது!

மாண்புமிகு முதல்வர்

**எம். ஜி. ஆர்.**

அவர்களிடமிருந்து

கற்போம்!

நோய் வாய்ப்பட்டால் சிகிச்சை பெறும் போது, பிரபல டாக்டர்களின் கவனிப்பும் மருத்துவமும் மட்டும் நம்மைக் குணப்படுத்தி விடாது. டாக்டர்களுடன் நோயாளியும் ஒத்துழைக்க வேண்டும்.

இந்தச் சீக்கிலிருந்து விடுதலை பெற்று முழு உடல் பெற்றே தீருவேன் என்ற உறுதியும் அதற்கு வேண்டிய தைரியமும் நோயாளிக்கு இருப்பது இன்றியமையாதது.

இந்த வகையில் எல்லோருக்கும் வழி காட்டியாகவும் முன் உதாரணமாகவும் விளங்குகிறார் நமது முதல்வர் மாண்புமிகு எம். ஜி. ஆர். அவர்கள்.

அவர்கள் காட்டிய வழியைப் பின்பற்று வோம்.





ஸ்ரீ துர்க்கைச் சித்தர் அருளிய

# ஸ்ரீ சௌந்தரநாயகி மாலை

ஸ்ரீ துர்க்கைச் சித்தர் அருளிய ஸ்ரீ சௌந்தர நாயகிமாலை அருள்வளம் தருவது. இதை வெள்ளிக் கிழமைகளிலும், பௌர்ணமியிலும் படிப்பவர்கள் சிறந்த வாழ்வை அடைவார்கள். இதில் சித்தர்கள் பூஜித்த வாலை இழையோடுகிறது. கல்விச்செல்வம், வாக்கு வளம், தனச்செழிப்பு உண்டாகும். பாடல்களைப் பாடி வெள்ளை அல்லிமலர், முல்லை மலர் இட்டு வழிபடின் அன்னை அருள் கூடும்.

-ஜெயதுர்க்கா !

பொங்கிடும் அழகி பொன்னகை எழிலி
பொற்பினில் வளர் மகளே
சங்கிடும் ஒலியே சங்கரன் மனையே
சபையினில் தலை மகளே
எங்களின் தாயே எழில்மிகு மாயே
எருதிவர் மலை மகளே
தங்கிடும் அருளே தவம்மிகு கனியே
தலைமணி சௌந்தர நாயகியே !

இடர்அறு இசையே இன்முக நகையே
இனிதென எழும் மகளே
சுடர்மிகும் சூலி சுபநலக் காளி
சுருதியின் புகழ் மகளே
படர்நல வித்தே பண்டிதர் முத்தே
பயம் ஒழி பண் மகளே
மிடறினில் நஞ்சை மின்னிட ஒளித்தான்
மயங்கிடு சௌந்தர நாயகியே

செந்தழல் வடிவே செந்தமிழ் உருவே
செபம்தரு செழு மகளே
வந்தனை நகையே வறுமையின் பகையே
வனிதையே வன மகளே
சிந்தனை நிறைவே சிற்சபை உறைவே
சிவையெனும் பழ மகளே
கந்தனை ஈன்ற கண்களை மயக்கும்
கலைமணி சௌந்தர நாயகியே

நாட்டிய மணியே நாடுவோர் அணியே
நாற்றிசை வாழ் மகளே
பூட்டிய ரதமே புலமையின் முகமே
பூரணம் பொழி மகளே
காட்டினில் வழியே கனிந்திடும் விழியே
காவலாய் வரு மகளே
கேட்டினைக் கெடுத்து கேட்டதைக் கொடுத்து
காத்திடும் சௌந்தர நாயகியே

இன்பத்தின் தேனே இயல்பினில் மானே
இருடியர் நினை மகளே
அன்பரின் குடியே அரக்கரின் மிடியே
அணைத்தனை அருள் மகளே
உன்னருள் சுரக்க என்னையே மறக்க
உதவிடும் உயிர் மகளே
பொன்மணி விளக்கே பொலிவுறும் கிழக்கே
பொருள் மணி சௌந்தர நாயகியே

துர்க்கையும் நீதான் துணையினி நீதான்
துதித்திடத் தொடர் மகளே
கற்பகம் நீ தான் கருணையும் நீ தான்
கலியினில் ஒளிர் மகளே
பர்வதம் நீ தான் பலநிதி நீ தான்
பகலெனப் படர் மகளே
உற்பவம் தீர்த்து உமையென வந்து
உயர் தரு சௌந்தர நாயகியே

மங்கள மகளே எங்களின் புகலே
மலர்ந்தனை மயில் மகளே
செங்கயல் விழியே செம்மையின் வடிவே
செயம் தரு செயிற் மகளே
பங்கயச் சரமே பலன்தரு அறமே
பனிமொழி பகர் மகளே
எங்களின் குடிக்கே எழில்தரு விளக்கே
எம்சிவை சௌந்தர நாயகியே

ஐங்கார வித்தே அருள் ஒலி வாக்கின்
ஐயை சக்தி சக்தியளே
கிலீங்கார முத்தே கிளிமொழி மாயா
கிண்கிணி சக்தி சக்தியளே
சௌவெனும் செகத்தி சௌந்தர முகத்தி
சகலமும் சக்தி சக்தியளே
ஜெய ஜெய சக்தி மங்கள பாலா
ஜெயந்தரு சௌந்தர நாயகியே

## திவ்வியமாய் வாழ்க சிறந்து !

K. KR. RM. சாமிநாதன் செட்டியார்
தேவகோட்டை

ஒப்பில் உணவும் உயர்ந்த நன்னீராட்டும்
தப்பிலாது எம்மர போர் தந்த பெருஞ்
செல்வத்தால்
இப்படியோர் போற்ற இனிதே அமைந்தது
காண்
செப்பும் வயிரவன் நற்சீர்

உண்டோர் வியந்தார் உணவின் உருகியதனே
கண்டோர் வியந்தார் காணரிய யாகத்தை
விண்டுரைத்தார் யாரும் வியனழகு
கோபுரத்தை
பெண்களோடு ஆண்கள் பிணைந்து.

இவ்விதமாய்ச் செய்த இலுப்பைக்குடி
மரபோர்
பவ்வியமாய் நாளும் பரம்பரை கூடிவர
நவ்வியமாய் மாடுமனே நன்மக்கள்
-சுற்றமொடு
திவ்வியமாய் வாழ்க சிறந்து.

## வழி வழி வணிகர்

நெடுநுகத்துப் பகல்போல
நடுவு நின்ற நன்னெஞ்சினோர்
வடுவஞ்சி வாய் மொழிந்து
தமவும் பிறவும் ஒப்பநாடிக்
கொள்வதூஉம் மிகை கொளாது
கொடுப்பதூஉம் குறை கொடாது
பல்பண்டம் பகர்ந்து விசுங்
தொல் கொண்டித் துவன்றிருக்கை

-பட்டினப்பாலை

# இலுப்பைக்குடியில் நடைபெற்ற வகை வகையான விருந்துகளின் விவரம்

**தை மாதம் 24உ**

**6.2.85உ இரவுசாப்பாடு**

தயிர் பச்சடி
மாங்காய் சுவீட் பச்சடி
காளிப்பிளவர் காரகறி
விஜிடபுள் கூட்டு
உருளைக்கிழங்கு வருவல்
வெந்திய மாங்காய்
தக்காளி+பூண்டு ஊறுகாய்
கத்தரிக்காய் சாம்பார்
தக்காளி ரசம்
மோர்

**7.2.1985உ காலை சிற்றுண்டி**

கோதுமை ரவா உப்புமா
இட்லி
சட்னி
சாம்பார்
காப்பி

**பகல் சாப்பாடு.**

தயிர் பச்சடி
தக்காளி சுவீட் பச்சடி
பீன்ஸ் பருப்பு உசிலி
கருணைக் கிழங்கு மசியல்
வெண்டிக்காய் புளிமண்டி
புடலங்காய் கூட்டு
பூசனிக்காய் சாம்பார்
தக்காளி ரசம்
பூந்தி பாயசம்
அப்பளம்
பருப்பு
நெய்
மோர்

**இரவு சிற்றுண்டி**

பூசனிக்காய் குல்கந்து
இட்லி
பூரி மசாலா
அரிசி உப்புமா
சட்னி
கொஸ்த்து
காப்பி

**8.2.1985உ**

**கும்பாபிஷேகத்தன்று**

**காலை சிற்றுண்டி**

அசோகா
அரிசி உப்புமா
இட்லி
சட்னி
சாம்பார்
காப்பி

**மத்தியானச் சாப்பாடு**

தயிர் பச்சடி
தக்காளி சுவீட் பச்சடி
உருளைக்கிழங்கு காரகறி
அவியல்
வாழைக்காய் வறுவல்
கத்தரிக்காய் புளிமண்டி
மாங்காய் ஊறுகாய்
கத்தரிக்காய் முருங்கைக்காய் சாம்பார்
தக்காளி ரசம்
சேமியா பாயசம்
வடை
அப்பளம்
பருப்பு
நெய்
மோர்

**இரவு சாப்பாடு**

கல்கண்டு சாதம்
சாம்பார் சாதம்
எலுமிச்சம் சாதம்
தயிர்ச் சாதம்
உருளைக்கிழங்கு வறுவல்
பூண்டு ஊறுகாய்
மாங்காய் ஊறுகாய்.

# இராஜயோகம்

இராஜயோகத்தின் பயிற்சி :

முதலில் நாடிசுத்தி செய்யவேண்டும். எந்த நாசியில் சுவாசம் நடக்கின்றதோ அந்தப்புறம் நன்ருக சுவாசத்தை விட்டு அதே நாசியில் நன்ருகச் சுவாசத்தை இழுத்து அந்த நாசியை கட்டை விரலால் அடைத்துக் கொண்டு மற்ருெரு நாசியில் சுவாசத்தை விடவேண்டும்.

இதைப்போலவே மற்ருெரு நாசியில் சுவாசத்தை நன்ருக விட்டு பிறகு அதே நாசியில் சுவாசத்தை நன்ருக இழுத்துப் பிறகு அந்த நாசியை கட்டை விவரால் அடைத்துக் கொண்டு மற்ருெரு நாசியில் சுவாசத்தை விடவேண்டும்.

இந்தச் சுவாசப் பயிற்சியை ஒவ்வொரு முறையிலும் 5, 5 முறை செய்ய வேண்டும். இதுவே நாடிசுத்தி ஆகும்.

இதற்கு மேல் தூல பஞ்சாட்சரத்தைப் பத்துத்தரம் சொல்ல வேண்டும். தூல பஞ்சாட்சரம் ஐந்தெழுத்து.

பிரசாபதி (ந காரம்) மணிபூரகம் (ம காரம்) அநாதகம் (சி காரம்) விசுத்தி (வ காரம்) ஆக்நேயம் (ய காரம்)-ஓம்நமசிவாய.

இந்த பஞ்சாட்சரத்தைப் பத்துத்தரம் சொல்லி மனதைப் புருவமத்தியில் குழுக்குறியாக நினைத்துத் தியானம் செய்ய வேண்டும்.

அந்தத் தியானத்தின் மூலம் புருவமத்தியில் ஒரு நமச்சல் ஏற்படும். அப்போது ஜலத்தை ஒரு விரலால் எடுத்துப் புருவமத்தியில் தடவினல் அந்த நமச்சல் நின்றுவிடும். அப்படி இந்தப் பயிற்சியை ஒரு மாதம் நடத்த வேண்டும். அதன் பிறகு கலேத் தத்துவத்தை உணரவேண்டும். வலதுநாசியில் சுவாசம் நடப்பது சூரியகலே என்றும், இடது நாசியில் சுவாசம் நடப்பது சந்திரகலே என்றும் சொல்லப்படும். இந்த சுவாசம் இரண்டு மணிநேரத்திற்கு ஒருமுறை மாறி, மாறி நடக்கும். இதை உணர வேண்டும்.

சந்திர கலே நடக்கும்போது சூரிய கலேயில் வாசியை மாற்றுவதற்கு இடது கையைச் சாய்த்து இடது புறம் சாய்ந்திருந்தால் சூரிய கலேயாக மாறிவிடும்.

அதேபோல வலது புறம் நடக்கும் சுவாசத்தை, அதாவது சூரிய கலேயைச் சந்திர கலேயாக மாற்ற வேண்டும் என்ருல் வலது கையைச் சாய்த்து வலது புறம் சாய்ந்திருந்தால் இடது நாசிக்கு அதாவது சந்திர கலேக்குச் சுவாசம் மாறும்.

சுவாசத்தை சுழுமுனேயாகச் செய்ய வேண்டுமென்ருல் அதை குருமுகமாகத் தெரிந்து கொள்ளல் வேண்டும். குருமுகமாகத் தெரிந்து கொண்டு பிராணுயம் செய்யத் தொடங்க வேண்டும். பிராணுயம் செய்யத் தொடங்கும் காலத்திலே சூக்கும பஞ்சாட்சரத்தைச் சொல்லவேண்டும். சூக்கும பஞ்சாட்சரம் 'சிவாய நம' என்பதாகும். இதை நடத்துங் காலத்தில் அவ்வப்போதும் குருவினுடைய அனுக்ரஹம்நெருங்கிக் கொண்டேயிருக்க வேண்டும்.

பிராணுய பயிற்சி நன்ருகத் தெரிந்தால் ஒவ்வொரு சுவாசத்தை மேலே ஏற்றும் பொழுதெல்லாம் மாங்கிசமாக 'சிவாய நம ஓம்' என்று சொல்லி ஏற்ற வேண்டும்.

அப்போது 'சிவாய நம ஓம்' என்ற சத்தம் திருச்சிற்றம்பலத்தில் உள்ள உச்சியைப் போய் அடைந்து அங்கேயிருக்கும் [1008] நரம்புகளிலே கலந்து நரம்புகளின் மூலம் சரீரம் முழுதும் பரவுகிறது.

இவ்வாறு செய்து கொண்டே வந்தால் சாகாக் கல்வியின் தத்துவத்தை உணர முடியும்.

மேலும் பிராணுயம் என்று சொல்லப் பட்ட தியானத்தை பயிற்சி செய்துகொண்டு வந்தால் நீரிழிவு, பக்கவாதம், இரத்தக் கொதிப்பு, மாரடைப்பு போன்ற வியாதிகள் நம்மையடையாது. இவையிருந்தாலும் குறைந்து உடல் நலம் நன்றாக இருக்கும்.

— திருச்சிற்றம்பலம் :—

# மார்கழி மாதம் ஆருத்திரா தரிசனத்தில் இலுப்பக்குடிக் கோயிலில் தொன்றுதொட்டு கூறப்படும் கட்டியம்

உ

சிவமயம்

ஏகத்திருலோகய திருவாண தீரருள சிருஷ்ட்டி ஸ்திதி ஸம்ஹார திருரூப்வ அனுக்கிரக கருணாகர சங்கிலிய நாடாகிய பிரம்பு நாட்டில் தெக்ஷண கைலாசபுர வாசனாகிய இலுப்பை நகர் ஸப்த புஷ்கரணி தீரே சவ்வ வில்வராண்ய க்ஷேத்திர வாசராகிய அகிலாண்ட கோடி பிரமாண்ட நாயக கோடி சூர்யப் பிரகாச காளகண்ட திருநேத்ர கெங்காதர சந்திரசேகர மான் மழுதார்ய சதுர்புஜ சனாதன சர்வ ஜீவோதாய சௌந்தர நாயகி சமேதராய் எழுந்தருளி இருக்கும் சமயம் பிரகா சேசுவரர் சன்னதியில் ஆதி சண்டிகேஸ்வரராகிய லோகதாபரஞ் சூழ வையகத்தில் சண்டீஸ்வரர் கரம்சைக் கொண்டு பண்டை ஆரம் செய்தான். கெங்காதரன் சென்னியில் மேல்வைத்து ஆதிசண்டேஸ்வர நாயனார் திருவாய் மலர்ந்தருளியபடி நம் நாயகரான சுயம்பிரகாசேஸ்வரர் நாயனார் சன்னதியில் சாலிவாஹன சகாப்தம் கலியுகத்தில் ரத்தாட்சி ஞு மார்கழி மீ 21உ ஸ்திர வாசம் மிருகசீருஷ நட்சத்திரம் இதுபோல் தொடர்ந்து (ஒவ்வொரு ஆண்டும், வருஷம் மாறும்) இப்படி யொத்த சுபயோக சுபதினத்தில் வாதபுரீஸ்வர சுவாமிக்கி ரக்ஷாபந்தனம் செய்து ஸ்ரீசபாநாயகர் சன்னதியில் திருவெம்பாவை ஓதி ஷி மீ 22 உ பானுவாரம் திருவாதிரை நட்சத்திரம் கூடிய சுபயோக சுபதினத்தில் மகா அபிஷேகம் கொண்டருளி வாதபுரீஸ்வர சுவாமிக்கி பரிவட்டம் கட்டி நற்சாந்து சாத்தி திருவெம்பாவை ஓதி சதுர்வேத பாராயணம் செய்து தேவாரம், திருவாசகம், திருப்பல்லாண்டு, திருப்புராணம், திருக்கோவையார் அருளியபடி ஸ்ரீசபாநாயகரிடத்தில் ஸ்ரீ வாதபுரீஸ்வரர் ஐக்கியமாகி ஸ்ரீசபாநாயகர் ஆருத்ரா தரிசனம் கொடுத்து வீதிக்கு எழுந்தருளியாகி வருகையில் ஸ்ரீகிருஷ்ண கங்கை யாத்திரைக்கு எழுந்தருளினார் என்று ஸ்ரீகௌரி அதிக கோபங் கொண்டு திருக்கோயில் புகுந்து திருக்காப்பு இட்டுக் கொண்டு இருக்கையில் நம்மள் திருநாவலூர் சுந்தரமூர்த்தி சுவாமியை வரவழைத்து ஊடல் தீர்க்கும்படியாய் பரிவட்டம் கட்டி சுவாமி சன்னிதானத்திலும் பார்வதி சன்னிதானத்திலும் சாமதான வேத பாராயணமும் செய்து தேவாரம், திருவாசகம், திருப்பல்லாண்டு, திருவிசைப்பா, பெரிய புராணம் சேதி பரிவட்டம் கட்டி பெரிய புராணம் அருளி ஊடல் தீர்த்து பார்வதிக்கு அதிக சந்தோஷம் ஆகி நம்பக்கத்துக்கு அருளிய சிவகெங்கை முத்து விஜய கௌளரி வல்லவ பெரிய உடையனார் தேவருக்கு அஷ்ட ஐஸ்வர்யமும் மண்டலாதிபத்தியமும் போக போக்கியமும் புகலிடம் கொடுத்த பட்டணத்தில் சூடாமணி புரமான நம் பக்தராகிய நகரத்தார்க்கு அஷ்ட ஐஸ்வரிய புத்திர பௌத்திர சகலசம்பத்தும் வெகுதனமும் உண்டாவதாக வேணுமென்று திருவினையாட்டம் விட்டது. கீழ்அணை, உஞ்சனை நாட்டில் உஞ்சனை மாகாணத்தில் தேவதாயம் இலுப்பக்குடி தேவஸ்தானம் சர்வமான்ய கிராமம் (1) மேற்படி மாகாணத்தில் கள்ளிவயல் கிராமத்தில் சர்வமான்ய நிலமும் அமராவதி நாட்டில் அமராவதி மாகாணத்தில் இடையூர் கிராமம் (1)ம் ஷி நாட்டில் ஷி மாகாணத்தில் வெட்டியூர் கிராமம் (1) ஷி மாகாணத்தில் குடிக்காட்டான் ஏந்தல் கிராமம் (1)ம் ஷி மாகாணத்தில் குறிச்சியேந்தல் கிராமம் (1)ம் வடபோகி நாட்டில் ஜெயங்கொண்டான் மாகாணத்தில் கண்டிரான் வயல் கிராமம்(1)ம் ஷ மாகாணத்தில் பாரா வயல் கிராமம்(1)ம்ஷிமாகாணத்தில் பெரிய நாயனார் வயல் கிராமம் (1) தஞ்சாவூர் ஜில்லா, அறந்தாங்கி தாலுகா ஆளப்பிறந்தான் கிராமம்(1)ம் இடையூர் விடுதி (1)ம் இன்னும் நகைகள் ரொக்கம் கோவில்கள் எல்லாம் உனக்குத் தந்து அருளும்.

# வரி மிச்சம் - புண்ணியம் அதிகம்

எஸ்.டி. அண்ணாமலை, B.Com., F.C.A., ஒக்கூர், ஆடிட்டர் (சேலம்)

உடல் வலுவும் பொருள் வலுவும் இல்லாதவன் யோக்கியனாய் இருப்பதிற் பெருமையில்லை. வயிற்றுச் சோற்றுக்கு வழியற்றவன் உண்ணாவிரதம் இருப்பதிற்புண்ணியமில்லை. வளமான வாழ்வும் அளவற்ற சிறப்பும் கொண்டு வாழ்ந்தவர் நம் இனப் பெரியார் பட்டினத்தடிகள். அவர் செய்கையும் வாக்கும் அர்த்தமும் பெருமையும்படைத்தவை.

மனித வாழ்வின் குறிக்கோள் ''பிறவாப் பெருநிலை எய்தி இறைவனை அடைவது'' என்பர் பெரியோர். பட்டினத்தாருக்குஇறைவன் திருமகனாகத் திகழ்ந்து ''காதற்ற ஊசியும் வாராது காண் உம் கடை வழிக்கே'' என் உபதேசம் செய்து மறைந்ததும் அவர் வாழ்வின் குறிக்கோள் தெளிந்து செல்வச் சிறப்புக்களின் உதவாத் தன்மையையும் மாயா நிலையினையும் உணர்ந்தார்.

நம் இனக்கவிஞர் கண்ணதாசன் ''வீடு வரை உறவு, வீதி வரை மனைவி, காடு வரை பிள்ளை, கடைசி வரை யாரோ'' என்று திரைப்படப்பாட்டு எழுதினார். அதற்கு மூலமாகப் பட்டினத்தடிகள்:

''அத்தமும் வாழ்வும் அகத்துமட்டே
விழி அம்பொழுக
மெத்திய மாதரும் வீதி மட்டே இருகை
தலைமேல் வைத்துக்
கத்தியழும் மைந்தரும் சுடுகாடு மட்டே
பற்றித் தொடரும் இருவினைப்
புண்ணிய பாவமுமே''

என்று தொடர்ந்து வருவது புண்ணிய பாவ பலன்கள் என்று அறுதியிட்டுக் கூறிச் சென்றார்.

வினை விதைக்கத் தினை விளையாது. ''வையத்து அறம்பாவம் என்று அன்றிடாருக்கு இன்று வெறும் பானை பொங்குமோ மேல்'' என்று நல்வினைப் பயன்களின் நலனை ஔவைப்பாட்டியும் சொன்னாள்.

சேர, சோழ, பாண்டியர்களுக்குப் பிறகு வழிவழியாகச் சைவப்பணி தமிழ்ப் பணியோடு திருப்பணிச் செல்வர்களாகவும் திகழ்பவர்கள் நகரத்தார்கள். தானதருமங்களும் குறைவின்றிச் செய்து வருகிறார்கள்.

புண்ணியத்தின் பலாபலன்களை எழுத்தில் வடிக்க முடியாது. அட்சய பாத்திரத்தில் ஒட்டிக் கொண்டிருந்த ஒரு கீரையையும் ஒரு பருக்கை அன்னத்தையும் திரௌபதி கண்ணபெருமான் வசம் தந்து, பெருமாள் உலகமுண்ட மலர் வாயில் வைத்துச் சுவைத்ததால் பாண்டவர்களிடம் விருந்துக்கு வந்த துருவாச முனிவருக்கும், முனி கணங்களுக்கும் வயிறு உப்பிக் கழுத்து வரை உணவு முட்டிய வரலாற்றை மகாபாரதம் கூறும். இறைவனை நினைந்து செய்யும் நற்செயல்களின் பலாபலன்கள் ஒன்று நூறாகப் பெருகும் என்பது கருத்து.

செல்வந்தர்களுக்குச் சிக்கல்களையும், பிரச்சனைகளையும் தருவது வருமான வரி. ஒரு அளவுக்கு மேல் சம்பாதிப்பவர்கள் நிம்மதியுடன் இருக்க நினைத்தால் வருமான வரி கட்டுவதைத் தவிர வழியில்லை, ஆனாலும் தர்ம காரியங்களுக்குச் செலவிடும் துகைகளுக்குக் கணிசமான சலுகைகளைத் தரும் மேற்படி சட்டம் வரியைக் குறைத்து அளப்பரும் புண்ணியத்தைப் பெறும் வாய்ப்பையும் நல்குகிறது. இந்திய வருமான வரிச்சட்டம் செக்ஷன் 80-ஜி படி ஷி சட்டத்தால் அங்கீகரிக்கப்பட்ட தர்ம காரியங்களுக்கு நிகர வருமானத்தில் 10% தர்மத்துக்கு செலவழித்தால் அதில் பாதித் தொகை செலவாக ஏற்றுக் கொள்ளப்படுகிறது.

கல்வி நிலையங்கள், வைத்தியசாலைகள், கோவில் திருப்பணிகள் இதுபோன்ற பல அம்சங்கள் ஷி சட்டத்தில் அங்கீகரிக்கப்

பட்டிருக்கின்றன. புதிதாக நிறுவப்பெறும் தர்ம ஸ்தாபனங்களுக்கும் அங்கீகாரம் பெற லாம்.

நிகர வருமானம் ரூ. 50,000/-வரும் ஒரு வர் கட்ட வேண்டிய வரி தற்போதையநிலை மைப்படி ரூ. 14,060/- ஷி யார் வருமானத் தில் 10% அதாவது ரூ. 5,000/- தர்ம காரி யங்களுக்கு நன்கொடை கொடுத்தால் அவர் வருமானத்தில் ரூ. 2,500/-செலவாக ஏற்றுக் கொள்ளப்பட்டு ரூ. 47,500/-க்கு மட்டுமே வரி விதிக்கப்படுகிறது. அப்போது கட்ட வேண்டிய வரி ரூபாய் 12,940/- அதனால் வரியில் கழிவு ரூபாய் 1,120/= இதே போல் வருமானம் கூடக் கூட அதிக வரி விகிதத் தால் வரி மிச்சமும் அதிகமாகிறது. ரூபாய் 1,00,000/— நிகர வருமானம் உள்ள ஒருவர் ரூபாய் 10,000/—நன்கொடை கொடுத்தால் அவருக்கு ஏற்படும் வரி மிச்சம் ரூபாய் 3,240/—

அதாவது ரூபாய் 10,000/ நன்கொடை கொடுக்கும்போது உரியவரின் பணம் ரூபாய் 6,760/-ம் அரசாங்கப் பணம் ரூ. 3240/-ம் சேர்ந்து ரூபாய் 10,000/-மாக தர்மத்துக்கு உதவுகிறது. நமக்குப் புண்ணியம் சேர்ப்ப தோடு, வரி மிஞ்சி, அரசாங்கப் பணம் நாம் கொடுக்கும் தொகையில் ஏறக்குறைய 1/3 பங்கையும் நாம் இஷ்டப்படும் தர்மத்துக்கு சேர்க்க வைக்கிறது.

மீண்டும் பட்டினத்தடிகள் அறிவுரைப் படி ''பிறக்கும் பொழுது கொண்டு வந்த தில்லை, பிறந்து மண்மேல் இறக்கும் பொழுது கொண்டு போவதில்லை. இடையில் குறிக்கும் செல்வம் சிவன் தந்தது'' என்று எண்ணி தான தர்மங்களுக்கு நகரத்தார் பெருமக்கள் தொடர்ந்து நன்கொடைகள் அளித்து வந்து வரியையும் மிச்சப்படுத்தி சிறப்புக் குறையாமல் வாழ தான்தோன்றி ஈஸ்வரி அருளை இறைஞ்சுகிறேன்,



# “நம்மவர் இதழியல் -- 50 ஆண்டுகளுக்கு முன்”

புதுவயல். புலவர். பழ, முத்தப்பன். M.A.
பேராசிரியர், தமிழ்க்கல்லூரி, மயிலம், தெ.ஆ.மா

தமிழ் இதழியல் துறையில் நம்மவர்கள் பங்கு மிகவும் குறிப்பிடத் தக்கதாகும். இன்றைய முன்னணி இதழிகளில் சிலபல இதழ்கள் நம்மவர்களின் தொண்டினால் வெளி வருவனவாகும். இன்றுதான் நம்மவர்களின் இதழ்கள் சிறந்திருக்கின்றன என்பதல்ல. சென்ற 50 ஆண்டுகளுக்கு முன்னே—நாடு விடுதலையை நோக்கி முன்னேறிக் கொண்டிருந்தக் காலகட்டத்தில் இதழியலில் நம்மவர்கள் நடத்திய—வெளியிட்ட இதழ்கள் குறிப்பிட்டத் தக்கனவாக விளங்கியிருக்கின்றன. எம் கல்லூரி நூலகத்தில் பழைய இதழ்களின் தொகுதிகளைப் பார்வையிட்ட பொழுது—நம்மவர்களின் ஓர் துணிவுடை நெஞ்சம் சிறப்புற நடத்திய இதழின் தொகுதிகளைக் காணும் பேறு பெற்றேன். அவ்விதழினைப் பற்றி எழுந்த கருத்துக்களே இக்கட்டுரையில் இடம் பெறுகின்றன.

பலவான்குடி திரு. இராம. கு. இராமசாமி அவர்கள் நடத்திய ‘‘சிவநேசன்’’ என்னும் திங்கள் இதழின் பத்துத் தொகுதிகள் எம் கல்லூரி நூலகத்தில் பாதுகாப் போடு தொகுத்து வைக்கப் பெற்றுள்ளன. 1932-ஆம் ஜூலைத் திங்கள் முதல் 1942 ஜூன் திங்கள் வரை உள்ள இதழ்கள் தொகுத்து வைக்கப் பெற்றுள்ளன. பத்துத் தொகுதிகளை இன்றைய ஆய்வியல் முறைப் படி ஆய்வு செய்திடின் டாக்டர் பட்டம் பெறும் அளவிற்கு ஓர் ஆய்வுக் கட்டுரையை உருவாக்க இயலும். இருப்பினும் நம்மவர் தம் பழமைச் சிறப்பை அறிவது நமக்குப் பெருமையுடைத்தென்பதால் இதழ்களில் இடம் பெற்ற நம்மரபுச் செய்திகளின் ஆய்வுச் சுருக்கமாக இக்கட்டுரை அமைகிறது.

**இதழின் நிலை : -**

பலவான் குடியில் பிரபவ ஆண்டு ஆவணித் திங்கள் (1926—ஜூன் – ஜூலை) இவ்விதழ் தொடங்கப் பெற்றிருக்கிறது. ‘‘சிவநேசத்தால் சீர் பெறலாமென்பதைச் சிறப்பாகக் கொண்டு சிவத்தை நேசித்து வருதலினால் தான் இப்புதினத்தாளுக்கு ‘‘சிவநேசன்’’ என்னும் பெயர் சித்தித்தது’’ என இதழாசிரியர் இதழின் பெயர்க் காரணத்தை 1936 ஜூலை இதழில் குறிப்பிட்டுள்ளார். இதழின் முக்கிய நோக்கம் பற்றி ஆசிரியர் பல இதழ்களில் ஆங்காங்கு சுட்டிக் காட்டியுள்ளார். ‘‘தக்கார் பலர் தமிழ் வளங்கருதி, சைவநலங்கருதி எழுதிய கட்டுரைகளைக் கொண்டுத் தரணி முழுவதும் சைவமும் தமிழும் தழைத்தினிதோங்கச் செய்யும் தொண்டு சிவநேசன் தொண்டு’’ என்று 1941-ஆம் ஆகஸ்டு இதழில் முதற்பக்கத்தில் குறிப்பிடுவது இங்கு குறிப்பிடத்தக்கது. இதன்மூலம் சைவமும் தமிழும் தழைத்தோங்கச் செய்ய எழுந்ததே இவ்விதழ் என அறியும் பொழுது நம் நெஞ்சம் விம்முதல் அடைகிறது. நோக்கத்திற்கேற்பவே இதழ்களில் சைவசமயக் கட்டுரைகளும்—தமிழ் இலக்கியக் கட்டுரைகளும் அமைந்துள்ளன.

இதழ் தொடக்க காலத்தில் வார இதழாக அமைந்திருக்கிறது. தொடங்கிய காலம் முதல் 5 ஆண்டுகள் வரை வார இதழாகவே வெளி வந்திருக்கிறது, அப்பொழுது ஆண்டுக்கட்டணம் மூன்று ரூபாயாக அமைக்கப் பெற்றிருக்கிறது. பின் ஆறாம் ஆண்டு முதல் நூல் வடிவில் திங்கள் இதழாக மாற்றம் பெற்று வெளி வந்துள்ளது. ஆண்டுக் கட்டணம் ரூ 2. 4. 0 (இரண்டே கால் ரூபாய்). நேரில் பெற்றால் இதழ் ஒன்றின் விலை 3 அணா. அஞ்சலில் அனுப்பப் பெற்றால் நான்கணாவாக இருந்தமை ஆசிரியரின் அறிவிப்புகளிலிருந்து தெரிகிறது. இவ்விதழ் முதலில் பலவான்குடியிலிருந்து வெளியிடப் பெற்றிருக்கிறது. பின்னர்

திருத்தென்குடித்திட்டையிலிருந்து வெளிவந்திருக்கிறது. சிவநேசன் அச்சுக்கூடம் என்ற சொந்த அச்சுக் கூடத்திலிருந்து வெளிவந்துள்ளது. அப்பொழுது இதழின் ஆண்டுக் கட்டணம் 1—8—0 (ஒன்றரை) ஆகக் குறைக்கப் பெற்று மாற்றம் பெற்றிருக்கிறது. இத்தகைய நிலை இதழ் வணிக நோக்கில் அமையாது, தொண்டு நோக்கில் அமைந்ததைக் காட்டுகிறது. இதழ் மிகச் சிறப்பான முறையில் அமைந்திருக்கிறது. தெளிவான எழுத்துக்கள், தரமான தாள்கள், சிறந்த கட்டமைப்பு முதலியனவற்றால் இதழ் சிறப்புடன் திகழுகின்றது. இதழின் நடையில் வடமொழிச் சொற்கள் சிறிதளவு கலந்தே காணப் பெறுகிறது.

**இதழில் இடம்பெறும் செய்திகள் :-**

இதழின் அட்டை தொகுப்பில் இடம் பெறாமையால் அட்டை பற்றி அறிந்து கொள்ள முடிந்தில. இதழில் சைவ சித்தாந்தக் கட்டுரைகள், இருபா இருபஃது உரை, திருமயிலை யமக அந்தாதி உரை, பழமலைக் கோவை உரை, சுலோக பஞ்சகவிஷயம் தமிழ் பெயர்ப்பு போன்ற சாத்திர, இலக்கிய நூல்களின் உரை, சைவசித்தாந்த சமாஜத் தலைமையுரைகள், மணிவாசக சங்கத் தலைமையுரைகள், திருவிழாக்களின் பொருட் சிறப்புகள் ஆகிய கட்டுரைகளும், செய்தித் திரட்டுக்கள், மதிப்புரை மஞ்சரி என்ற தலைப்பில் மதிப்புரைகளும் இடம் பெற்றுள்ளன.

**நம் மரபுச் செய்திகள் :-**

சிவநேசன் முழுக்க முழுக்க நம்மவரால் நடத்தப் பெற்றதால் நம் நகரச் செய்திகள் பெரிதும் இதழில் இடம் பெற்றுள்ளன. பவ ஆண்டு மார்கழித் திங்கள் கோயிலூரில் கூடிய தொண்ணூற்றாறூர் தனவைசிய நகரத்தார் கூட்டத் தீர்மானங்கள் 1935ஆம் ஆண்டு சனவரித் திங்கள் இதழில் இடம் பெற்றுள்ளது. இத் தீர்மானத்தில் பர்மா அரசின் கூட்டுக்கமிட்டி அறிக்கையைக் கண்டனம் செய்திருப்பது மிகவும் குறிப்பிடத் தக்க செய்தியாகும். ரெங்கோனில் 14.12.34ல் அகில பர்மா செட்டியார் மாநாடு நடைபெற்றமையும் அத் தீர்மானத்தால் அறிய முடிகிறது. கல்கத்தாவிலிருந்து ராஜா அண்ணாமலை செட்டியார் அவர்கள் வாழ்த்துக் கூறித் தந்தி அனுப்பியமையும் குறிப்பிடப் பெற்றிருக்கிறது. குமார ராஜா முத்தையா செட்டியார் அவர்கள் முதலானோர் வருகை தந்து கையொப்பமிட்டிருக்கிறார்கள். யுவ ஆண்டு ஆனித் திங்கள் 15ல் (1935) கோவிலூர் மடத்தில் மற்றுமொரு கூட்டம் நடைபெற்றுள்ளது. அதன் தீர்மானமும் 1935 ஆகஸ்டுத் திங்கள் இதழில் இடம் பெற்றுள்ளது. அதில் இந்திய அரசிடம் உயர்திரு ராஜா தலைமையில் சென்ற தூதுக் குழுவினரின் செயல்முறைகள் பற்றிய செய்திகள் இடம் பெற்றுள்ளன. இவ்விரண்டு தீர்மானத்தில் இடம் பெற்றுள்ள செய்திகள் நம்மவர் வரலாற்றை அறிந்து கொள்வதற்கும்—வரலாறு எழுதுவோருக்கும் மிக்க பயனுடையதாக அமையும் என்பதில் ஐயமில்லை.

இவ் உள்நாட்டுத் தீர்மானங்களைப் போல ஸ்ரீமுக வருடம் ஆடி இதழில் வெளிநாட்டில் செய்கோன் நாட்டுக்கோட்டை நகரத்தார் தீர்மானம் இடம் பெற்றுள்ளது. இதில் கொடுக்கல் வாங்கல் பற்றிய தீர்மானச் செய்திகள் இடம்பெற்றுள்ளன. இத்தீர்மானத்தில் இடம் பெற்ற செய்திகள் அந்நாட்டில் நம்மவர்களின் செயல் முறைகளை எடுத்து இயம்புவதாக உள்ளன. இலங்கை நகரத்தார் சங்கத்தார் கொழும்பில் 7. 1. 1935-ல் நடத்திய கூட்டத்தின் தீர்மானம் 1935 மார்ச்சு இதழில் இடம்பெற்றுள்ளது. இத்தீர்மானம் நகரத்தார்களின் வரலாற்றிற்குரிய செய்திகளைப் பெற்றுள்ளது. இவ்வாறு வெளிநாட்டில் நம்மவர்கள் கூட்டத் தீர்மானங்கள் நம்மவரின் பெருமைக்குச் சான்றுகளாக இடம்பெற்று இன்று வரலாற்றுச் செய்திகளாகத் திகழ்கின்றன.

ஸ்ரீமுக ஆனித் திங்கள் இதழில் ''நாட்டுக் கோட்டையார்களும் சங்கங்களும்'' என்ற தலைப்பில்ஆசிரியரின்கட்டுரைஒன்றுஅமைந்துள்ளது இக்கட்டுரை ஆலயப் பிரவேசம் செய்ய முயன்றிடும் கொள்கையை ஆசிரியர் எதிர்த்தெழுதிய அக்கால நிலையை எடுத்துக். காட்டுகிறது. அக்கட்டுரை இக்காலச் சூழலில் சிந்தனைக்குரியதாக அமைகிறது

த்னவணிகச் சமூகநிலை பற்றி 1935 டிசம்பர், 1936 சனவரி, பிப்ரவரி இதழ்களில் தொடர் கட்டுரை அமைந்துள்ளது. இக்கட்டுரையும் நம்மவர் நிலையைத் தெளிவாக எடுத்துக்காட்டுகிறது.

இத்தகைய பொதுக் கட்டுரைகளோடு நாட்டுக்கோட்டை நகரத்தார்களுக்கு ஓர் வேண்டுகோள், செட்டியார்களின் செல்வாக்கு என்ற கட்டுரைகள் 1938 ஆம் ஆண்டில் இடம்பெற்று விளங்குகிறது. இவை அனைத்தும் நம்மவர் வரலாற்றிற்குத் துணை புரிவனவாகும்.

**விவாதங்கள் :-**

கட்டுரைகளோடு, செய்திகளோடு, விவாத நிகழ்ச்சிக் குறிப்புகளும் இதழ்களில் அவ்வப்போது இடம்பெற்றுள்ளன. ஆசிரியருக்கும் பலவான்குடி ராம. கும. சு. குமரப்ப செட்டியார் அவர்களுக்கும் இடையில் ஏற்பட்ட ஆசிரியப்பா அவதூறு வழக்கு பற்றிய செய்திகள் 1942 சனவரி இதழில் இடம்பெற்றுள்ளன. 1. 1. 39ல் சிவநேசனில் குமரப்ப செட்டியார் மீது தான் வெளியிட்ட செய்திகளை இராமநாதபுரம் வழக்கு மன்றத்தில் தவறு என்று ஒப்புக்கொண்டு ஆசிரியர் மன்னிப்புக்கேட்டிருப்பது செய்தியின் சுருக்கமாக அமைந்துள்ளது. இக்காலத்தில்இதழாசிரியர்களிடம் அரிதாகியிருக்கின்ற ''தன் குற்றம் ஏற்றலாகிய பண்பு'' சிவநேசன் ஆசிரியர் பால் காணும்போது அவரிடம் நமக்கு ஓர் உயர்வு எண்ணமே தோன்றுகிறது.

அடுத்து 'செட்டிநாடு' இதழுக்கும் சிவநேசன் ஆசிரியருக்கும் இடையே 'தாழ்த்தப்பட்டோர் கோயிலில் நுழைதல்' என்பதில் கருத்து வேறுபாடு இருந்தமை தெரிகிறது. ஆங்கிரச ஆண்டு கார்த்திகைத் திங்களிதழில் செட்டிநாடு'' என்ற தலைப்பில் கருத்து ஒன்று இடம்பெற்றுள்ளது. சிவநேசனில் இடம்பெற்ற அக்கருத்திற்குச் செட்டிநாடு இதழ் மறுப்பு வெளியிட—அதற்கு மறுப்பு சிவநேசன் மார்கழி இதழில் ''செட்டிநாட்டுப் பத்திராதிபரின் கெட்டிக்காரத்தனம்'' என்ற தலைப்பில் கட்டுரை ஒன்று வெளிவநதுள்ளது.இவை அக்கால இதழ்களுக்கிடையே இருந்த கருத்துப் போராட்டத்தைச் சுட்டிக் காட்டிட ஒரு சான்றாகத் திகழ்கின்றன.

அதோடு கானாடுகாத்தான் சா. ராம. அரு. குடும்பத்தினரின் பாக வழக்கின் தீர்ப்பு 1934 நவம்பர் இதழில் வெளியிடப் பெற்றுள்ளது. இத்தீர்ப்பை வெளியிட்டதின் நோக்கம் அக்காலத்திய நீதிமன்றத்தினர் நம் மரபின் பழக்க வழக்கங்களை ஏற்றுச் கொண்டு நீதி வழங்கியமையை எடுத்துக் காட்டுவதற்கு எனத் தெரிகிறது. சுவீகாரம் செய்தலில் நம்மவர் மரபையும், கையேட்டுப் பத்திரங்களையும் நீதிமன்றம் ஏற்றுக் கொண்டதை அவ்வெளியீட்டின் மூலம் ஆசிரியர் நினைவூட்டியிருப்பது குறிப்பிடத் தக்கதாகும்.

இத்தகைய விவாதச் செய்திகள் பலவற்றையும் இதழ்கள் பெற்று—அக்காலச் செட்டிநாட்டுச் சூழலை நமக்கு எடுத்துக் காட்டுகின்றன. மேலும் இதழ்களில் நம்மவர்களில் மிகச் சிறந்து விளங்கிய பண்டித மணியின் சொற்பொழிவுகள் எங்கெங்கு நடந்தாலும் அவை சுருக்கித் தரப்பெற்றுள்ளன. அவர்களின் இலங்கைப் பயணம் பற்றிய செய்திகள் விரிவாகத் தரப் பெற்றுள்ளன. மேலும் டாக்டர் உ. வே. சாமிநாதய்யரின் சொற்பொழிவுகளும், அவரின் நூற்மதிப்புத் தொண்டும் பல இதழ்களில் சிறப்பிக்கப் பெற்றுள்ளன. மேலும் கப்பலோட்டிய தமிழன் வ. உ. சி. யின் சிவஞான போதப் பதிப்பிற்குச் சிறந்த மதிப்புரையும், சொக்கலிங்கய்யா சரித்திரத்திற்கு மதிப்புரையும் இடம்பெற்றிருப்பது குறிப்பிடத் தக்கனவாக அமைந்துள்ளன.

1935 ஜூலை இதழில் ''செட்டிநாட்டு இராஜா சர் அண்ணாமலை செட்டியார் அவர்களின் விஞ்ஞாபனம்'' என்ற தலைப்பில் அன்னாரின் பொருள் பொதிந்த சொற்பொழிவுக் கருத்துகள் இடம்பெற்றுள்ளன.அவ்வுரைக்கட்டுரை நம்மவர் அனைவரும் படித்து நம்மின் பெருமையை உணர வேண்டிய கட்டுரையாக அமைந்துள்ளது.

**முடிபு :-**

50 ஆண்டுகளுக்குமுன் நம்மரபைச் சார்ந்த இதழின் மதிப்பீடு சுருக்கமாகத் தரப்

பெற்றுள்ளது. இதில் குறிப்பிடப் பெற்ற செய்திகள் மிகச் சுருக்கமாகும். இருப்பினும் இச்சுருக்கம் நம்மரபைச் சார்ந்த பெரியவர்கள்—கடந்து வந்த வாழ்க்கைப் பாதையைத் திரும்பிப் பார்ப்பதற்கு ஓர் தூண்டுகோலாகும். அதுபோல எம்போன்ற இளைஞர்களுச்கு — அக்கால நிகழ்ச்சிகளை மேலும் அறிய வேண்டும் என்ற ஆவலைத் தூண்டிடலாம். நம் மரபு ஆய்வு அறிஞர்களுக்கு ஆய்வுநிலைக்கு சிறிதேனும் பயன்படலாம். இதுபோன்ற நம் மரபின் பழமைச் செய்திகள் — மீண்டும்புதுப்பிக்கப் பெற்று—நம்மரபின் பெருமைகளை உணரத் தலைப்படுவோம்.



## கும்பாபிடேகம்

சிவ ஆசாரமாக அமைக்கப் பெறுவது யாகசாலை. இதில் சிவ ஆசாரமான அக்கினியிலெழுந்த புகையும், வெப்பமும், வேதவோசையும், சிவ ஆகமதோத்திர ஓசையும், திருமுறை ஓசையும், சிவனடியார்கள் தோத்திர ஓசையும் நிறைந்து செவிக்கு இன்பம் ஊட்டும். சிவாசாரியர் சாதகர் முதலியோர் சிவமந்திரக் கிரியா பாவனைகளோடு செய்யும் செயல்களும், உத்தம மெய்யன்பர் நல்லெண்ணங்களும் சேர்ந்து, எங்கும் வியாபித்திருக்கிற இறைவனது அருட்சத்தியைத் தூண்டி எழுப்பும். கும்பத்தின் மேலும் உள்ளுமிருக்கும் தெய்வ மின்சாரத்தை நடத்தும் பொருள்களான மாவிலை தர்ப்பைகளினால், கும்போதகத்தில் பிரகாசிக்கச் செய்யவே, அது தெய்வீக சக்திக் கலைகள் நிரம்பியதாகும்.

இக்கும்பம், முன்னமேயே பிம்பத்திலிருந்த சிவ சக்திக் கலைகளைத் தர்ப்பைக் கயிற்றின் வழியாக ஆகர்ஷணஞ் செய்யப் பெற்றிருத்தலாலும், தெய்வீக சிவமந்திரங்களினாலே நியசித்துப் பூசிக்கப் பெற்றிருத்தலாலும், சிவமேயாகும். உதகம் மின்சாரத்தை நடத்தும் பொருள்களிலொன்று. ஆதலால் மந்திர முதலிய பலவகைகளினாலும் பிரகாசிக்கப் பெற்ற சிவ கலைகளை, மின்சாரத்தை நடத்தும் சக்தி வாய்ந்த தர்ப்பைக் கயிற்றின் வழியாகப் பிம்பங்களில் சந்தானம் செய்து மேற்கண்ட கும்போதகத்தை அபிடேகித்தலே கும்பாபிடேகமாம்.

—ஆதாரம்:
பெ. ராம. குடும்பத்தார் 1937-இல்
திருக்கொள்ளம் பூதூரில் நடத்திய
கும்பாபிடேக வெளியீடு

# இலுப்பைக்குடிக் கோயிலின் கலைச் சிறப்பு

**மா. சந்திரமூர்த்தி,** எம். ஏ.

பதிவு அலுவலர் (பழங்கலை), தொல்பொருள் ஆய்வுத்துறை, சிதம்பரம்.

தமிழகக் கோயில்களில் வளர்ந்த சிற்பக் கலை, படிமக் கலை, ஓவியக் கலை ஆகிய கோயிற் கலைகளை பல்லவர், சோழர், பாண்டியர், விசயநகரர், நாயக்கர், மராட்டியர் ஆகிய மன்னர்கள் காலந்தோறும் வளர்த்து வந்துள்ளனர். அரசமரபினருக்குப் பிறகு கோயிற்கலைகளை வளர்த்தும் காத்தும் வந்த பெருமை நகரத்தார்களுக்கு உரியது. கி. பி. 18-ஆம் நூற்றாண்டு முதல் செட்டி நாட்டுப் பகுதியிலும் பிற பகுதியிலும் நகரத்தார் வளர்த்த கோயிற்கலையை 'நகரத்தார் கலை' எனக் கூறலாம். ஒன்பது நகரக் கோயில்களில் ஒன்றான இலுப்பைக்குடி தான்தோன்றீசுவரர் கோயில் சிற்பக்கலைச் சிறப்பை இக்கட்டுரையில் காணலாம்.

*கருவறைச் சிற்பங்கள் :*

தான்தோன்றீஸ்வரர் கோயில் கருவறையில் வழிபாட்டில் உள்ள லிங்கம் உருவில் சிறியது. சுயம்பிரகாசர் என வடமொழியிலும் தான்தோன்றீஸ்வரர் என தென்மொழியிலும் அழைக்கப்பட்டு வழிபட்டு வருகின்றார்கள். இக்கோயில் கருவறையை இருதள விமானமும், வட்ட வடிவமான வேசர சிகரமும் அலங்கரிக்கின்றன. கருவறை புறச்சுவரில்உள்ளதேவகோட்ட மாடங்களில்தெற்கு, மேற்கு, வடக்கு ஆகிய திசைகளில் முறையே ஆலின் கீழ் அமர்ந்து அருள்பாலிக்கும் தட்சிணா மூர்த்தியும், அடிமுடி காணா அண்ணலாக விளங்கும் லிங்கோத்பவ மூர்த்தியும், திசைமுகனான நான்முகனின் உருவமும் அமைந்து விளங்குகிறது. கருவறையைச்சுற்றியுள்ள புறச் சுவரில் அஷ்டதிக் கஜங்கள் கருவறையை சுமந்து நிற்கும் நிலையில் காட்டப்பட்டுள்ளன. யானைகள் ஒவ்வொன்றும் நிற்கும் நிலையிலும், நிமிர்ந்த நடையிலும், அசைவிலும், அழகிலும் வேறுபட்ட நிலையில் மாறுபட்ட சிற்பமாக மிகவும் கவனத்துடன் படைக்கப் பெற்றுள்ளன. தென்திசையில் உள்ள யானை ஒன்று முறத்தை ஒத்த புடைத்த காதுகளை பக்கங்களில் விரித்துக் கொண்டு தன் வலுவான கால்களை தரையில் ஊன்றி நீண்ட துதிக்கையால் முறுக்கேறிய தறியை அறுக்கும் நிலையில் வீறு கொண்டு எழுகிறது. அதன் சிறிய கண்களும், பருத்த மத்தகமும், வலுவான இரட்டை தந்தங்களும் மிகவும் கவனமாகப் படைக்கப் பெற்றுள்ளன.

இவ் யானையின் இடப்புறத்திலுள்ள குமுதப்படையில் சிறிய பல்லி ஒன்று தன் கால்களால் தரையைப் பற்றிக்கொண்டு, தன் முன் உள்ள பூச்சியை, கவனமாகப் பிடிக்கச் செல்லும் நிலையில் உள்ள சிறிய சிற்பம் அக்கால சிற்பியின் நுட்பமான கைத்திறனுக்கு சீரிய எடுத்துக்காட்டாக விளங்குகிறது. பல்லியின் சிறிய கண்களும், கூரிய நகமும், நீண்ட வாலும்கூட மிகக் கவனத்துடன் சித்தரிக்கப் பட்டுள்ளன. இதன் நீளம் 11 செ. மீ,

இத்திசையில் உள்ள இரண்டாவது யானையின் துதிக்கையின் உட்புறத்தில்முடுக்கிய வாலுடன் பாயும் யாளியும் காட்டப் பட்டுள்ளது. மேற்குப் பக்கத்திலுள்ள மூன்றாவது யானை வாளும் கேடயமும் ஏந்திய வீரன் ஒருவனை துதிக்கையால் வளைத்து வீழ்த்தும் வீரச்சுவையைக் காட்டுகிறது.

நான்காவது யானையின் வளைந்த துதிக்கையின் உட்புறத்தில் வீறுகொண்டயாளி ஒன்று ஏறிச்செல்கிறது. துதிக்கை முனையில் வீரன் ஒருவன் இடதுகையில் குறுவாளைப் பற்றி வலது கையை இடையில் கொண்டு செயலற்று வீழ்ந்து கிடக்கிறான். வட திசையில் உள்ள ஐந்தாவது யானை இரும்பு வளையத்தால் கோர்க்கப்பட்ட உறுதியான சங்கிலியினுள் தன் துதிக்கையை செலுத்தி ஆவேசத்துடன் அறுக்கும் காட்சி செதுக்கப்பட்டுள்ளது. யானையின் வேலைப்பாடமைந்த முகப்படாமும் நன்குபுடைத்த நரம்புகளையுடைய விரிந்த காதும், இங்கு நன்கு வெளிப்படுகிறது.

இத்திசையில் உள்ள ஆறாவது யானை அதே வகை வட்ட சங்கிலியினுள் தன் துதிக்கையை நுழைத்து சங்கிலியை அறுக்கும் நிலையிலும், துதிக்கையின் உட்புறத்தில் அழகிய அன்னத்தின் உருவமும் செதுக்கப்பட்டுள்ளன. இவ்வாறு கருவறையின் கீழ்த் திசையில் இருபுறங்களிலும் ஒற்றைமருப்பினையுடைய இரு களிறுகள் கருவறையை தாங்கி வரும் நிலையில் மிக இயற்கையாகப் படைக்கப் பெற்றுள்ளன. ஆலவாய் சொக்கர் சன்னதியிலுள்ள இந்திர விமானத்தைத் தாங்கும் வெள்ளை யானைகளைவிட உருவில் சிறுத்தும், நுட்பமான வேலைப்பாட்டில் தனித்தும் விளங்குவது இங்குள்ள சிற்பங்களின் தனிச் சிறப்பாகும்.

### அர்த்த மண்டபச் சிற்பங்கள்:

அர்த்த மண்டப புறச்சுவரில் உள்ள தென் திசை மாடத்தில் அங்குச பாசம் ஏந்தி இடம் புரியாக நின்ற கோலத்தில் தோன்றும் விநாயகரின் சிற்பத்தைக் காணலாம். தென்திசை நோக்கியுள்ள சிற்பம் வழிபாட்டில் உள்ளது விநாயகரின் மேல்புறமும், கீழ்புறமும் உள்ள சுவர்களில் முறையே துள்ளிக்குதிக்கும் மானுக்கு துளிர் கொடுக்கும் பிச்சைபுகும் பெருமானான பிட்சாடனர் உருவமும், தருக்கழிய, தருக்கனின் தலையை அறுக்கும் வீரபத்திரனின் உருவமும் செதுக்கப்பட்டு உள்ளன. இங்கு அனல் மகுடம் தரித்து, கைகளில் உடுக்கையும், பாசத்தையும் ஏந்தி, விழித்த விழிகளில் அனல் கக்கும் பார்வையுடன் முகத்தில் முறுக்கிய மீசையும், கடவாயில் கோரைபற்களும் கொண்டு சீற்றமுடன் விளங்கும் வீரபத்திரனின் சிற்பமும், கரங்களில் உள்ள வாளும், கேடயமும் செயல் இழக்க, கால்களைப் பரப்பிக்கொண்டு அபய குரல் எழுப்பும் தருக்கனின் உருவமும் கூர்ந்து காணத்தக்கவை. இதைத்தவிர இச் சுவரில் உள்ள அரைத் தூண்களில் காமதேனு தருக்கனுக்கு அறிவுரை கூறும் முனிவர், லிங்கத்திற்கு பால் சொரியும் பசுக்களும் புனைச் சிற்பமாகக் காட்டப்பட்டுள்ளன.

அர்த்த மண்டப புறச்சுவரில் உள்ள வட திசை மாடத்தில் ஆழியும், சங்கமும் ஏந்தி அருள் பாலிக்கும் சதுர்புஜ விஷ்ணு துர்க்கையின் சிற்பத்தைக் காணலாம். வடதிசையை நோக்கியுள்ள இச்சிற்பம் விநாயகரைப் போன்றே இன்றும் வழிபாட்டில் உள்ளது. இதன் மேற்புறமும், கீழ்புறமும் உள்ள சுவர்களில் முறையே பெண் காட்டும் உருவமான அர்த்தநாரியின் சிற்பமும், தன் இரு கண்ணினை அர்ப்பணித்த கண்ணப்பனுக்கும் அருள்பாலிக்கும் சிவபெருமானின் சிற்பமும் செதுக்கப்பட்டுள்ளன. அர்த்தநாரியின் வலது மேல்கை மானைப் பற்றியும், கீழ்க்கை அபயமும் காட்டுகிறது. பெண் பாகத்தில் இடது மேல்கை மலரைப் பற்றியும், கீழ்க்கை தொடை மீதும் உள்ளது. இவ்வடிவம் வலது காதில் மகர குழையும், இடது காதில் ஓலைக்குழையும், வலப்புறம் விரிந்த மார்பும், இடப்புறம் விம்மிய மார்பும், வலப்புறம் நிமிர்ந்த இடையும், இடப்புறம் ஒடிந்த இடையும், வலது இடையில் தோல் ஆடையும், இடது இடையில் துகிலும், வலது காலில் கழலும், இடது காலில் பாடகமும் அணிந்து அர்த்தநாரியாகச் செதுக்கப்பட்டு வனப்பூட்டுகிறது. கீழ்ப்புறத்தில் லிங்க உருவில் உள்ள காளத்திநாதரின் முகத்தில் தன் வலக்காலை வைத்து, தன் வலது கண்ணை அம்பால் பெயர்க்கும் கண்ணப்பரின் அன்பைக் கண்டு ''நில்லு கண்ணப்ப'' எனகண்ணப்பரின்கைபற்றி லிங்கத்தில் இருந்து தோன்றும் சிவபெருமானின் உருவத்தைக் காணலாம். கண்ணப்பர் புராணம் இங்கு சுவைபட கல்லிலே வடிக்கப் பெற்று விளங்குகிறது.

### கபோதச் சிற்பங்கள் :

இக்கோயில் மகா மண்டபத்தின் முகப்பு வாயிலிலிருந்து அர்த்த மண்டபம் கருவறை

ஆகிய கட்டுமானங்களில் கபோதத்தின் மேலும், கூடுகளிலும், இடை இடையே பல் வேறு அழகிய சிற்பங்கள் உள்ளன. வலமாக வருவோமானால் இவை ஒவ்வொன்றும் தனித்தனியாகக் கண்டு களிக்கலாம்.

மகாமண்டப முகப்பு வாயிலில் சிவனும், உமையும், கைலாயத்தில் வீற்றிருக்க பத்துத் தலை இராவணன் கீழே மண்டியிட்டு வீணை ஏந்தி சாமவேதம் இசைக்கும் காட்சி அற்புத மான ஒன்று. அடுத்துள்ள கூடுகளில் வல் லபை கணபதியும், பல்வகை கோபுரங்கள், கபோதத்தில் அமர்ந்து கொண்டு பழம் தின் னும் குரங்கு, தண்டாயுதபாணி, அபயவர தம் அளிக்கும் தெய்வம், அடியாருக்கு உப தேசிக்கும் தெய்வம், கபோதத்தில் தலை கீழாக ஊர்ந்துவரும் குரங்கு, பற்களால் பழிப்புக் காட்டும் மந்தி, அய்ந்து தலை அர வத்தின் கீழ் அமர்ந்து தத்துவம் உபதேசிக் கும் பிரான், குதிரையேறி வரும் கருப்பன், பொம்மியைத் தூக்கிச் செல்லும் மதுரை வீரன், இருநாய்கள் புடைசூழ நான்கு கரங் களுடன் தோன்றும் பைரவர், தாருகாவனத் தில் ஆடையற்ற மோகினியாகத் தோன்றும் அரியும், அம்மோகினியை மோக தாபத்தால் அடைய எண்ணும் முனிவர்கள், குழல்ஊதும் கண்ணன், நாரையின் வாய் பிளக்கும் கண் ணபிரான், தேவியுடன் தோன்றும் ரிஷப வாகன தேவர், உமா சகிதராகத் தோன்றும் சந்திரசேகர மூர்த்தி, சுந்தர விநாயகர், காட்சி கொடுத்த நாயனார், அம்மையப்பரா கத் தோன்றும் சோமாஸ்கந்தர், பிச்சை புகும் பெருமான், ஆடவல்ல பெருமான், சிவ காமசுந்தரி, திருமால், அடிமுடிகாணா அண் ணல், அடியார்களுடன் தோன்றும் அண் ணல், திருமால், காளை வாகன தேவர், அடி யார்களுடன் தோன்றும் சிவன், காளையு டன் தோன்றி காட்சி கொடுத்த நாயனார், முப்புறமெரித்த பெருமான், பிட்சாடனார், நிசும்பசூதனி, நான்முகன், கரிவுரித்த பெரு மான், காமதகனமூர்த்தி, சந்திரசேகர மூர்த்தி, அம்மன், கணபதி, காலசம்கார மூர்த்தி, எண்தோள் துர்க்கை, சண்டேசர், ஏகபாத மூர்த்தி, மச்ச அவதாரமூர்த்தி, கோதண்டராமர், அனுமனுக்கு அறம் உரைக்கும் இராமபிரான், எருமைத் தலை அசுரனை அழிக்கும் எண்தோள் துர்க்கை, சஞ்சீவி கொண்டு செல்லும் அனுமன், கொடு வாள் ஏந்திய கருப்புசாமி, அமர்ந்த கோலத் தில் உள்ள காளி, அப்பர், ஞானசம்பந்தர், மாணிக்கவாசகர், தேர்மீதுவில்லேந்தி வரும் திரிபுராந்தகர், ரிஷிபத்தினிப் பெண்ணை மயக்கும் பிச்சை தேவர், ஆலங்காட்டுக்காளி, ஊர்த்துவ தாண்டவ மூர்த்தி, உமையவள் காண நாட்டியமாடும் பிரான், கூத்தாடும் தேவர், ஏறு ஊரும் பெருமான், சீற்றத்து டன் தோன்றும் சிவபெருமான், நடராசர், கரும்புவில்லை ஏந்தி மலரால்பாணம்தொடுக் கும் மன்மதன், பதஞ்சலி வியாக்ரபாதர், யானைக்கு மோட்சம் தரும் பெருமான், அகோர வீரபத்திரர், அக்னி வீரபத்திரர், கோபுரங்கள், மயிலேறும் பெருமான் ஆகிய சிற்பங்கள் சாமி சன்னதியைச் சுற்றிலும் கபோதப் பகுதியை அலங்கரிக்கின்றன. இவை யாவும் உருவில் சிறியவை. சீரிய வனப் புடையவை. சிவபுராணம், மற்றும் திருவிளை யாடல் புராணம் கூறும் செய்திகளை இங்கு சிற்பமாக வடித்துள்ளனர். இவற்றில் சிவ பெருமானின் 26 பேரங்களில் பெரும் பாலானவை இடம் பெறுகின்றன. இதைத் தவிர கண்ணபிரான், கருப்புசாமி ஆகிய வைணவ மற்றும் நாட்டுப்புறத் தெய்வங் களும் இங்கு இடம் பெறுகின்றன. தெய் வங்களைப் படைத்த சிற்பிகள் கோயில்களில் இயற்கையாக தாவிக் குதித்துவரும் குரங்கு களையும் மிக இயற்கையாகப் படைத்துள்ள பாங்கு போற்றத்தக்கது. இப்பகுதியில் குரங்கு, யானை, காளை, மயில், அன்னம் ஆகிய மிருகங்களையும், பறவைகளையும் கூட சிறப்பாகப் படைத்து மிருக இயலில் தங்கள் திறமையை வெளிப்படுத்தியுள்ளனர் நகரத்தார் காலத்துச் சிற்பிகள்.

### மகா மண்டபத் தூண் சிற்பங்கள்:

மகா மண்டபத்தைத் தாங்கும் ஆறு தூண் களிலும் பல அழகிய சிற்பங்கள் செதுக்கப் பட்டுள்ளன. இத்தூண்களில் தென் திசையில் உள்ள முதல் தூணில் ரிஷப வாகனத்தில் அம்மையப்பனாகக் காட்சியளிக்கும் திருக் கோலமும், மூசிக வாகனத்தில் அங்குச பாசம் ஏந்தி அமர்ந்த கோலத்தில் வீற்றிருக்கும் விநாயகர் திருக்கோலமும், ஆலின் கீழ் அமர்ந்து அருள்பாலிக்கும் அண்ணலும்,

கருட வாகனத்தின் மீது தோன்றும் திரு மாலின் தோற்றமும் சிற்பங்களாகச் செதுக் கப்பட்டுள்ளன. இத்தூணின் நடுப்படையில் கைகளில் மலரும், பூக்குடலையும் ஏந்தி விண் ணிலே தோன்றும் கந்தர்வரும், விரிந்த தாமரை மலரும், விரிந்த தாமரை மலரில் நான்கு தோள்களுடன் வீற்றிருக்கும் மிகச் சிறிய விநாயகர் தோற்றமும், இறக்கைகளு டன் கூடிய விநோதமானகு திரையும், சிற்ப மாகச் செதுக்கப்பட்டுள்ளன.

இரண்டாவது தூணில் அம்பாள் வலக் கண்ணை அகழும் கண்ணப்பரின் கரம் பற்றி தடுத்து ஆட்கொள்ளும் காளத்தி நாதரும், வல்லப விநாயகரும், அருமான வான் முகத் தாள் நின்றுகாண ஆடும் பெருமானின் தோற்றமும், மோகினி வடிவில் உள்ள அரிக் கும் சிவனுக்கும் தோன்றும் அய்யப்பனின் வடிவமும் சிற்பமாக செதுக்கப்பட்டுள்ளன. இதில் அழகே உருவாகத்தோன்றும் மோகினி வடிவும், அவள் வதனம் கண்டு காமுற்று தன் வீரியத்தை இழக்கும் சிவபெருமானும், அவ்வீரியத்தை மோகினி தன் கரத்தில் ஏந்தி அய்யப்பனை உருவாக்கும் காட்சி இங்கு மிகச்சுவையாகக் காட்டப்பட்டுள்ளது.

இங்கு மூசிக வாகனத்தின் மீது அமர்ந்து தன் இடது தொடையில் தேவையை வைத் துக்கொண்டு பத்துக் கைகளுடன் தோன்றும் தச புஜ விநாயகரின் உருவம் குறிப்பிடத்தக் கதாகும். விநாயகரின் துதிக்கை இடம் புரியாக வளைந்து வல்லபையின் யோனியை அடக்க, அதைக்கண்டு குள்ள சிவகணங்கள், சங்கம் முழங்க சீரிய முறையில் செதுக்கப் பட்டுள்ளன. இத்தூணின் மேல்பகுதியில் இரு சிவனடியார்கள் பணிந்து, வணங்கி நிற்கும் உருவங்களும் காணத்தக்கவை. இதே தூணில் இறக்கையுடன் கூடிய கந்தர்வப் பெண் விண்ணிலே நின்று பூமாரி பொழி கிறாள். இத்திசையிலுள்ள மூன்றாவது தூணில் சிவலிங்கம் ஒன்றும், அஞ்சலிக்கும் சிவனடியார் சிற்பமும் காட்டப்பட்டுள்ளன.

இம்மண்டபத்தின் வடதிசையில் உள்ள முதல் தூணில் திருமால் நீர் வார்க்க அங்கயற் கண்ணியை மணக்கும் ஆலவாய்ச் சொக்கர் உருவமும், மயில் வாகனத்தின் மீது தோன் றும் ஆறுமுகப் பெருமானின் உருவமும், ஏடு ஏந்திய மாணிக்க வாசகரின் உருவமும், பதஞ் சலி முனிவரும், ஆவுடையார் கோயிலில் குருந்த மரத்தடியில் மணிவாசகருக்கு சிவ பெருமான் உபதேசம் செய்யும் காட்சியும், நரசிம்மரின் உக்கிரம் தணிக்கத் தோன்றிய சர்பேஸ்வரர் உருவமும் சிற்பமாக செதுக்கப் பட்டுள்ளன. இரண்டாவது தூணில் புலிக் கால் முனிவரான வியாக்கிரபாதர் உருவமும் பஞ்சமுகத்தோடு தோன்றும் சிவபிரானின் நின்ற கோலமும், காளிங்கன் என்ற பாம் பின் மீது நடனமாடும் கண்ணனும், யாளியும் பாம்பைதன் அலகுகளால் கொத்தும் மயிலும், சிற்பங்களாகச்செதுக்கப்பட்டுள்ளது மூன்றா வது தூணில் வலது கையில் மலர் பற்றி நிற்கும் வடிவுடைய அம்மனும், நான்கு தோள் களில் ஆயுதம் பற்றி நிற்கும் பிடாரி அம் மனும் காட்சி அளிக்கின்றன.

மகா மண்டப வாயிலை வேலைப்பாடு மிக்க இரு அரைத்தூண்கள் அலங்கரிக் கின்றன. தென்புறத் தூணில் கீழிருந்து மேலாக அன்னம், ஆடு மாடுகள், ரிஷபவா கனர், இடம்புரி விநாயகர், யாழ் இசைக்கும் வனிதை, யானைக்கு அருள்பாலிக்கும் வேணு கோபாலன், துவாரப்பாலகர், குதிரை மறவர் ஆகிய சிற்பங்களைக் காணலாம். அவ்வாறு வடபுறத்தூணில் மகரத்தின் மீது நின்று கைத்தடியால் வேட்டையாடும் வீரன், ரிஷப அர்த்தநாரி, குழல் ஊதும் வேணுகோபாலன், துவாரபாலகர் ஆகிய உருவங்களைக் காணலாம்.

இத்தூணின் பக்கங்களில் அன்னத்தின் முகமும், சிம்மத்தின் கால்களும், பறவையின் சிறகுகளும் கொண்ட விநோதப் படைப்பும், மயில் வாகனரும், யாழ் மீட்டி நடனமிடும் கந்தர்வ நங்கையும், யானையுடன் போர் செய்யும் யாளியும், பாயும் குதிரையை அடக்கி ஆளும் வீரமறவனின் உருவமும் சிற்பமாகச் செதுக்கப்பட்டுள்ளன. இவ்வாயி லின் இரு பக்கங்களில் கங்கை, யமுனை ஆகிய ஆறுகளை அழகிய அணங்குகளாகப்படைத்து வாயிலை புனிதமாக்கும் சிற்பியின் திறனும் போற்றுதற்குரியன. வாயிலின் மேல் இரு பக்கங்களிலும் அமுத கலசங்களால் நீராட் டும் இரு யானைகளுக்கு நடுவே அமர்ந்திருக் கும் கஜலட்சுமியும், பக்கங்களில் தோன்றும்

சாமரை வீசும் தெய்வப் பெண்டிரும் குறிப் பிடத்தக்க அழகுடையன.

மகா மண்டபத்துத் தென்புற புறச்சுவ ரில் அசுர உருவில் வந்த யானையைக் கிழித்து ஆடையாகப் போர்த்தி பத்துக் கைகளுடன் ஆடும் கஜசம்ஹாரமூர்த்தியின் உருவத்தைக் காணலாம். அதனையடுத்து திருமால், நான் முகன் இருவரும் பக்கங்களில் அஞ்சலிக்க சிவபெருமான் நடுவில் தேன்றி ஏகபாத மூர்த் தியாகக் காட்சியளிக்கும் உருவம் போற்றத் தக்கது. இம் மும்மூர்த்திகளும் ஓர் உடலாய் இணைந்து ஒரு திருவடியுடன் தோன்றுவது குறிப்பிடத்தக்கது. அடுத்துள்ள சுவரில் சிங்க முகமும், மனித உடலும் கொண்ட சிங்கபிரான் எண் தோள்களுடன் தோன்றி இரண்யனுடன் போர் செய்யும் காட்சி சித்திரிக்கப்பட்டுள்ளது. அடுத்து இரண் யனை தொடையில்கிடத்தி அவன்வயிற்றைக் கூரிய நகங்களால் கிழித்து குடலை உருவி மாலையாக அணிந்துகொள்ளும் சிங்க பிரானின் சீற்றமான தோற்றம் இரண்ய சம்ஹாரமாகக் காட்டப்பட்டுள்ளது. இதைக் கல்லிலே தோற்றுவித்த சிற்பி இரண்யனது வயிற்றிலிருந்து வெளிப்படும் குடலிலும் நரசிம்மனின் திறந்த வாயிலிலும் குருதியைப் போன்று சிவப்பு வண்ணம் தீட்டியுள்ள பாங்கும் போற்றுதற்குரியன. இவ்விரு காட்சிகளுக்குமிடையே அஞ்சலித்த சிறு பிள்ளையாக பிரகலாதன் தோன்றும் காட்சி யும் இங்கு கூர்ந்து கவனிக்கத்தக்கது.

சுவாமி சன்னதி எதிரே உள்ள தூண் களில் இருவரிசைகளில் எதிர் எதிராக சிவ புராணம் மற்றும் வீரர்களுடைய சிற்பங்கள் அலங்கரிக்கின்றன. மேற்கில் இருந்து கிழக் காக தாருகாவனத்து வீதிகளில் ஆடையின்றி திருவுருவாய் துள்ளிக் குதிக்கும் மானோடு தோன்றும் பிட்சாடனரும், எதிரில் பிச்சை புகும் பெருமானுக்கு பிச்சையிட கரண்டி யுடன் வரும் தாருகாவன முனிப் பெண்டிரும், அவளது பணிப்பெண்ணும் அடுத்த தூணில் மணிவாசகருக்குக் காட்சியளிக்கும் காளை வாகன தேவரும், மூன்றாவது தூணில் அஞ் சலிக்கும் அரசனும் அஷ்டதிக் பாலகரில் ஒரு வீரரும் புடைச் சிற்பமாகக் காட்டப் பட்டுள்ளன. நான்காவது தூணில் வாளும் கேடயமும் ஏந்திய வீரனும் எதிரே குதிரை வீரனும், ஐந்தாவது தூணில் அக்கமாலையும் வில்லும் ஏந்தி ஒற்றைக்காலில் தவம் புரியும் அர்ச்சுனனும், அருகிலே வேடன் உருவில் தோன்றும் கிராதனும் அவன் தேவியும், எதிரே ரிஷப வாகனத்தில் தோன்றி காட்சி யளிக்கும் சிற்பமும் செதுக்கப்பட்டுள்ளன.

ஆறாவது தூணில் அகோர வீரபத்திர ரும், அக்கினி வீரபத்திரரும் எதிர் எதிரே உக்கிரமான நிலையில் பின்கைகளில் உடுக் கையும் பாசமும் பற்றி, கீழ் இடக்கையில் கபாலம் ஏந்தி, வலது கையில் திரிசூலம் பற்றி அசுரர்களை சம்ஹாரம் செய்யும் நிலையில் செதுக்கப்பட்டுள்ளன. இத்தூண்களில் மேல் உள்ள நாகக் கட்டுகளில் நான்கு திசை களிலும் அடியார்களின் அஞ்சலித்த திருக் கோலங்கள் சிற்பங்களாகச் செதுக்கப் பட்டுள்ளன. ஏழு, எட்டு, ஒன்பது ஆகிய தூண்களில் திசைக்காவலர் எண்மரில் அறுவர் வாளும் கேடயமும் ஏந்தி நின்ற கோலத்தில் காட்டப்பட்டுள்ளனர். இத் தூண்களின் பக்கங்களில் யாழும் வீணையும் ஏந்தி பண்ணிசைக்கும் காட்சி செதுக்கப் பட்டுள்ளது.

### அம்மன் சன்னதி முகப்பு மண்டபத் தூண் சிற்பங்கள் :

இம்மண்டபத்தில் வரிசைக்குஐந்து தூண் களாக இரு வரிசைகளில் பத்துத் தூண்கள் உள்ளன. கீழ் வரிசையில் உள்ள முதல் தூணில் சிம்மத்தின் மீது நான்கு கரங்களு டன் வீற்றிருக்கும் வராக உருவம் செதுக்கப் பட்டுள்ளது. இதன் பின் கைகள் இரண்டும் உலக்கையும், ஏர் கலப்பையும் ஏந்தியுள் ளன. இதன் எதிரே உள்ள தூணில் அன்ன வாகனத்தின் மீது ஐந்து தலைகளுடன் அமர்ந்துள்ள பிராமியின் உருவமும் செதுக் கப்பட்டுள்ளது. இதன் முன்னிரு கரங்கள் அபயவரதம் அளிக்க, ஏனைய எண் கரங்கள் ஆயுதத்துடன் உள்ளன.

இரண்டாவது தூணில்மேல் இரு கை களில் தாமரை மலர் ஏந்தி ஐந்து தலை அர வத்தின் கீழ் அமர்ந்த கோலத்தில் வைணவி யின் உருவம் செதுக்கப்பட்டுள்ளது. எதிரே யுள்ள தூணில் அல்லியும், தாமரையும் ஏந்தி

அபயவரதம் அளிக்கும் நிலையில் உள்ள மகேஸ்வரியின் அமர்ந்த கோலம் குறிப்பிடத் தக்கது. மூன்றாவது தூணில் வலது கையில் மலர் பற்றி இடது கையை தாழ்கையாகக் கொண்டு நிற்கும் உமையும், எதிரே குதிரை மீது அமர்ந்த சக்தியின் உருவமும் சிற்பங் களாகச் செதுக்கப்பட்டுள்ளன. இத்தூண் களின் மறுபுறங்களில் பொம்மியை தூக்கிச் செல்லும் மதுரை வீரனும்,குதிரை மீதுபவனி வரும் கருப்புச்சாமியும், பஞ்சமுக தெய்வமும் காட்டப்பட்டுள்ளன.

நான்காவது தூணில் யானையின் மீது அமர்ந்து அபயவரதம் அளிக்கும் இந்திராணி யும், எதிரே சிம்மத்தின் மீது வீற்றிருக்கும் சிம்ம வாகினியும் சித்திரிக்கப்பட்டுள்ளன. இத்தூணின் மறுபுறங்களில் ஒரு கையில் ஓங் கியவாளும், மறு கையில் கதாயுதமும் பற்றி நிற்கும் துவார சக்தியின் உருவங்கள் செதுக் கப்பட்டுள்ளன.

ஐந்தாவது தூணில் ஊர்த்துவ தாண் டவ மூர்த்தியும், எண் கரங்களுடன் தோன் றும் திருவாலங்காட்டுக் காளியும் நடனமிடும் காட்சி காட்டப்பட்டுள்ளது. இங்கு மகா விஷ்ணு மத்தளம் கொட்ட, பிரம்மா பிரம்ம தாளம் போட, இவ்விசைக்கேற்ப வலது காலை மேலே தூக்கி உயர்த்தி கீழ்கைகளில் உடுக்கை எடுத்து ஊர்த்துவ தாண்டவம் ஆடும் சிவபெருமானின் காட்சி சீரிய முறை யில் செதுக்கப்பட்டுள்ளது. எதிரே ஆடும் பெருமாளின் தாண்டவத்தைப் போல் ஆட முடியாது என்று நாணி நிற்கும் நங்கையாக ஆலங்காட்டுக் காளியின் நின்றகோலம் கண்ணுக்கு விருந்தாக உள்ளது.

இம்மண்டபத்தின் முன்புறம் வாயிலின் பக்கங்களில் இரு யானைகள் மிக இயற்கை யாகச் செதுக்கப்பட்டுள்ளன. இவ் யானை களின் நீண்ட துதிக்கையும், ஒற்றைத் தந்த மும் பெருத்த மத்தகமும், சிறுத்த கண்ணும், பக்கங்களில் விரிந்த காதும், இயற்கையான வாலும், நுணுக்கமாகப் படைக்கப்பெற்றுள் ளது. இவ் யானைகளின் பின்புறம் நீண்ட வேல் கம்பை கையில் ஏந்தி சீறும் சிம்மத்தின் அழகிய ஆடுமகளிரில் ஒருத்தி கூடை ஏந்தி நிற்கும் எழில் கோலமும் சிற்பமாக வடிக்கப் பெற்றுள்ளன.

### பள்ளியறை முகப்பு மண்டபத் தூண் சிற்பங்கள் :-

இம்மண்டபத்தின் முன்பு வரிசைக்கு ஐந்து தூண்கள் வீதம் இரு வரிசைகளில் பத்துத் தூண்கள் தாங்கி நிற்கின்றன. இரு வரிசையில் உள்ள முதல் நான்கு தூண்களில் எதிர் எதிரே வீணை மீட்டும் வனிதைகளின் வனப்பான வடிவங்களைக் காணலாம். இப் பெண்கள் தம் தலைகளில் குந்தலம் என்னும் தலைக்கோலம்பூண்டு,நீண்ட பின்னலுடைய கூந்தலில் பூ தைத்து, குஞ்சம் கட்டி செவி களின் மீது செவிப்பூ செருகி காதுகளில் தொங்கும் சிமிக்கி அணிந்து,கழுத்தில் கண்ட மாலையும், பதக்கமும் தரித்து, தனங்களில் மார்க்கச்சை அணிந்து தோள்களில் வளை யும், கைகளில் செருகு வளையும் அணிந்து இடையில் துகிலும், மேகலையும், இடைவா ரும் பூண்டு, கால்களில் தண்டையும், பாதச் சரமும் அணிந்து கால்களை ஒயிலாக நிறுத்தி வீணை மீட்டும் நிலையில் செதுக்கப்பட்டுள் ளன. மூன்றாவது தூணின் எதிர் எதிரே இரு பெண்கள் சுட்டு விரலால் கன்னத்தைத் தொட்டு நடனமிடும் காட்சி செதுக்கப்பட் டுள்ளது. இத்தூண்களின் மறுபுறத்தில் குழல் இசைக்கும் கண்ணனின் இளமைத் தோற்ற மும், அவ்விசையில் மயங்கிய ஆவினம், கண் ணனை அடைந்து நெகிழ்ந்து நிற்கும் நிலை யும், இயற்கையாக வடிக்கப்பட்டுள்ளது. எதிர்த் தூணின் மறுபுறத்தில் கோபியர் எழு வரின் ஆடைகளைகவர்ந்துபின்ன மரக்கிளை களில் அமர்ந்திருக்கும் கண்ணனிடம் ஆடை களைக் கேட்கும் அணங்குகள் ஆடையற்ற நிலையில் ஒரு கையால் உடல் மறைத்து, மறு கையால் துகில் கேட்டு நிற்கின்றனர். இன் னும் சிலர் இருகைகளை மேலேகூப்பிவேண்டி நின்றும் வணங்கிய நிலையிலும், மேலும் சிலர் மரத்திலேயே உடல் மறைத்து வேண்டி நின்றும், கிளைகளில் ஏறியும் சென்று ஆடை வேண்டும் அணங்குகளின் கோலமும் இயற் கையாக செதுக்கப்பட்டுள்ளன. நான்காவது தூணில் சங்கூதும் பூதகியும், எதிர்ப்புறம் நிர் வாணக் கோலத்துடன் நிற்கும் பெண்ணும்

செதுக்கப்பட்டுள்ளன. ஐந்தாவது தூணில் லிங்கத்திலிருந்து காளத்தியப்பர் தோன்றி கண்ணப்பரை ஆட்கொள்ளும் சிற்பமும், எதிரே பாசக் கயிற்றால் பற்றி இழுக்கும் காலனும், லிங்கத்தைக் கட்டியணைக்கும் மார்க்கண்டேயனும், லிங்கத்தில் இருந்து தோன்றிய சிவபெருமான் வலது காலால் காலனை மிதித்து கையில் உள்ள சூலத்தால் காலனை அழிக்கும் காட்சி காலசம்ஹார மூர்த்தி வடிவாக சித்திரிக்கப்பட்டுள்ளது.

*பைரவர் சந்நிதி முகப்பு மண்டபத் தூண் சிற்பங்கள்:*

இம்மண்டபத்தின் முன்பு வரிசைக்கு ஐந்து தூண்கள் வீதம் இரு பக்கங்களிலும் சேர்த்து பத்துத் தூண்கள் உள்ளன. முதல் இரு தூண்களில் சந்திரனும், சூரியனும், அல்லி மலரும், தாமரை மலரும் ஏந்தி, அபயவரதம் அளிக்கும் நிலையில் உள்ளன. இரண்டாவது தூணின் எதிர்ப்புறம் ஆட்டின் மீது அமர்ந்து வரும் அக்னி தேவனும், அக்னி தேவன் தலையில் சுடர் மகுடம் அணிந்து காட்சி அளிக்கிறது. மூன்றாவது தூணில் மூன்று தலையும், மூன்று காலும், நான்கு தலையும் கொண்ட சுரகரேஸ்வரரின் உருவம் செதுக்கப்பட்டுள்ளது. இத்தூணின் மேலே எருதும் யானையும், இரு உடல் ஒரு தலையாக மோதும் காட்சி விநோதமான முறையில் செதுக்கப்பட்டுள்ளது. மறுபுறம் நோக்கின் காளையின் தலையும்காணும் நிலையில் சிற்பி செதுக்கியுள்ள பாங்கு வியக்கத்தக்கது.

இத்தூணின் எதிர்ப்புறத்தில் சிவபெருமான் சரபை உருவம் எடுத்து நரசிம்மனின் வேகத்தைத் தணிக்கும் காட்சிசித்திரிக்கப்பட்டுள்ளது. சிம்ம முகமும், மானும் உடுக்கையும் பற்றி அபயவரம் அளிக்கும் நான்கு கரங்களும், மானுட வடிவில் மேல் உடலும், சிம்மத்தின் வடிவில் கீழ் உடலும், கூர்மையான நகங்களையுடைய வலிமையான எட்டு சிம்மக் கால்களும், பறவையின் சிறகும், மிருகத்தின் வாலும் கொண்ட சரப மூர்த்தியின் உருவமும், அதன் கீழ் கிடக்கும் சீற்றம் தணிந்த சிங்கபிரானின் உருவமும் மிகக் கவனமாக வடிக்கப்பட்டுள்ளன. நகரத்தார் காலசிற்பக்கலைக்கு இங்குள்ள தூண் சிற்பங்கள் அனைத்தும் சீரிய சான்றாக அமைந்துள்ளன,

இத்தூணின் மறுபுறங்களில் ஓங்கிய கொடுவாளை கையில் பற்றி, கதைபிடித்து நிற்கும் கருப்பு சாமியும், உடுக்கை, பாசம், திரிசூலம், கபாலம் ஆகிய ஆயுதங்களை தாங்கி நிற்கும் பிடாரியும் செதுக்கப்பட்டுள்ளன. நான்காவது தூணில் சஞ்சீவிமலையை தூக்கி வருவதற்காக வீறுகொண்டு எழும் அனுமனின் உருவமும், அதன் எதிரே கோதண்டராமனின் சிற்பமும் செதுக்கப்பட்டுள்ளன. ஐந்தாவது தூணில் ஜனகரின் அவையில் வில்லை ஒடிக்கும் இராம பிரானும் எதிரே வீரபத்திரரின் உருவமும், சீரிய முறையில் செதுக்கப் பெற்றுள்ளது. பைரவர் சன்னதியின் எதிர்ப்புறத்தில் உள்ள தூண்கள் அனைத்திலும் உக்கிர தெய்வங்கள் சித்திரிக்கப்பட்டுள்ளன.

*அம்மன் சன்னதி சிற்பங்கள்:*

அம்மன் சன்னதி கருவறையின் நடுவே வடிவுடையம்மன் என்னும் சௌந்தர நாயகி இரண்டு திருக்கைகளுடன் திரிபங்கத்தில் நின்ற கோலத்தில் உள்ளது. வழிபாட்டில் இத்தெய்வம் வலது கையில் நீலோத்பலம் பற்றி, உடல் குனிய தாழ்கையாகக் கொண்டு அருள் பாலிக்கிறது. அம்மனைச் சுற்றிலும் கல்லிலே அமைந்துள்ள திருவாசி மிகுந்த வேலைப்பாடு மிக்கது.

அம்மன்கருவறையைச் சுற்றிலும் உள்ள கட்டிடக்கலையும், சிற்பக் கலையும், மிகக் கவனத்துடன் செதுக்கப்பட்டுள்ளன. உபானம், உபப்படம், பதம, கபோகம, ஜெகதி பத்மம், ஜெகதி, கண்டம், பட்டி, கண்டம், வேதி ஆகிய அங்கங்களுடன் அம்மன், கருவறை அதிட்டானப்பகுதி அமைந்துள்ளது. ஜெகதிப்படையின் மேல் உள்ள குமுதப்பகுதி 16 பட்டை வடிவுடனும், மணிகள் கோத்த நிலையிலும் அமைக்கப்பட்டுள்ளது. சுவர்ப் பகுதியில சுற்றிலும் தேவகோட்ட மாடங்கள் அமைந்துள்ளன. அம் மாடங்கள் சிலைகள் ஏதும் இன்றி எளிமையாக உள்ளன. கருவறைஅர்த்தமண்டபசுவர்களை வேலைப்பாடு மிக்க பல்வேறு அரைத்தூண்கள் தாங்கி நிற்கின்றன. அத்தூண்களின் மேல் உள்ள போதிகையும். உத்திரங்களும், கபோதங்களும், யாளி வரியம், வேலைப்பாடு மிக்கதாக விளங்குகிறது. இத்தூண்களின் இடையிடையே உள்ள சுவர்ப் பகுதியில் எட்டு யானைகள் தாங்கிவரும் நிலையில் உள்ள சிற்பமும் குறிப்பிடத்தக்கது, கபோதங்களின் உட்பகுதியில் தேக்கு மரங்களைப்

போன்று செதுக்கப்பட்ட கல்வேலைகள் அக்கால கலையின் சிகரங்களாக விளங்குவன. நீண்டு வளைந்த மரங்களும், இடையிடையே நீண்ட மரச்சட்டங்களும், முறுக்கிய கம்பிகளும், தட்டை, வழிண்டை கம்பிகளும், கல் மரத்தில் வேயப்பட்ட ஆணிகளும் கூட கல்லிலே உருப்பெற்று கல்காவியமாக விளங்குகின்றன. இத்தகைய வேலைப்பாடுகளை இக்கோவிலில் உள்ள அனைத்து சன்னதிகளிலும் காணலாம்.

கருவறையையும், அர்த்த மண்டபத்தையும் இணைக்கும் புறச்சுவரின் இடையேயள்ள கும்பப்பஞ்சரம் நுட்பமான வேலைப்பாடு மிக்கதாய்த் திகழ்கிறது இதில் உள்ள கும்ப கலசத்தின் மீது இரு மகரவாய் பக்கங்களில் காட்டப்பட்டு, அதன் வாயிலிருந்து இலைக்கருக்களிகளுக்கு இடையேயுள்ள ஒவ்வொரு சிறு இடுக்கும் ஒட்டையும் கூட சிறு துரும்பை நுழைத்துக் காணுமாறு நுட்பமாக அமைக்கப்பட்டுள்ளது.

அம்மன் கருவறையின் மேல் திசையிலுள்ள தேவகோட்ட மாடத்தின் பக்கங்களில் உள்ள அரைத்தூணில் இரு சிறிய சிம்மங்கள் செதுக்கப்பட்டு அச்சிம்மங்களுக்கு கால்களிடையேயும், வால்களின் இடையேயும் இடைவெளி காணுமாறு சிற்றுளியால் இடைவெளி ஏற்படுத்தியுள்ளான் அக்காலச் சிற்பி. இந் நுட்பமான சிம்மத்தின் உயரம் 8. 6செ. மீ. நீளம் 9செ. மீ.

இச்சன்னதி கபோதங்களைச் சுற்றிலும் உள்ள கூடுகளிலும், இடையிடையே பல் வேறு அழகிய தெய்வ சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ள. திருமால் நீர் வார்த்துக் கொடுக்க அங்கயற்கண்ணியை ஆலவாய்ச் சொக்கர் மணக்கும்காட்சி, காரைக்கால் அம்மையார், பூக்குடலை ஏந்தி நிற்கும் பெண்ணணங்கு மீசையை முறுக்கிவரும் வேடன், ஆடும் நங்கை, அடியார்க்கு அருள் பாலிக்கும் தெய்வப்பெண்; லெட்சுமி, நரசிம்மர், அசுரனை அழிக்கும் காளி: அனுமனுடன் போர் தொடுக்கும் வீரன், மோகினியைக் கண்டு வீரியமிழக்கும் முனிவன், கருடவாகனத்தின் மீது திருமால், அம்மன், யசோதா கிருஷ்ணன், யானைமீது பவனிவரும் இந்திராணி. வைணவி, வாராகி, சிம்மவாகினி, மாகேஸ்வரி, அசுரனை அழிக்கும் பத்ரகாளியின் பல் வேறு தோற்றங்கள், சாமுண்டி, பிராமி, கௌமாரி, பிடாரி, காயத்ரி, மயில் வாகினி, நாட்டியப் பெண், இந்திராணி கிராதா அர்சுனிய காட்சி அதில் கிராதகனராகத் தோன்றும் சிவனுடன் வரும் உடை குதிரை வாகினி, யானை வாகினி, மூன்று தனங்களுடன் தோன்றி சிவபெருமனுடன் போர் செய்யும் உமை, அண்ணல் விடும் அம்பில் மூன்றாவது தனம் மறையும் காட்சி, பிட்சாடனர், தாருகாவனத்துப் பத்தினிப் பெண்டிர், ஆலங்காட்டுக் காளி ஆகிய சிற்பங்களைக் காணலாம்.

இடையிடையே, கபோத கூரையின்மேல் பழங்களைக் கடித்துத்தின்னும் நிலையிலும் தலைகீழாக தாவிவரும் நிலையிலும் உள்ள குரங்குக் கூட்டங்களின் சிற்பங்களும், தன் கூர்மையான கால்களால் கூரையைப் பற்றி வரும் உப்புகளும், மிக இயற்கையாகச் செதுக்கப்பட்டுள்ளது. கஜலெட்சுமிக்குமேல் உள்ள உத்திரங்களில் தோன்றி மலர் பொழியும்விண்ணவரும், விண் மகளும் குடலையுடன் தோன்றும் காட்சியும் கூர்ந்து கவனிக்க வேண்டியவை. இச்சுவர்களில் அமைதியாக நடை பயிலும் அன்னங்களையும், சீறும் சிம்மங்களையும், பலவகைக் குதிரைகளையும், பிளிறும் களிறுகளையும் படைத்த சிற்பி அமைதியாக துள்ளிப் பாயும் புள்ளி மானையும் படைத்துள்ளான். கீழ்ப்புறச்சுவரில் உள்ள பிணை என்னும் பெண்மானின் நீண்ட கொம்பும், கூர்மையான முகமும், மேல்நோக்கி திறந்த வாயும், திரும்பிய கழுத்தும், விரிந்த காதும், மருட்சி மிக்க கண்களும், ஏன்! துள்ளிக் குதிக்கும் கால்களும் குளம்புகளும்கூட மிக இயற்கையாகப் படைத்துள்ள பாங்கு புகழத்தக்கது.

### பள்ளியறைச் சன்னதி சிற்பங்கள்:

அம்மன் சன்னதி கட்டிடக் கலையைப் போன்று அதைப் பின்பற்றி கட்டப்பட்டுள்ளது பள்ளியறைச் சன்னதி. சன்னதியின் புறச்சுவர்களை அலங்கரிக்கும் அரைத்தூண்களின் மீதுள்ள உத்திரப் பகுதியிலும், கபோதப் பகுதியில் உள்ள கூடுகளிலும் பல அழகிய சிற்பங்கள் உள்ளன. லிங்கத்தைச் சுமந்து வரும் அனுமன், லிங்க பூஜை செய்யும் இராமபிரான், மற்றும் அடியார்கள், லிங்கத்தின் முன் நிற்கும் கண்ணப்பன், லிங்கத்தை வழிபடும் சக்தி, குழந்தைக்குப் பாலூட்டும் அன்னை, லிங்கத்திற்கு நிழல் கொடுக்கும் ஐந்துதலை அரவம், லிங்கபூசை செய்யும் அநுமன், எருமை வாகனத்தில் வரும் யமனை அழிக்கும் அண்ணல், லிங்க பூசையில் ஈடுபட்டுள்ள சக்திகள், லிங்கத்திற்குப் பால், சொரியும் பசு, லிங்க பூசை செய்யும் யானை வீணை ஏந்திய வனிதை; சிவபார்வதிசமேதராகத் தோன்றும் காட்சி, நந்திகேசுவரர்; அன்னைக்கு அறம் உரைக்கும் சிவபிரான்; சிறு குழந்தைமுன் தவம் செய்யும் அடியார், ரதி—மன்மதன் போர் ஆகிய சிற்பங்கள் அலங்கரிக்கின்றன.

உத்திரங்கள்மீது வேணுகோபாலன், வில்லுடைக்கும் இராமபிரான், தாழங்குடை தாங்கிவரும் வேதியர், மதுரைவீரன், மத்தளம் கொட்டும் கலைஞன், அனுமன், சங்கூதும் கணம், வீணை ஏந்திய வனிதை, தடியுடன் தோன்றும் மறவன், நாட்டியப்பெண், அறம் உரைக்குப் பட்டன், நாரைவாய் பிளக்கும் கண்ணன், காளிங்கநர்த்தனன், குதிரை மீது வரும் மறவர்கள் ஆகிய சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன.

### பைரவ சன்னதி சிற்பங்கள் :

இச்சன்னதியின் கருவறை நான்கு கைகளில் ஆயுதம் தாங்கி நின்ற கோலத்தில் தோன்றும் பைரவ மூர்த்தியைக் காணலாம். பைரவரின் மேல் கைகள் இரண்டும் உடுக்கையும், பாசத்தையும் பிடிக்க, கீழ்க்கைகள் இரண்டும் நீண்ட திரிசூலத்தையும் கபாலத்தையும் பற்றியுள்ளன. பைரவரின் தலையில் சுடர்முடி அலங்கரிக்கிறது. மகரக்குழை.பத்ரக்குழை, வாகு மாலை, முப்புரி நூல், கண்டமாலை, கொத்துச் சரப்பளி, இலைக்கருக்களின் முகப்புடைய தோள்வளை, உதர பந்தம், அரவத்தால் ஆன அரைஞாண், இடது தோளில் இருந்து முழங்காலுக்குக் கீழ்வரை வீழ்ந்து செல்லும் உடை மணி, பாதசதங்கை, ஆகிய அணிகலன்கள், ஆடையற்ற நிலையில் தோன்றும் பைரவரை அலங்கரிக்கின்றன. பைரவரின் இரு பக்கங்களிலும் முகத்தைத் திருப்பி அமர்ந்துள்ள நாய் ஒன்றும், இடப்புறமாகத் திரும்பி நிற்கும் நாய் ஒன்றுமாக இருநாய்கள் பல்வேறு அணிகலன்கள் பூண்டு காணப்படுகின்றன. **இப் பைரவர் சிற்பம் இப்பகுதியில் உள்ள சாக்கோட்டை, ஆமூர் ஆகிய ஊர்களில் உள்ள பைரவ சிற்பங்களுடன் ஒப்பு நோக்கத் தக்கது. இது கி.பி.12-ம் நூற்றாண்டின் தொடக்கப் பகுதியைச் சார்ந்தது. பாண்டியர் காலத்து பைரவருக்கு நகரத்தார்கள் 19-ம் நூற்றாண்டின் தொடக்கப் பகுதியில் கோவில் எடுத்து சிறப்புச் செய்துள்ளனர்.**

கருவறை, அர்த்தமண்டபம் ஆகிய பகுதிகளைக்கொண்டு விளங்கும் பைரவ சன்னதி தென் திசை நோக்கி அமைந்துள்ளது. இச்சன்னதியின் அதிட்டானம், சுவர், கபோதம் ஆகிய பகுதிகள் அம்மன் சன்னதியைப் போன்றே அமைக்கப்பெற்றுள்ளன. ஆனால் இங்கு கருவறைச் சுவர்களைச் சுற்றி அம்மன் கருவறையைப் போன்று யானைகள் காட்டப்படவில்லை. இங்கு கோட்ட மாடங்கள் சிற்பங்களின்றி அமைக்கப்பட்டுள்ளன' காபோதத்தில் உள்ள கட்டுமானங்களும் வேலைப்பாடுகளும் சுவாமி, அம்மன்சன்னதிகளை ஒத்து உள்ளன. அவ்வாறு அம்மன் சன்னதியில் உள்ளதுபோன்று கபோதங்களில் உள்ள கூடுகளிலும் இடையிடையேயும் சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன. இச்சன்னதியைவலமாக வருவோமானால் கங்காதரமூர்த்தி,பைரவர், கோதண்டராமன், இராமபிரானிடம் செய்திசொல்லும் அனுமான், குழல் ஊதும் வேணுகோபாலன், திருமால், காளிங்கநர்த்தனர், யானைக்கு மோட்சம் கொடுக்கும் திருமால், பைரவரின் கையில் உள்ள கபாலத்தில் வெளிப்படும் குருதியை நாவால் நக்கும் பைரவ வாகனம், காலபைரவர், இரண்ய சம்ஹாரம், மற்றும் பைரவர்கள், யோகநிலையில் உள்ள சிவபிரான், அசுரனை அழிக்கும் வீரபத்திரர், மயில் வாகனர், மூசிகத்தின் மீதுள்ள இடம்பரி விநாயகர், பிட்சாடனர், மத்தளம் கொட்டும் திருமால், ஆலங்காட்டுக் காளி ஆகிய சிற்பங்கள் உள்ளன.

**பைரவ சன்னதி கபோத பகுதியின் கூடுகளில் மட்டும் பதினைந்து வகையான பைரவரின் திருக்கோலங்கள் காட்டப்பட்டுள்ளது இச்சன்னதியின் சிறப்பு அம்சமாகும்.**

சுவர்களை அலங்கரிக்கும் தூண்களின் மேலுள்ள உத்திரங்களில் பூதானம், இலட்சுமி நாராயணர், நாரைவாய் பிளக்கும் கண்ணன், அமர்ந்த அணங்கு, யாளி, அனுமான், சங்கூதும் பூதகணம், இராமபிரான், இலக்குவன், சுப்பிரமணியர், விநாயகர், பூதகணங்கள், அன்னம், கூர்மாவதாரம், நாட்டியப்பெண், மார்க்கண்டேயன், பூதகணம் ஆகிய சிற்பங்கள் சிறிதாகச் செதுக்கப்பட்டுள்ளன.

### நாகர் மண்டபத்துச் சிற்பங்கள்:

இங்கு சதுரமான பீடத்தின் மீது உள்ள நாகர்களை நான்கு வேலைப்பாடுமிக்க தூண்கள் தாங்கி நிற்கின்றன மண்டபத்தின் நடுவே ஏழு நாகர்களின் உருவங்கள் வழி

பாட்டில் உள்ளன. இதற்குப் பின்புறம் கல்லாலான தலவிருட்சம் உள்ளது.

முன்னர் தலவிருட்சம் இருந்த இடத்தில் கொங்கண சித்தர் சிவபெருமானை வணங்கி வழிபட்டதாக மரபு. எனவே அதே இடத்தில் கல்லாலான வில்வ தலவிருட்சத்தை செதுக்கி அதன் நடுவே கொடுங்கண சித்தா லிங்க பூசை செய்வதாக அமைந்துள்ள சிற்பம் ஒவ்வொரு அடியார்களும் கண்டு வணங்கத்தக் கவை. இச்சிற்பம் தல புராணத்தின் அடிப் படையில் செதுக்கப்பட்டுள்ளது.

இம்மண்டபத்தின் தூண்களில் லிங்க வடிவில் உள்ள தான்தோன்றீசுவரர், கொங் கண சித்தர், பைரவர், மயில் வாகனர், அடியார், வீரபத்திரர், துவாரபாலகர்கள், விநாயகர், கண்ணப்பன், லிங்கம், மாணிக்க வாசகர் ஆகியன செதுக்கப்பட்டுள்ளன. இத்தூண்களின் மேல் நாகக்கட்டு அலங்கரிக் கும் இடத்தில் இரு உடல் ஒரு தலையாக சிம்மத்தின் உருவை நான்கு தூண்களிலும் படைத்துள்ளனர்.

## தட்சிணாமூர்த்தி மண்டபத்துச் சிற்பங்கள்:

சுவாமி கருவறையின் தென்திசையில் உள்ள தட்சிணாமூர்த்திக்கு கருவறையை ஒட்டித்தனி மண்டபம் எடுக்கப்பட்டுள்ளது. இம்மண்டபத்தின் அடிமுதல் கல்கூரைவரை, சிற்பிகள் மிகுந்த கவனத்துடன் சிற்ப வேலையைச் செய்து முடித்துள்ளனர். அதிட் டானப் பகுதியில் உள்ள கபோதங்களும் தாமரைகளும் குமுதங்களும் நுணுக்கமான வேலைப்பாடுடன் திகழ்கின்றன. இம்மண்டபப் பீடத்தில் முன்புறம்மரத்தைச் செதுக்கியது போன்று சிற்ப வேலைப்பாடு கொண்ட தூண்களைக் காணலாம். இத் தூண்கள் கால், உடல், இடை, கலசம், குடம், கண்டம் விரிந்த பத்மம், பலகை, நந்தி மேடை, போதிகை, உத்திரம் ஆகிய பகுதி களைக்கொண்டு விளங்குகிறது. இத்தூண் களின் உடல் மேலிருந்து கீழாக வரிவரியாக வெட்டப்பட்டு வனப்பூட்டுகிறது.

இத்தூண்களின் மேலுள்ள குடத்திற்கும் பலகைக்கும் நடுவே உள்ள கல்லிலே விரிந்த தாமரை அக்காலத்துச் சிற்பியின் படைப் புக்கு எடுத்துக்காட்டாகத்திகழ்கிறது. 48பூவி தழ்களைக் கல்லிலே மிக இயற்கையாகப் படைத்து தட்டினால்கூட ஒலிக்கும் அளவில் மிக மென்மையான தாமரை இதழ்களைத் தோற்றுவித்துள்ள பாங்கு போற்றத் தக்கது.

இத்தூண்களின் மேலுள்ள போதிகை வளைந்த வாழைப்பூத்தாரை ஒத்து வனப் பூட்டுகிறது. தூணின் மேலுள்ள பலகைப் பகுதியின் நான்கு மூலைகளிலும் ஒரு தலை யையும், இரு உடலையும் பெற்ற நந்தியின் உருவங்கள் அமர்ந்த கோலத்தில் காட்டப் பட்டுள்ளன. உத்திரத்திற்கு மேலுள்ள கூரை தேக்கு மரத்தால் நுட்பமாகச் செதுக் கிய மரக்கூரை போன்று ஆங்காங்கே இடை வெளியும், இடுக்குகளும் விட்டு பொருத் தமான இடத்தில் பல்வகை சட்டங்களை இணைத்து ஆணி அறைந்தது போன்று கல் கூரையாகச் செதுக்கப்பட்டுள்ளது. இது அந் நூற்றாண்டின் சிற்பிகளுக்கு இருந்த சீரிய திறனையும், அனுபவத்தையும் பறை சாற்றுகிறது.

மண்டபத்தின் முன்புள்ள இரு தூண் களின் பக்கங்களில் இரு பிள்ளைத்தூண்கள் ஒரே கல்லில் இணைக்கப்பட்டு காட்சியளிக் கின்றன. இத்தூண்களின் கீழுள்ள சது ரப்படையில் மேல் இரு கைகளில் தாமரை ஏந்தி அருள் பாலிக்கும் அன்னையும் கிளியின் மீது அமர்ந்து கரும்புவில்லை வளைத்து மல ரால் பாணம் எய்து ஆலின் கீழ் அமர்ந்துள்ள அண்ணலின் தியானத்தைக் கலைக்க முயற் சிக்கும் மன்மதனுடைய உருவமும், மன் மதன் எதிரேயுள்ள தூணில் அழகே உருவாக அன்னத்தில் அமர்ந்து மலர்கொண்டு எறியும் ரதியின் உருவத்தையும் பொருத்தமான இடத்தில் சிற்பிகள் செதுக்கியுள்ள பாங்கு போற்றத்தக்கது. இதைத்தவிர கருப்புசாமி, பூக்குடலை ஏந்திய பெண், பைரவர், தாரு காவனத்துப் பெண்டிர், பிட்சாடனர், குழல் ஊதும் கண்ணன், ராதை; வீணாதரமூர்த்தி; திருவிக்கிரம அவதாரம், கோதண்டராமர்; ஓலைக்குடை ஏந்திய முதியோன்; மாணிக்க வாசகர் சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன. இவை ஒவ்வொன்றும் 14செ. மீ. உயரம் உள் ளவை. **இங்குள்ள பெரிய தூண்களுக்கும்**

பிள்ளைத் தூண்களுக்குமிடையே கொடிக்கருக் கணியைப் போன்று அமைக்கப்பட்டுள்ள அழகிய வேலைபாடுகள் அமைந்த சன்னல் களின் கீழே, ஒருபுறம் தாடி தரித்த முனிவன் ஒருவனும் அவ்வுருவத்தின் பின்புறம் அழகிய கொடிப்பெண்ஒருத்தியும் காட்டப்பட்டுள்ளனர். 20 செ. மீ. உயரமுள்ள இவ்வுருவம் ஒவ்வொரு வரும் தவறாது காண வேண்டிய சிற்பமாகும்.

பிள்ளைத் தூண்களைத் தாங்கி நிற்கும் சீறிப்பாயும் சிம்மங்களின் திறந்த வாயினுள் வாயைவிடபெரிய கல் குண்டுகளை வைத்துச் சிற்பி செதுக்கியுள்ள பாங்கு விசயநகரநாயக் கர் காலக் கலையின் தொடர்ச்சி எனக்கூற லாம். இச்சிம்மங்களின் பருத்த கண்களும், புடைத்த மூக்கும், கூரிய பற்களும், படர்ந்த தாடியும், கூரிய நகங்களும் கூட மிக நுட்ப மாகக் காட்டப்பட்டுள்ளன.

இம்மண்டபத்துப் பீடங்களைச் சுற்றி லும் யாளிவரி அமைக்கப்பெற்றும், அதன்கீழ் உள்ள கபோதங்களின் மேல் தாயின் தனம் பற்றி தாய் முகம் நோக்கிய குழந்தையும், தாயும் காட்டப்பட்டுள்ளன. இச்சிற்பம் கீழ்த்திசையில் உள்ளது. தென்திசையில் சீறி வரும் நாகத்தை தன் மகுடியின் நாதத்தால் அடக்கும் மகுடிக்காரனும் அவன் முன் ஆடும் அரவமும், மிக இயற்கையாக வடிக்கப்பட் டுள்ளது. வடதிசையில் உள்ள கபோதத்தில் இளங்கண்ணன் உரியிலுள்ள வெண் ணைய்யை கலயத்துடன் கவர்ந்து வந்து அதை யசோதைக்குத் தெரியாமல் தின்பதும், மறுபுறத்தில் யசோதை அக்காட்சியைக் கண்டு வியந்து நிற்பதும் அற்புதமான கலை யாக விளங்குகிறது.

அடுத்து ஒரு காட்சி. கூரையைப்பற்றி தவழ்ந்துவரும் குட்டி உடும்பு கீழே விழா வண்ணம் தாய் உடும்பு தன் கால்களால் பற்றி இழுத்துக்காக்கும் பாச உணர்வோ டுள்ள உடும்புக் குடும்பத்தைக் காணலாம். இவ்விதம் கல்லிலே வடித்த காவியமாக இம் மண்டபம் திகழ்கிறது.

இம்மண்டபத்தின் நடுவே இடதுகாலை மடித்து வலதுகாலை முயலகன் மேல் வைத்து வீராசனத்தில் அமர்ந்து அறம் உரைக்கும் நிலையில் தட்சிணாமூர்த்தியின் உருவத்தைக் காணலாம். மேற்கைகளில் அரவமும், உடுக்கையும் பற்றி கீழ் இடக் கையை முழங்கால் மேற்கொண்டு வலக்கையால் சின்முத்திரை காட்டி தன் முன்னுள்ள சனகாதி முனிவர்கள் நால்வருக்கு அறம் உரைக்கும் அண்ணலாகத் தோன்றும் தட்சிணாமூர்த்தியின் வடிவம் இன்றும் வழி பாட்டில் உள்ளது.

### விநாயகர் சன்னதி சிற்பங்கள்:

இக்கோயில் திருச்சுற்றின் தென்மேற்கு மூலையில் கீழ்த்திசை நோக்கி விநாயகர் சன்னதி அமைந்துள்ளது. கருவறையில் லலிதாசனத்தில் வீற்றிருக்கும் விநாயகர் மேற்கைகளில் அங்குசபாசம் ஏந்தி கீழ்க்கை களில் அரைத்தந்தமும் மோதகமும் பற்றி இடம்புரி விநாயகராகக் காட்சியளிக்கிறார்.

இச்சன்னதியில் கபோதப் பகுதியிலுள்ள கூடுகளிலும் இடையிடையேயும் பல்வேறு தெய்வ உருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன. அவற்றில் விநாயகர் மட்டும் பதினேழு இடங்கள் பல்வகை கோலங்களில் செதுக்கப் பட்டுள்ளார். விநாயகர் தனித்தும், நின்ற கோலத்திலும், அமர்ந்த கோலத்திலும், நடனமிடும் கோலத்திலும், வீணைமீட்டும் கோலத்திலும், சித்தியுடன் தோன்றியும், வல்லபையுடன் தோன்றியும், நான்கு கைகளுடனும், பத்துக் கைகளுடனும், மூசிக வாகனத்துடனும், சிவகணங்கள் புடை சூழவும் சிற்பி செதுக்கியுள்ள பாங்கு போற்றுதற்குரியது.

### சுப்பிரமணிய சன்னதி சிற்பங்கள்:

இது கோயில் திருச்சுற்றில் வடமேற்கு மூலையில் கீழ்த்திசை நோக்கி அமைந் துள்ளது. கருவறையில் மயில் மீது நான்கு கைகளுடன் அமர்ந்து வள்ளி, தெய்வானை, சமேதராக காட்சி கொடுக்கும் சுப்பிரமணிய ரின் உருவத்தைக் காணலாம். மேற்கைகளில் வச்சிரத்தையும், சக்தி படையையும் கொண்டு கீழ்க்கைகளால் அபய வரதமளிக்கும் சுப்பிர மணியர் தோற்றம் காணப்படுகிறது.

இச்சன்னதியின் கருவறை புறச்சுவர்க ளில் ஊர்த்துவ தாண்டவமூர்த்தி, ஆலங்

காட்டுகாளியின்சிற்பங்கள் செதுக்கப்பட்டுள் ளன.செம்மறி ஆட்டின் மீதும், காளைமீதும், மான்மீதும் சிம்மத்தின் மீதும், புலியின் மீதும் குதிரையின் மீதும் அமர்ந்து இரு கைகளில் ஆயுதம் ஏந்தித் தோன்றும் வீரர்களின் உருவத்தைக் காணலாம். கபோதங்களின் இடையிடையே 18 வகையான சுப்பிரமணியரின் திருவுருவங்களைக் காணலாம்.

### சண்டிகேசுவரர் சன்னதி சிற்பம்:

திருச்சுற்றின் வடதிசையில் சன்னதி தென் திசை நோக்கி அமைந்துள்ளது. இடதுகாலை மடித்து வலது காலை தொங்கவிட்டு இரண்டு கைகளுடன் அமர்ந்த கோலத்தில் சண்டிகேசுவரரைக் காணலாம். வலது கை நீண்ட மழுவைப்பற்றி இடது கை சிம்மகரண முத்திரையிட்டுக் காட்டுகிறது. தலையை ஒரு விதச் சடைமகுடம் அலங்கரிக்கிறது. இச்சன்னதிக்குரிய பழைய சிற்பம் இக்கோயில் திருச்சுற்றின் தென்மேற்கு மூலையில் உள்ளது. அது கி. பி. 12-ம் நூற்றாண்டைச் சார்ந்தது. தற்போது வழிபாட்டில் உள்ள சண்டிகேசுவரர் நகரத்தார் காலத்துக் கலையாகும்.

### புதிய இராசகோபுர சிற்பங்கள் :

கோயில் திருச்சுற்று மதிலின் கீழ்திசையில் ஐந்து நிலைகளையுடைய புதிய இராசகோபுரம் 1984—1985 இல் அமைக்கப்பட்டுள்ளது. இதில் ஒவ்வொரு நிலையிலும் பைரவர் உமா சகிதர், நடராசர், விநாயகர், தட்சிணாமூர்த்தி, திருமால், நான்முகன் இலக்குமி, சரஸ்வதி, மீனாட்சி, தண்டாயுதபாணி ஆகிய சிற்பங்கள் 109 சுதை உருவங்களாக அமைக்கப்பட்டுள்ளன. இதில் தெய்வ உருவம் மட்டுமின்றி எண் திசைக் காவலர்கள்; திசைப் பெண்கள், கோபுரம் தூக்கிகள், பூதகணங்கள், தற்கால பனியன் வேஷ்டி, ரவிக்கை, சேலை கட்டிய ஆண் பெண் உருவங்கள் நூதன முறையில் யாவும் அலங்கரிக்கின்றன. கண்டனூர் காசிநாத ஸ்தபதி அவர்களால் சுதை வேலை செய்யப்பட்டது. இக்கோபுரம் 61½ அடி உயரம் உள்ளது.

### மரச் சிற்பங்கள் :

இக்கோயிலில் மரச் சிற்பங்களை இரு வகையாகப் பிரிக்கலாம். (1) கோயிலிலுள்ள வாகனச் சிற்பங்கள், (2) கோயில் தேர்ச் சிற்பங்கள்.

இக்கோயிலில் கற்பக விருட்சம், காமதேனு, பல்லக்கு, யானை வாகனம். காளை வாகனம், மயில் வாகனம், மூசிக வாகனம், குதிரை வாகனம் ஆகிய வாகனங்கள் நகரத்தார்காலத்துக் கலைக்கு எடுத்துக்காட்டாகத் திகழ்கின்றன.

### தேர்ச் சிற்பங்கள் :

இலுப்பக்குடி ஆலயத்தில் உள்ள தேர் இன்றும் உபயோகத்தில் உள்ளது. சுமார் 10 அடி உயரமுள்ள இத்தேர் கி.பி. 19-ம் நூற்றாண்டின் தொடக்கப்பகுதியைச் சார்ந்தது.

இத்தேரின் கீழ்த் தட்டிலும் நடுத்தட்டிலும் மேல் தட்டிலும் உள்ள சிற்பங்கள் நகரத்தார்காலத்து மரச் சிற்பக் கலைக்கு எடுத்துக்காட்டாக விளங்கும்.

கீழ்த் தட்டில் வலமிருந்து இடமாக மயில் வாகனர்; தட்சிணாமூர்த்தி, விநாயகர், பூதகணம், துவாரபாலகர், ரிஷபவாகன தேவர், பிட்சாடணர், வீணை ஏந்திய பெண், காளிங்கநர்த்தனர், வேணுகோபாலன், ஆண் பெண் இன்பக்களிப்பில் உள்ள சிற்பம், கோமாளி, பைரவர், மஹிஷமர்த்தினி, அம்மன், பூதகணம், கொடிப்பெண், அமர்ந்த அம்மன், யாழ் இசைக்கும் வனிதை, கதை ஏந்திய வீரன், வீரபத்திரர், இடையர், சிமமவாஹினி, பணிப்பெண், ஆடையற்ற அணங்கு, ஆண் குறியைப்பற்றி நிற்கும் காமுகன், துவாரபாலகர் ஆகிய சிற்பங்கள் அலங்கரிக்கின்றன. இவை ஒவ்வொன்றும் 20 செ. மீ. உயரமும் 10 செ. மீ. அகலமும் உடையன.

நடுத்தட்டில் திருமால், சொக்கர். அங்கையற்கண்ணியை மணப்பதற்கு நீர் வார்க்கும் காட்சி, மயில் மீது ஆறுமுகப் பெருமான், ரிஷப ஆரூடர், சிவனும் உமையும உள்ள கைலாயததில் தசமுகன் வீணையைக் கொண்டு சாமகானம் இசைத்தல், வல்லபையின் யோனியை துதிக்கையால் மறைக்கும் வல்லப கணபதி; சுப்பிரமணியர் சூரசம்ஹாரம் செய்தல், அழகிய பெண்களுடன் கூடும் ஆண்கள், ஆண்களிடம் போகம் துய்க்கும பெண்கள்; பள்ளியறையில சிவன் உமை

யுடன் தோன்றுதல், இராமர் பட்டாபிஷேகம், அனுமனுக்கு இராமபிரான் அறம் உறைத்தல், ஐந்து தலை அரவத்தின்,கீழுள்ள வைகுண்டப் பெருமாள், இராமனைத் தூக்கிச் செல்லும் அனுமன், இரண்ய சம்ஹாரம், வாள், கேடயம் ஏந்திப் போரிடும் இரு வீரர்கள், குனிந்து சோறுவடிக்கும் பெண்ணிடம் பின்புறமாகப் புணரும் ஆண்மகன், அதைக் கண்டு இன்புறும் அணங்கும் ஆடவனும், யானை மீது வரும் முனிவர், யானையை அடக்கும் வீரன், கன்னியர் அறுவருக்கு அறம் உரைக்கும் சிவபெருமான், சிவனின் காலடியில் உள்ள முயலகன், யானைத்தோலை உரித்து ஆடையாகப் போர்த்திக் கொள்ளும் பெருமான், நந்தி குடமுழா வாசிக்க, நான்முகன் பிரம்மதாளம் போட, ஊர்த்துவ தாண்டவம் ஆடும் சிவன், பெருமான், எண் தோள்களுடன் தோன்றி சிவனின் ஆடலைக் கண்டு நாணமுற்ற ஆலங்காட்டுக்காளி, லிங்கத்திலிருந்து தோன்றி, காலனைத் திரிசூலத்தால் சம்ஹாரம் செய்யும் மூர்த்தி, லிங்கத்தைக்கட்டியணைக்கும் மார்க்கண்டேயன், இதனைக் கண்டு விண்ணிலே இன்புறும் இரு கந்தவர்கள், மதங்கொண்ட யானையின் கீழ் தோன்றும் கண்ணன், குதிரை பூட்டிய தேரில் வில்லும், அம்பும் ஏந்தி சம்ஹாரம் செய்யும் திரிபுராந்தகர், அவ்வண்ணலை வணங்கும் அசுரன் மற்றும் பெண்டிர் குந்தல கூந்தலிட்டு ஆடையற்ற நிலையில் தோன்றும் மோகினி, அவள் அழகைத் துய்க்க வரும் பிட்சாடணர் வடிவில் வந்த சிவன், திண்டின் மீது பெண்ணைக் கிடத்தி இன்பம் துய்க்கும் ஆண்மகன், அதற்கு சாமரம் வீசம் பணிப்பெண், திருமாலைச் சுமக்கும் கருடவாகனர், ஐந்து தலையுடன் தோன்றி கையில் தராசு பிடித்து ஒரு தட்டில் எட்டுத் தலைகளையும், மற்றொரு தட்டில் தெய்வத்தையும் நிறுத்திப் பிடித்துள்ள பெருமான், எருமைத்தலை அசுரனை சிம்மத்தின் மீது அமர்ந்து அழிக்கும் துர்க்கை, அன்னத்தின் மீதுள்ள அழகி,கோகுலத்துப் பெண்கள் அறுவரின் ஆடையை கவர்ந்து பின்ன மரத்தில் ஒளியும் கண்ணன், ஆடையற்ற நிலையில் நிற்கும் கோபியர்கள், கட்டிலில் மீது கணவனுடன் உட்கார்ந்த பெண், குத்திட்டு அமர்ந்த நிலையிலேயேகட்டிலின் கீழ் மல்லாந்து படுத்துள்ள மாற்றானைப் புணரும்காட்சி, அவள அருகில் நிற்கும் பணிப்பெண், நாட்டியமாடும் இரு தேவர்கள், வேடன், வேடுவச்சி, காமனும் ரதியும் கிளி மீதும் அன்னத்தின் மீதும் அமர்ந்து வில்லை ஏந்தி கணை கொடுத்தல் ஆகிய சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன. இச்சிற்பங்கள் ஒவ்வொன்றும் சுமார் 30 செ. மீ. உயரம் உடையன.

மேல்தட்டில் இராமன், இலக்குவன், சீதை, அம்மன், அடியார், லிங்கம், துவார பாலகர், விநாயகர், தேவர்கள், ஈருடல் ஒரு தலையுடன் தோன்றும் காளை வாகனம்,சிம்மம், குதிரை, லிங்கத்தை வழிபடும் தேவர்கள், வாசுகி என்ற பாம்பின் மீது உள்ள மராமரத்தை ஒரே அம்பில் வீழ்த்தும் இராமபிரான், வாசுகியின் பின்புறம் தோன்றும் அனுமன், இராமன், இலக்குவன், சீதை, அனுமனுக்கு அறம் உரைக்கும் அண்ணல், வாலி சுக்ரீவன் சண்டை, இராமன் பதுங்கிநின்று அம்பால் வீழ்த்தும் காட்சி, இராமன் மாரீசன் என்னும் மானை அம்பெய்து வீழ்த்துதல், இராமபிரான் சீதைக்கு முன்பு அனுமன் வாய்பொத்தி நிற்றல், அசோகவனத்தில் சீதை, இராமன் ஆடும் அரவத்தை அம்பால் வீழ்த்துதல்,கோலாட்டம் ஆடும் பெண்கள், வாலை வட்டமாகச் சுற்றியுள்ள அனுமன், போர் காட்சி, அனுமன் இராவணனது கோட்டையை அழித்தல் ஆகிய இராமாயணக் காட்சிகள் இத்தேரில் இடம்பெறுகிறது.

இங்குள்ள தேர்ச் சிற்பங்களில் பெரும்பாலானவை தான்தோன்றி ஈஸ்வரர் ஆலயத்தில் உள்ள சிற்பங்களை ஒத்துள்ளன. எனவே இக்கோயில் திருப்பணி செய்து முடிக்கப்பட்ட காலத்திலேயே இத்தேர் உருவாகியிருக்க வேண்டும்.

# இலுப்பைக்குடி தான்தோன்றீசுவரர் கோயில் ஒப்புயர்வு இல்லாத செப்புத் திருமேனிகள்

**மா. சந்திரமூர்த்தி**, எம். ஏ.

பதிவு அலுவலர் (பழங்கலை), தொல்பொருள் ஆய்வுத்துறை, சிதம்பரம்.

பசும்பொன் முத்துராமலிங்கம் மாவட்டம், காரைக்குடி வட்டம், இலுப்பைக்குடி தான்தோன் றீசுவரர் கோயிலில் 30 செப்புத் திருமேனிகள் உள்ளன. இவையனைத்தும் முழுதும் கனமாகச் செய்யப்பட்டவை. இவை மூன்று காலக் கட்டங்களில் செய்தளிக்கப் பட்டவை.

இக்கோயிலிலுள்ள ஆடவல்லான், சிவகாமி, ஸ்ரீபலி நாயகர், சோமாஸ்கந்தர், வீணாதரமூர்த்தி, போகசக்தி, பிடாரிஅம்மன், அஸ்தர தேவர், விநாயகர், சண்டேசுவரர், சுந்தரமூர்த்தி நாயனார், பரவை நாச்சியார், நர்த்தன ஞானசம்பந்தர் ஆகியன பாண்டியர் காலத்தில் செய்தளிக்கப் பட்டவை. இவற்றின் காலம் கி.பி.12-13ஆம் நூற்றாண்டு.

## புலப்படுத்தும் உண்மைகள்:

இந்தச் செப்புத் திருமேனிகள் ஒரு அரிய உண்மையை நமக்குப் புலப்படுத்துகின்றன. இச்செப்புத் திருமேனிகள் செய்யப்பெற்ற காலமான கி.பி. 12-13 ஆம் நூற்றாண்டுகளில் இலுப்பைக்குடியில் பாண்டியர் காலத்தில் கட்டப்பட்ட கோயில் ஒன்று இருந்ததை நமக்கு வெளிப்படுத்தியுள்ளது. இக்கோயில் திருச்சுற்றில் உள்ள பாண்டியர்கால விநாயகர், சண்டேசுவரர், திருமால், பைரவர், அரசன் ஆகிய சிற்பங்கள்மேற்கூறியகருத்தை உறுதிப்படுத்துகின்றன. **பாண்டியர் கோயில் கால வெள்ளத்தில் முழுமையாக அழிவுறும் நிலையில் அதேயிடத்தில் இரண்டாம் கட்டமாக நகரத்தார்கள் கருவறையை எடுத்துள்ளனர்.** அக்கோயிலே மீண்டும் நகரத்தாரால் 1850-ஆண்டுகளில் பெரியதாக கற்கோயிலாகக் கட்டப்பெற்று இன்று நாம் காணுமாறு அமைந்துள்ளது.

இரண்டாவது கால கட்டமாக இந்நகரத்தார்கள் இலுப்பைக்குடியில் முதல் கோயில் திருப்பணி செய்தபோது அக்கால கட்டத்தில் செய்தளிக்கப்பட்டவையாக கீழ்கண்ட படிமங்கள் கருதப்படுகின்றன. அவையாவன: இக்கோயிலில் சந்திரசேகர அம்மன், தனி அம்மன், பிரதோஷ நாயகர், சுப்பிரமணியர், வள்ளி, தெய்வானை, சுந்தரமூர்த்தி, ஞானசம்பந்தர், மாணிக்கவாசகர், கொங்கணசித்தர், பள்ளியறை சொக்கர், பள்ளியறை அம்மன், நந்தி, கண்ணாடி முதலியன ஆகும். இவை கி.பி. 19 ஆம் நூற்றாண்டின் தொடக்கப் பகுதியிலும், இன்னும் சில பிறிபகுதியிலும் செய்தளிக்கப்பட்டவை. மூன்றாவது கட்டமாக பைரவர், அம்மன், விளக்குப் பதுமைகள், முதலியன இந்நூற்றாண்டின்தொடக்கப்பகுதியில் செய்தளிக்கப் பட்டவை. பாண்டியர் காலம் முதல் நகரத்தார் காலம் வரை செய்தளிக்கப்பட்ட செப்புத் திருமேனிகளின் ஆய்வு முடிவு வருமாறு:

## 1. ஆடவல்லான்;

பீடத்தின் மேல் வீழ்ந்து கிடக்கும் முயலகன்மீதுவலது காலை ஊன்றி இடது காலைத் தூக்கி நான்கு திருக்கைகளுடன் கூத்தாடும் நிலையில் ஆடும் பெருமானின் படிமம் அற்புதமாக வடிக்கப்பட்டுள்ளது. தலையை உயர்ந்த சடை மகுடம் அலங்கரிக்கிறது. மகுடத்தின் மேல் வலப்புறம் ஆடும் அரவமும் இடப்புறம் இளம்பிறையும், முன்புறம் கொக்கிற்குக் கீழ்புறம் ஊமத்தை, எருக்கு ஆகிய பூக்களும் மகுடத்தின் நான்கு பக்கங்களிலும் மதர பூரிமங்கள் பொருத்தப்பட்டு உயர்ந்து விளங்குகிறது. சடைமகுடத்தின் பின்புறம் விரிசடைகள் பக்கத்திற்கு ஆறாக மேல்நோக்கி விரிந்து வனப்பூட்டுகின்றன.

விரிசடையின் இடையிடையே மலர்கள் பொருத்தப்பட்டு பொலிவூட்டுகின்றது. வலது மேல் சடையில் அஞ்சலித்த நிலையில் கங்கையும், இடது சடையில் ஆடும் அரவமும், அழகூட்டுகின்றன. விரிசடையின் பின்புறம் சிரசக்கரம் செருகப்பட்டுள்ளது.

மேல்வலக்கை உடுக்கையைப்பற்றி இடக்கை அர்த்தசந்திரமுத்திரையில் அனலை ஏந்தியுள்ளது. கீழ் வலக்கை அபயம் காட்ட இடக்கை மார்புக்கு குறுக்கே நீண்டு வேழ முத்திரை காட்டுகிறது. இரத்தினபட்டம் நெற்றியையும் மகர வட்டக் குழைகள் செவிகளையும் வாகுமாலை தோளையும் அலங்கரிக்கின்றன. கழுத்தில் முத்தாரம், கண்டிகை, சரப்பளி ஆகிய அணிகளும் மேற்கையில் இலைக்கருக்கணி முகப்புடைய தோள் வளையும், முழங்கையில் கடகமும், முன்கையில் மூன்றுவித காப்பும், விரல்களில் மோதிரமும், மார்பில் முத்துக்கள் கோத்த நூலும், தோள்களின் இடையே சிறிய மேல் அங்கியும், வயிற்றின் மேல்பகுதியைச் சுற்றி கச்சையும், இடையிலிருந்து மேல் தொடைவரை வேலைப்பாடு மிக்க தோல் ஆடையும், இடையைச் சுற்றிலும் பொன்னால் ஆன நாண், மலர்க்கச்சை, அரைப்பட்டிகை, இடைவார் ஆகியன அணி செய்ய இடையின் பக்கங்களில் ஆடைக் கட்டின் சரிந்த குஞ்சங்கள் தாழ்ந்து வனப்பூட்டுகின்றன. பாதங்களில் சதங்கை கோத்த ஆடும் கழலும், காலில் தண்டையும் கருக்கணி முகப்புடைய அழகிய வளையமும் அலங்கரிக்கின்றன.

ஆடும பெருமானின் முகம் பெருமிதமாக நிமிர்ந்து தோற்றமளிக்கிறது. அப்பெருமானின் அகன்ற நுதலும், வளைந்த புருவமும், நெற்றிக்கண்ணும், நீளமான நாசியம் விரிந்த இமையும், ஒளிமிக்க பார்வையும். நீண்டு ஒடுங்கிய முகமும், புன்னகை புரியும் அதரமும், அங்கங்களின் அசைவும், ஆடை அணிகலன்களும் மிகக் கவனமாக வார்க்கப்பட்டுள்ளன. இப்படிமம்பிற்காலப் பாண்டியரின் புகழ்மிக்க ஆடவல்லானின் படைப்புகளில்சிகரமாக விளங்குகிறது. இங்குகாட்டப்பட்டுள்ள விரிசடை தனிச்சிறப்புடையது.

ஆடும்பெருமானின் திருவடி கீழே வீழ்ந்து கிடக்கும் முயலகன் ஆடும் அரவத்தைப் பற்றி வலது கையில் சுட்டு விரலால்முத்திரையிட்டுக் காட்டுகிறான். அவன் தலையிலுள்ள வட்டமான சடைமுடி, நெற்றியிலுள்ள கண்ணி மாலையும், காதிலுள்ள வட்டமான குழையும், கழுத்தைச் சுற்றியுள்ள அணிகளும், மார்பில் உள்ள நூலும், இடையில் உள்ள ஆடையும், காலில் உள்ள தண்டையும் இங்கு மிக நன்றாக வடிக்கப்பட்டுள்ளன. வீழ்ந்து கிடக்கும் முயலகன் தன் முதுகில் கால்வைத்து அதிரவீசி ஆடும் பெருமானின் ஆடலை முழுதும் காணவேண்டி தன் கழுத்தைச் சாய்த்து முகத்தை மேல்நோக்கித் திருப்பிக்காணும் காட்சி அற்புதமானது. இப்படிமத்தின் காலம் கி. பி. 12-ம் நூற்றாண்டின் முற்பகுதி, பாண்டியர் காலத்துக் கலை. பீடத்தின் உயரம்—122 செ.மீ., பீடம் நீக்கி உயரம்—90 செ.மீ. அகலம்—20 செ.மீ.

## 2. சிவகாமி அம்மன் :

இப்படிமம் இடையை வலப்புறமாக ஒடித்து இடது காலை மடித்து முன்நிறுத்தி திரிபங்கத்தில் தாமரை இருக்கை மீது நின்ற கோலத்தில் வார்க்கப்பட்டுள்ளது. இவ்வாலயத்தில் உள்ள படிமங்களில் எல்லாம் கலைச் சிகரமாக விளங்குவது இதுவே, அம்மனின் முடியை அலங்கரிக்கும் உயர்ந்த கரண்ட மகுடமும், நெற்றியைச் சுற்றியுள்ள முத்துப் பட்டமும், நீள் செவிகளில் அழகு சேர்க்கும் மகரக்குழையும், தோள்களில் வீழ்ந்துள்ள மலர்மாலையும், கழுத்தை அலங்கரிக்கும் பொட்டுமணி, கண்டிகை, மணியாரம், சரப்பலி முதலியவையும் மேற்கையில் வனப்பூட்டும் பூரிம முகப்புடைய வளையும், முழங்கையைச் சுற்றியுள்ள கடக வளையும், முன்கையிலுள்ள முத்து வளை, செருகு வளை, மணி வளை, குடகம் முதலிய அணிகளும், விரல்களில் அழகு சேர்க்கும் மோதிரமும் கச்சையற்றகுவிந்த தனங்களிடையே ஓடும் நூலும் கொடி இடையின் கீழே அணிசெய்யும் மேகலை, இடைவார், வேலைப்பாடுமிக்க இடைக்கச்சை ஆடைக்கட்டும் காலில் உள்ள பட்டையான தண்டையும், பாதங்களில் சரமும், அன்னையின் அழகுக்கேற்ப மிகப் பொருத்தமாக வடிக்கப் பெற்றுள்ளன. நீண்டுமெலிந்த உடலும், வலப்புறம்ஒயிலாகச் சரிந்த இடையும் குவிந்த மார்பும், மூங்கிலை ஒத்த நீண்ட கரங்களும், நாணத்

தால் குனிந்த தலையும், சிறு கழுத்தும், நாணத்தை வெளிப்படுத்தும் இள நகையும் கனிவான பார்வையும் கொண்டு விளங்கும் இப் படிமம் பாண்டியர் காலத்துப் படிமக் கலைக்கு சிறந்த எடுத்துக்காட்டாகத் திகழ் கிறது. காலம் கி.பி. 12-ம் நூற்றாண்டின் முற்பகுதி.

பீடத்தின் உயரம் — 94 செ.மீ., அகலம் — 14 செ.மீ.

### 3. சோமாஸ்கந்தர்:

இப் படிமம் நீண்ட பீடத்தின் மீதுள்ள தாமரை இருக்கையில் ஸ்கந்தருடன் சிவனும், உமையும், அம்மையப்பனாகத் தோன்றும் காட்சி வார்ப்பிலே வடிக்கப் பெற்றுள்ளது.

**சிவன் :**

சுகாசனத்தில் அமர்ந்து நான்கு திருக்கை களுடன் காட்டப்பட்டுள்ளார். மேற்கை களில் மழுவும், மானும் தாங்கி நிற்க, கீழ்க் கைகள் இரண்டும் அபய முத்திரையிலும், சிம்மகரண முத்திரையிலும் அமைந்து விளங் குகின்றன. நீண்ட கடை மகுடம், மகரக் குழை, ஓலைக் குழை, கண்டிகை, முத்தாரம், சரப்பளி, அரும்புசரம், கேயூரம், காப்பு, பூணூல், வயிற்றுக் கச்சை, இடைக்கச்சை, கழல், பாதச்சரம் ஆகியவை அழகாக அமைந்துள்ளன. நெற்றியில் மூன்றாவது கண் காட்டப்பட்டுள்ளது.

**உமை :**

இப் படிமம், தாமரை இருக்கையில் ஒரு காலை மடித்து மறு காலைத் தொங்கவிட்டு இருந்த கோலத்தில், இரண்டு கைகளுடன் தோற்றமளிக்கிறது. வலக்கை நீலோற்பலத் தைப் பிடித்தும் இடக்கை வரத முத்திரை காட்டியும், அருள்பாலிக்கும் முகத்தோடு அணிகலனும், ஆடைகளும் அணிந்த நிலை யில் படிமம் வார்க்கப்பட்டுள்ளது. பாதச் சரம், சரடு, சரப்பளி, கண்டிகை, பொட்டு மணி, காப்பு, செருகுவலை, கடகம், பஸ்பக் கேயூரம், வாகுமாலை, மகரக்குழை, செவிப்பூ, இரத்தினப்பட்டம், கரண்ட மகுடம் ஆகிய அணிகளை, பாதம் முதல் கேசம் வரை அந்தந்த உறுப்புக்களை அழகு ஊட்டுகின்றன. இவை கி.பி. 12-ம் நூற் றாண்டின் முற்பகுதியைச் சார்ந்தவை. பாண்டியர் கலை.

பீடத்துடன் சிவன் உயரம் — 72 செ.மீ. அகலம் — 21 செ.மீ.

உமையின் உயரம் — 61 செ.மீ., அகலம் 13 செ.மீ.

### 4. வீணாதரமூர்த்தி:

இப் படிமம் சதுரமான பீடத்தின் மீதுள்ள தாமரை இருக்கையில் வலதுகாலை ஊன்றி இடது காலைச் சற்று முன்வைத்து மடித்து திரிபங்கத்தில் நான்கு திருக்கைகளு டன்நின்ற கோலத்தில்வார்க்கப்பட்டுள்ளது. தலையில் உயர்ந்த சடாமகுடம் அலங்கரிக் கிறது. தலையின் பின்புறம் மலர் வடிவான சிர சக்கரம் செருகப்பட்டுள்ளது. பின் தோளில் சுருண்ட கேசங்கள் தாழ்சடையாக வீழ்ந்துள்ளன. நெற்றியைச் சுற்றிலும் மலரும் முத்தும் பதித்த முத்துப்பட்டம் அலங்கரிக்கிறது. வலது காதில் மகரக் குழையும், இடது காதில் வட்டக் குழையும் அணி செய்கின்றன. தோள்களில் வாகு மாலை வீழ்ந்துள்ளது. கழுத்தில் கண்டிகை, முத்துச்சரம், சரப்பளி ஆகிய அணிகள் அலங்கரிக்கின்றன. இடது மார்பில் முத்துக் கள் கோத்த முப்புரி நூல் பிரம்ம முடிச் சுடன் அழகு செய்கிறது. மேல்வயிற்றைச் சுற்றிலும் முத்துக்கள் கோத்த உதரபந்தம் கட்டப்பட்டுள்ளது. மேற்கையில் இலைக் கருக்கணி முகப்புடைய தோல்வளை எழில் கூட்டுகிறது. முன்கையில் மூன்று காப்புகள் உள்ளன இடையிலிருந்து மேல் தொடை வரை தோல் ஆடை அணி செய்கிறது. இடையைச் சுற்றிலும் மலர் கச்சையும் இடைவாரும், அரைப் பட்டிகையையும் அலங்கரிக்க இடையின் பக்கங்களில் ஆடைக் கட்டுகள் முழங்கால் வரை சரிந்து வனப் பூட்டுகின்றன. தொடையின்மீது முத்துத் தாமங்கள் குறங்கு செறியாக வனப்பூட்டு கிறது. காலில் கழலும், பாதங்களில் பாத சரமும் அலங்கரிக்கின்றன.

வீணாதரமூர்த்தியின் வடிவம், மதுரை மாவட்டம் உத்தமபாளையம் சிவாலயத்தில்

உள்ள வீணாதரமூர்த்தியுடன் ஒப்பிடத் தக்கது. பீடத்தையும் சேர்த்து உயரம் — 86 செ.மீ., பீடம் நீக்கி உயரம் — 68 செ.மீ., விரல் அகலம் — 35 செ.மீ., தோள் அகலம்— 20 செ.மீ.

வீணாதரமூர்த்தியின் மேல் வலக்கையில் மழுவும், இடக்கையில் மானும், கர்த்தரி முத்திரையில் காட்டப்பட்டுள்ளன. முன் கைகள் இரண்டும் வீணையை ஏந்தி மீட்டும் பாவனையில் முத்திரையாகக் காட்டப்பட்டுள்ளது. வீணாதரரின் நுதலில் நெற்றிக்கண் காட்டப்பட்டுள்ளது. முகம் 'வ' வடிவிலும் பருவங்கள் வில்லை ஒத்து வளைந்தும், கண்கள் பூவிதழ் வடிவில் நீண்டும், நாசி எள் பூவை ஒத்தும், இதழ்கள் விரிந்தும் இளம் புன்னகை தவழ, முகம் பொலிவுற்று விளங்குகிறது. வீணாதரரின் உடல் வாகு நிற்கும் நிலை, அங்கங்களின் அமைப்பு, விரல்களின் அசைவு, மேனியின் அழகு, முகத்தில் வெளிப்படும் பொலிவு, யாவும் மிகவும் அளவு பொருத்தமாக அமைக்கப்பட்டுள்ளது. பாண்டிய நாட்டுச் சிற்பியின் சீரிய திறனுக்கு இப்படிமம் சான்று பகருகிறது. காலம் கி. பி. 12ம் நூற்றாண்டு. பிற்கால பாண்டியர் கலை. வீணாதரமூர்த்தி வடிவத்தை இக்கோயிலில் சந்திரசேகரமூர்த்தியாக வணங்கி வழிபட்டு வருகின்றனர். உற்சவ காலங்களில் இப்படியும் உலாவாக எடுத்துச் செல்லப்படுகிறது. திருவாசி இணைக்க கொம்புகள் மட்டும் உள்ளன.

### 5. போக சக்தி :

இப்படிமம் தாமரை இருக்கைமீது இடது காலை ஊன்றி வலது காலைச் சற்று மடித்து இடை ஒடித்து வலது கை நீலோற்பல மலரை கடக முத்திரையில் பிடித்துள்ளது. இடது கை லோல முத்திரையில், தாழ்கையாகத் தொங்குகிறது. தலையில் கூர்மையாகி கரண்ட மகுடம் அலங்கரிக்கிறது. மகுடத்தின் நான்கு புறங்களிலும் பூரிமங்கள் தைக்கப்பட்டுள்ளன. தலையின் பின்புறம் சிர சக்கரம் மலர் வடிவில் அலங்கரிக்கிறது. நெற்றியில் ரத்தினப் பட்டமும் இரு காதுகளில் மகரக் குழையும், தோளில் மெல்லிய வாகு மாலையும், கழுத்தில் பொட்டுமணியும், ஆரம, கண்டிகை, சரப்பளி, சரடு ஆகிய அணிகளும், மேற்கையில் பூரிய முகப்புடைய தோள் வளையும், முன் கையில கைவளையும், மார்பில் புரிநூலும், நடுவயிற்றில் திருவேதிக்கோடுகளும், இடையிலிருந்து முழங்காலுக்குக் கீழ்வரை வேலைப்பாடு மிக்க கீழ் ஆடையும், இடையைச் சுற்றிலும் இடைவார், மேகலை, மலர்க்கச்சை ஆகியனவும் தொடைமீது தொங்கும் தாமங்களும், காலில் பாதச்சரமும், அலங்கரிக்க உமையின் வடிவம் கவினுற வார்க்கப்பட்டுள்ளது.

ஒடுங்கிய முகமும் மெல்லிய புருவமும், நீண்ட நாசியும், அருள்பாலிக்கும் திறந்த கண்களும், இளநகை புரியும் விரிந்த இதழ்களும், குறுகிய தாழ்வாயும், சிறிய கழுத்தும் மூங்கிலை ஒத்த நீண்ட கைகளும், வனப்பூட்டுகின்ற தனங்களும், வச்சிர இடையும், பதிந்த உந்தியும், நீண்ட கீழ் உடலும் கொண்டு திரிபங்கத்தில் ஒயிலாக வடிக்கப்பட்டுள்ள இப்படிமம் கி. பி. 12ம் நூற்றாண்டைச் சார்ந்தது.

இவ்வாலயத்தில் இப்படிமம் போகசக்தி என்ற பெயரில் வழிபாட்டில் உள்ளது. இவ் அம்மன் இவ்வாலயத்தில் உள்ள வீணாதர மூர்த்தியின் தேவியாக இருத்தல் வேண்டும். உயரம் — 78 செ.மீ., அகலம் — 13 செ.மீ.

### 6. பிடாரி அம்மன் :

சதுரமான பீடத்தின் மீதுள்ள தாமரை இருக்கையில் நான்கு கைகளுடன் நேராக நின்ற கோலத்தில் வார்க்கப்பட்டுள்ளது. மேல் வலக்கை திரிசூலத்தைப் பிடித்துள்ளது. இடக்கை கபால கிண்ணத்தைத் தாங்கியுள்ளது. தலையின் பின்புறம் மேல் நோக்கி விரிந்த அனல் மகுடம் அழகு செய்கிறது. மகுடத்தின் முன்புறம் பூரிமமும், மகுடத்தின் மேல்வலப்புறம் ஆமும் அரவமுர் காட்டப்பட்டுள்ளன. தலைமீது செவிப்பூக்கள் செருகப்பட்டும் நெற்றியைச் சுற்றிலும் முத்துப் பட்டங்கள் கட்டப்பட்டும் உள்ளன. வலது காதில் பிரேத குண்டலமும், இடது காதில் வட்டக்குழையும் அலங்கரிக்கின்றன. தோளில் வாகுமாலை வீழ்ந்துள்ளது. கழுத்தில் பொட்டுமணி முத்தாரம் சரப்பளி ஆகிய அணிகள் அணி செய்கின்றன. மேற்கையில் பூரிம முகப்புடைய தோள்வளை ஒன்றும்

கேயூரம் ஒன்றும் முன்கையில் காப்பு ஒன்றும் அலங்கரிக்கின்றன. தட்டையான தனங்களின்மீது மார்க்கச்சையும், தனங்களைச் சுற்றிலும் அரவக்கச்சையும், மார்பின் குறுக்கே முத்துப்புரி நூலும், இடையிலிருந்து தொடையின் கீழ்ப்பகுதி வரை இடைக்கச்சையும், இடையைச் சுற்றி மேகலை, இடைவாரும், இடையின் பக்கங்களில் தாழ்ந்து தொங்கும். ஆடைக்கட்டும், காலில் தண்டையும், பாதச்சரமும் அலங்கரிக்கின்றன.

'வ' வடிவான முகமும், வளைந்த புருவமும், விரிந்த கண்களும், திறந்த விழியும் எடுப்பான நாசியும், தடித்த இதழ்களும் கடைவாயில் வளைந்த கோரைப் பற்களும், நெற்றியில் பொட்டும் பெற்று விளங்கும் பிடாரியின் முகத்தில் வீரச்சுவை பொலிகிறது. நீண்டு மெலிந்த உடலும், நிமிர்ந்த பார்வையும், அளவான அங்கமும் பெற்று விளங்கும் இப்படிமம், கி. பி. 12ம் நூற்றாண்டைச் சேர்ந்தது. பிற்கால பாண்டியற் கலை. பீடத்தில் திருவாசி இணைக்கும் கொம்புகள் உள்ளன.

உயரம் பீடத்திலிருந்து — 65.5 செ.மீ.
அகலம் — 12 செ.மீ:

இவ்வூரில் ஆண்டுதோறும் சித்திரைத் திருவிழா ஆரம்பமாவதற்கு முன்பு முதல் செவ்வாயில் கிராம தெய்வத்திற்கு காப்புக் கட்டு விழா எடுக்கும்போது இப்படிமத்தைத் தேரில் எடுத்துச் செல்லுவது மரபு.

## 7. விநாயகர் :

இப் படிமம் தாமரை இருக்கையின் மீது வலது காலை ஊன்றி இடது காலை சிறிது மடக்கி வைசாக ஸ்தானத்தில் நின்ற கோலத்தில் வார்க்கப்பட்டுள்ளது. விநாயகரின் மேல் வலக்கை நீண்ட அங்குசத்தையும், இடக்கை பாசத்தையும் பிடித்துள்ளது. இடக்கை மோதகத்தைத் தாங்கியுள்ளது. பல்வேறு மடிப்புகளுடன் இயற்கையாக நீண்டு இடம் புரியாக வளைந்த துதிக்கை மோதகத்தைப் பற்றுகிறது. தலையில் கரண்ட மகுடமும், சிர சக்கரமும் அலங்கரிக்கின்றன. தோளில் வாகு மாலையும், கழுத்தில் கண்டிகை, ஆரம், சரப்பளி, மணியாரமும், மார்பில் முத்துத் தரித்த முப்புரி நூலும் மேற்கையில் பூரிமத்தை முதுப்பணியாகக் கொண்டு விளங்கும் தோள் வளையும், முன்கையில் காப்பும், மேல் வயிற்றில் இடையிடையே மலர் பதித்த உதரபந்தமும், இடையிலிருந்து மேல் தொடை வரை இடைக்கச்சையும், இடையின் பக்கங்களில் முழங்கால் வரை தொங்கும் ஆடைக்கட்டும், காலில் தண்டையும், பாத சரமும் அலங்கரிக்கின்றன.

மேல் நோக்கி நிமிர்ந்த யானையின் முகம், மூன்று கண்கள், நான்கு கைகள், கரண்ட மகுடம், விரிந்த காது, திரண்ட தோல், பருத்துத் தொங்கிய வயிறு, சதைப் பற்றுள்ள அங்க அமைப்பு, மற்றும் ஆடை அணிகள் யாவும் இப் படிமத்தின் காலத்தைக் கணிக்கத் துணை செய்கின்றன. இப் படிமத்தை வார்த்த சிற்பி, படிம அளவுகளை சிற்ப இலக்கணத்திற்கு ஏற்ப பொருத்தமாகக் கொண்டு படிமத்தை அமைத்துள்ளார். இப்படிமம் கி. பி. 12-13ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது. பிற்கால பாண்டியர் கலை.

## 8. அஸ்தர தேவர் :

பத்மபீடத்தின்மீது செங்குத்தாக உயர்ந்துள்ள வட்டத் தூணில் மேலுள்ள பலகையில் முத்தலை சூலமாக வார்க்கப்பட்டுள்ளது. இப்படிமம் சித்திரைத் திங்களில் பத்து நாட்களில் உலாவாக எடுத்துச் செல்லப்படுகிறது. காலம் கி.பி. 12ஆம் நூற்றாண்டு. பாண்டியர் காலக்கலை. உயரம்-46.5 செ.மீ. அகலம்-16 செ. மீ.

## 9 சண்டேசர் :

இப்படிமம் சதுரமான பீடத்தின் மீது உள்ள தாமரை இருக்கையில் இரு கால்களையும் சமநிலையில் ஊன்றி, நின்ற கோலத்தில் வார்க்கப்பட்டுள்ளது. சண்டேசரின் இரு கைகள் அஞ்சலித்தநிலையில் உள்ளது. நீண்ட தண்டையுடைய மழு வலது முன்தோளில் சார்த்தப்பட்டுள்ளது. தலையில் நீண்ட சடாமகுடம் அலங்கரிக்கின்றது. தலையின் பின்புறம் வட்டமான சிர சக்கரம் உள்ளது. நெற்றியில் இரத்தினப் பட்டமும், வலது காதில் மகரக் குழையும், இடது காதில் வட்டக் குழையும், தோளில் வாகு மாலையும்,

கழுத்தில் கண்டிகையும், சரப்பளியும், மார்பில் முப்புரி நூலும், மேற்கையில் கேயூரமும், முன்கையில் மெல்லிய கைவளையும், மேல் வயிற்றில் மெல்லிய வயிற்றுக் கச்சையும், இடையிலிருந்து மேல் தொடைவரை இடைக் கச்சையும், இடையின் பக்கங்களில் உடலை ஒட்டித் தொங்கும் ஆடைக்கட்டும், தொடை மீது குறங்கு செறியும், காலில் பாதசரமும் அலங்கரிக்கின்றன.

நீண்ட முகமும், உயர்ந்த புருவமும், விரிந்த கண்ணும், எடுப்பான மூக்கும், குவிந்த வாயும், மேல் தூக்கிய தால்வாயும், நீண்டு மெலிந்த உடல்வாகும் கொண்டு இப்படிமம் அமைந்துள்ளது. இப்படிமம் கி. பி. 12ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது. பிற்காலப் பாண்டியர் கலை.

## 10. நர்த்தன ஞானசம்பந்தர் :

இப்படிமம் சதுரமான பீடத்தின் மீது உள்ள தாமரை இருக்கையில் இடது காலை ஊன்றி, வலது காலை தூக்கி மடித்து, அழகாக ஆடும் நிலையில் வார்க்கப்பட்டுள்ளது. வலது கை, கடக முத்திரையில் சுட்டு விரலைச் செங்குத்தாக நிறுத்தி மேல்நோக்கி சுட்டும் கையாக அமைந்துள்ளது. மகிழ்ச்சியில் திளைத்துக் கூத்தாடும் ஞானசம்பந்தரின் காட்சி காண்போர்க்குக் களிப்பூட்டும்.

தலையில் செங்குத்தாகத் தூக்கி முடிந்த கேசபந்தம் தலைக்கோலமாக விளங்குகின்றது. கேசத்தை வாரி மகுடம் போலத் தூக்கி நிறுத்தி மேற்பகுதியில் சுருண்ட கேசங்கள் மகுடத்தைச்சுற்றிலும் எழிலூட்டுகின்றது. மகுடத்தின் நான்கு பக்கங்களிலும் நான்கு பூரிமங்கள் தைக்கப்பட்டுள்ளன. அதன் கீழ் அரும்புச் சரம் ஒன்று அடுக்குகளாக அமைந்து அழகூட்டுகிறது. நெற்றியைச் சுற்றிலும், சுருண்ட கேசங்கள் வனப்பூட்டுகின்றன. தோளின் பின்புறம் சுருண்ட கேசங்கள் சரிந்துள்ளன. தலையின் பின்புறம் பதினெட்டு இதழ்களை உடைய சிர சக்கரம் விரிந்த மலராக செருகப்பட்டு வனப்பூட்டுகிறது. இத்தகைய தலைக்கோலம் பிற்காலப் பாண்டியரின் கலை மரபை வெளிப்படுத்துகிறது.

ஆளுடைய பிள்ளையாரின் காதுகளில் நீலக் குதம்பை அலங்கரிக்கின்றது, தோளில் வாகுமாலை, கழுத்தில் ஆரம், அரும்புச்சரம், மணியாரம், மார்பில் சன்ன வீரம், மேற்கையில் புஷ்ப பூரிமத்தை முகப்பணியாகக் கொண்ட தோள்வளை, முழங்கையில் கடகம், முன்கையில் காப்பு, கைவளை, விரல்களில் மோதிரம், மேல்வயிற்றில் உதரபந்தம், அரையைச் சுற்றிலும் தாம்புக் கயிற்றை ஒத்த அரைஞாண், முத்துக்கள் கோர்த்த பொன்ஞாண், சதங்கை கோர்த்த இடைவார், காலில் தண்டை, சதங்கை கோர்த்த பாத சரம் முதலியவை அணி செய்கின்றன.

ஆடும் பிள்ளையின் முகத்தில் இளம் புன்னகை தவழ்கிறது. குழந்தைப் பருவத்தை வெளிப்படுத்தும் மேனியின் அழகும், அங்கங்களின் அமைப்பும், ஆடையற்ற திருக்கோலமும, அணிகளும் மிகக் கவனத்துடன் வார்க்கப்பட்டுள்ளது. முகத்தோற்றம், உடல் அமைப்பு, அணிகலன்களைக் கொண்டு கி.பி. 12-13ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகக் கருதப்படுகிறது. பிற்கால பாண்டியர் கலை, உயரம்-70 செ.மீ., அகலம்-13 செ.மீ.

## 11. சுந்தரமூர்த்தி :

இப்படிமம் சதுரமான பீடத்தின் மீது தாமரை இருக்கையில் வலது காலை ஊன்றி, இடது காலை சிறிது மடக்கி முன்வைத்து இரண்டு கைகளுடன் நின்ற கோலத்தில் வார்க்கப்பட்டுள்ளது. வலது கை முன் நோக்கி நீண்டு முத்திரை காட்டுகிறது. இடது கை பறவை நாச்சியார் தோளில் அமையும் வண்ணம் அமைந்து விளங்குகிறது.

இப்படிமத்தில் சுந்தரரின் தலைக்கோலம் குறிப்பிடத்தக்கது. தலையின்முன்முடிகளைப் படிய சீவி பின்புறம் அள்ளிக் கொண்டையிட்டு அழகுடன் விளங்குகிறது. சுந்தரரின் பரந்த முகமும், அகன்ற நுதலும், வளைந்த பருவமும், விரிந்த இமையும், திறந்த கண்களும், எடுப்பான நாசியும், சற்று பிரிந்த உதடுகளும், அணியற்ற நீள் செவியும், திரண்ட தோளும், விரிந்த மார்பும், அளவான உடற்கட்டும், ஆடையும், அணியும்

அரசகுமாரனைப் போன்று தோற்றமளிக் கிறது.

செவிப்பூ, வாகுமாலை, கேயூரம், காப்பு, கண்டிகை, சரப்பளி, முப்புரி நூல், இடைக் கச்சை, பாதசரம் ஆகிய அணிகளும், ஆடை. அமைப்பும் படிமத்தை மேலும் அழகு செய் கின்றன. இடையில் உள்ள இடைக்கட்டும், இடையணிகளும், ஆடைக்கட்டும் பொருத்த மாக அமைந்து விளங்குகிறது. கனமாக வார்க்கப்பட்ட இச்செப்புத் திருமேனி பொன் வண்ணத்தில் மிளிர்கிறது. இப் படிமம் கி. பி. 12-13ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது. பிற்காலப் பாண்டியர் கலை. உயரம்—49 செ.மீ. அகலம் – 10 செ.மீ.

## 12. பரவை நாச்சியார்:

இப்படிமம் சதுரமான பீடத்தின் மீது உள்ள தாமரை இருக்கையில் இரு கைகளு டன் திரிபங்கத்தில் நின்ற கோலத்தில் வார்க் கப்பட்டுள்ளது. வலது கை கடக முத்திரை யில் நீலோற்பலத்தை பிடித்துள்ளது. இடக்கை தாழ்கையாக அமைந்து விளங்கு கிறது.

'தமிழம்' என்ற ஒருவகைத் தலைக் கோலம் நாச்சியாரின் இயல்பான அழகிய முடியை மேன்மேலும் அழகுபடுத்துகிறது. இது தலையின் பின்புறம் வட்ட வடிவாக அமைந்து விளங்குகிறது. சுருண்ட குழல்கள் நெற்றியைச் சுற்றிலும் வனப்பூட்டுகின்றன. வட்டக்குழை, செவிப்பூ, வாகுமாலை, கண் டிகை, சரப்பளி, சன்னவீரம், கேயூரம், கட கம், காப்பு, சூடகம், மோதிரம், இடைக் கச்சை, இடைக்கட்டு, மேகலை, குறங்கு செறி, பாதசரம் ஆகிய அணிகளும், ஆடை யும் நாச்சியாரை அழகு செய்கின்றன.

இடையிலிருந்து முழங்காலுக்குக் கீழ் வரை உடலையொட்டிய ஆடையும், இடை யின் பக்கங்களில் நீண்டு தொங்கும் அடைக் கப்பட்டும் நாச்சியாரின் முகப் பொலிவு, நிற்கும் நிலை, அங்கங்களின் அமைப்பு, ஆடை அணிகளின் தன்மை யாவும் கொண்டு கி பி. 12-13ஆம் நூற்றாண்டு. பாண்டியர் காலப் படிமம். உயரம் – 43 செ. மீ.அகலம்—7.5 செ.மீ.

## 13. உமா சகித சந்திரசேகரமூர்த்தி (ஸ்ரீபலி நாயகர்):

நீண்ட செவ்வக பீடத்தின் மீதுள்ள இரு தாமரை இருக்கையின் மீது சிவனும் உமை யும் தனித்தனியாக நின்ற கோலத்தில் உள்ள காட்சி வார்ப்பில் வடிக்கப்பட்டுள்ளது.

### சிவன்:

தாமரை இருக்கை மீது சமபங்கத்தின் நான்கு திருக்கைகளுடன் தோன்றும் இப் படி மம் எழில் மிக்கது. சிவனின் மேல் வலக்கை, இடக்கை முறையே கர்த்தரி முத்திரையில் மழுவையும் மானையும் தாங்கி நிற்கின்றன. கீழ் வலக்கை அபயம் அளிக்கிறது. இடக்கை அழைத்து வழங்கும் ஆகூய முத்திரை காட்டு கிறது. தலையில் நீண்ட சடை மகுடமும், பின்புறம் வட்டமான சிர சக்கரமும் அலங் கரிக்கின்றன. வலது காதில் மகரக் குழையும், இடது காதில் ஓலைக் குழையும், தோளில் வாகுமாலையும், கழுத்தில் கண்டிகை மற்றும் சரப்பளியும், மேற்கையில் பூரிமமுகப்புடைய தோள் வளையும், கேயூரமும், முன்கையில் காப்பும், மேல்வயிற்றில் உதரபந்தமும், இடையிலிருந்து மேல்தொடை வரை மடிப் புடன் கூடிய ஆடையும், இடையின் பக்கங் களில் ஒட்டிச் செல்லும் ஆடைக்கட்டும் இடைக்கட்டும், காலில் கழலும், பாதங் களில் பாதசரமும் அலங்கரிக்கின்றன.

மெலிந்து நீண்ட உடலும், நிமிர்ந்த தோளும், விரிந்த மார்பும், பெருமிதமான முகத்தோற்றத்தை வெளிப்படுத்தும் பார் வையும், படிம அளவு முறைப்படி வார்க்கப் பட்டு விளங்குகிறது. இப்படிமம் கி. பி. 12ஆம் நூற்றாண்டின் தொடக்கப் பகுதி யைச் சார்ந்தது. பிற்காலப் பாண்டியர் கலை. உயரம்—47 செ. மீ. அகலம்—8 செ.மீ.

### உமை:

சிவனின் இடப்புறத்தில் இரண்டு திருக் கைகளுடன் உமையின் நின்றகோலம் திரிபங் கத்தில் காட்டப்பட்டுள்ளது. உமையின் வலக்கை கடக முத்திரையில் நீலோற்பலத் தைப் பற்றிப் பிடித்துள்ளது. இடக்கை தாழ்கையாக அமைந்துள்ளது.சிறிய கரண்ட மகுடம், சிர சக்கரம், இரத்தினப் படம், மகரக்குழை, வாகுமாலை, பொட்டு தாலி,

பதக்கம், சன்னவீரம், தோள்வளை, கேயூரம், கைவளை, காப்பு, மோதிரம், இடையிலிருந்து முழங்காலுக்குக் கீழ் வரை உடலையொட்டிய ஆடை, தண்டை ஆகிய அணிகலன்கள் உமை அன்னையை அழகு செய்கின்றன. இச்சிற்பத்தின் மகுடம் முகப்பொலிவு, அங்கங்களின் அமைப்பு, ஆடை அணிகலன்கள், யாவும் சிவபெருமானின் சிற்ப அமைதியிலிருந்து காலத்தால் மாறுபட்டு விளங்குகிறது. இப்படிமத்தின் உலோக வார்ப்பில் அதிக செம்பு சேர்க்கப்பட்டுள்ளது. இச்சிற்பம் காலத்தால் பிற்பட்டது. காலம் கி.பி. 16ஆம் நூற்றாண்டில் மலர்ந்த நாயக்கர் கலை. உயரம்—42 செ. மீ. அகலம்—8 செ.மீ.

## நகரத்தார் கலை:

இக்கோயிலிலுள்ள 18 செப்புத்திருமேனிகள் நகரத்தார் காலத்தில் செய்தளிக்கப் பட்டதாக அறியப் படுகிறது. இச்செப்புத் திருமேனிகளின் உடலமைப்பு நிற்கும் நிலை, முகப்பொலிவு, மேனியின் தன்மை, அங்கங்களின் அமைப்பு, அளவுமுறை, ஆடை அணிகலன்கள் யாவற்றையும் கொண்டு நகரத்தாரின் கலை என்ற முடிவுக்கு வருகிறோம்.

## சந்திர சேகர அம்மன்:

சதுரமான பீடத்தின் மீதுள்ள தாமரை இருக்கையில் இரண்டு கைகளுடன் திரிபங்கத்தில் நின்றகோலத்தில் வடிக்கப்பட்டுள்ளது. வலதுகை, கடகமுத்திரையில் மலர் ஏந்தும் பாவனையில் உள்ளது. இடக்கை தாழ் கையாக அமைந்துள்ளது, தலையில் உயர்ந்த கேசபந்தமும், பின்புறம் மலர் வடிவான சிர சக்கரமும் அலங்கரிக்கின்றன. நீள் செவிகளின் கீழ் மகரக்குழையும், நெற்றியைச் சுற்றிலும் ரத்தினப் பட்டமும், கழுத்தில் பொட்டுமணி, ஆரம், கண்டிகை ஆகிய அணியும், தோளில் வாகு மாலையும், மேற்கையில் பஷ்ப பூரிமமும், முழங்கையில் கடகமும், முன் கையில் முத்து வளையும், விரல்களில் மோதிரமும், மார்பில் நூலும், இடையில் இருந்து முழங்காலுக்குகீழ்வரை இடைச்கச்சையும், இடைனயச் சுற்றிலும் மேகலை, மற்றும் இடைவாரும், தொடை மீது குறங்கு செறியும், பாதங்களில் பாதச் சரமும், அலங்கரிக்கின்றன. நீண்டு குவிந்த முகமும் தூக்கிய புருவமும், விரிந்த இமையும், திறந்த கண்களும், கூரிய மூக்கும், சற்று திறந்த இதழ்களும், கொண்டு அமைதியே வடிவாக அன்னையின் வடிவம் வார்க்கப்பட்டுள்ளது, பருத்த உடலும், திரண்ட தனங்களும், துடி இடையும், முன்வயிற்றில் திருவேதிக்கோடுகளும் கொண்டு இப்படிமம் வனப்புடன் வார்க்கப்பட்டுள்ளது. காலம் கி. பி. 18ம் நூற்றாண்டு.

பீடத்துடன் உயரம்—70 செ. மீ., தோள் அகலம்—12 செ. மீ.

### 15. தனி அம்மன்:

இப்படிமம் தாமரை பீடத்தின் மீது இரு கால்களையும் ஊன்றி, வலப்புறம் இடையை ஒடித்து இரு கைகளுடன் நின்ற கோலத்தில் வார்க்கப்பட்டுள்ளது. கடக முத்திரையில் வலக்கையும், லோக முத்திரையில் இடக்கையும் கொண்டு, தலையில் உயர்ந்தகேசபந்தம் தரித்து விளங்குகிறது. முத்துப்பட்டம், மகரக் குழை, பொட்டுத்தாலி, கண்டிகை, சரடு கேயூரம், கைவலை, சம்ம முக இடைக் கச்சை, தண்டை, பாதச் சரம் ஆகிய அணிந்து தோற்றமளிக்கிறது. பருத்துத் தடித்த உடலும், வச்சிர இடையும், பெருத்த தனமும், நிமிர்ந்த மார்பும், சற்று வலப் புறம் சாய்ந்த கழுத்தும், அகன்ற முகமும், தூக்கிய புருவமும், விரிந்த இமையும், திறந்த விழிகள் நேர் பார்வையும், கூரிய மூக்கும், குனிந்த இதழும் கொண்டு விளங்கும் தேவியின் படிமம் நகரத்தார் கால கலைக்குச் சிறந்த எடுத்துக் காட்டாகும். காலம் கி. பி. 19ஆம் நூற்றாண்டின் தொடக்கப் பகுதி

பீடத்துடன் உயரம்—96 செ.மீ., அகலம் —17 செ. மீ.

### 16. பிரதோஷ நாயகர்:

செவ்வக பீடத்தின் மீதுள்ள இரு தாமரை இருக்கையில் சிவனும், உமையும் நின்ற கோலத்தில் வார்க்கப்பட்டுள்ளது. சிவன் மேற்கைகளில் மழுவும், மானும் ஏந்தி, கீழ் கைகளில் அபயவரதம் அளிக்கும் நிலையில் அமைந்துள்ளன. உமையின் வலக்கை நீலோற்பலம் பற்றியும், இடக்கை தாழ்

கையாகவும் அமைந்துள்ளன. சிவன், உமை, இருவருடைய முடியை சடா மகுடமும் பந்த மும் அலங்கரிக்கின்றன.

காலம் கி. பி. 19ஆம் நூற்றாண்டு தொடக்கப் பகுதி. நகரத்தார் கலை.

சிவன் உயரம்—4 3 செ., மீ; அகலம்—7 செ. மீ.

உமையின் உயரம்—37 செ. மீ., அகலம் —6 செ. மீ.

## 17. சுப்பிரமணியர்:

சதுரமான பீடத்தின் மீதுள்ள தாமரை இருக்கையில் நான்கு கைகளுடன் சம பங்கத் தில் நின்ற கோலத்தில் வார்க்கப்பட்டுள் ளது. மேற்கைகள் இரண்டும் சக்திபடையை யும், வச்சிரப்படையும் பற்றியுள்ளன. கீழ் கைகள் அபயம் வரதம் அளிக்கிறது. கரண்ட மகுடம், சிர சக்கரம், மகர குண்டலம்,கண்ட மாலை, கேயூரம், பூணூல், காப்பு, தண்டை ஆகியவை அணி செய்கின்றன. காலம்—19 ஆம் நூற்றாண்டு தொடக்கப் பகுதி நகரத் தார் கலை.

உயரம்—58 செ. மீ., அகலம்—10 செ.மீ.

## 18 வள்ளி

இப்படிமம் தாமரை பீடத்தின் மீது இரண்டு கைகளுடன் திரிபங்கத்தில் நின்ற கோலத்தில் வார்க்கப்பட்டுள்ளது. இடது கை தாமரையைப் பிடித்தும், வலது கை தாழ்கையாகவும் அமைந்து காணப்படு கிறது. கரண்ட மகுடம், சிர சக்கரம், பத்ர குண்டலம், பதக்கம்,மணியாரம், குஜபந்தம், சன்ன வீரம், கேயூரம், காப்பு, கைவளை, இடைக் கச்சை, தண்டை ஆகியவை அணி செய்கின்றன. காலம் கி. பி. 19ஆம் நூற் றாண்டு தொடக்கப் பகுதி.நகரத்தார் கலை.

உயரம்—48 செ. மீ., அகலம்—8 செ. மீ.

## 19. தெய்வானை:

இப்படிமம் தாமரைப் பீடத்தின் மீது இரண்டு கைகளுடன் நின்ற கோலத்தில் வார்க்கப்பட்டுள்ளது. வலது கை அல்லி மலரைப்பற்றியும், இடது கை தாழ் கையாகவும் அமைந்துள்ளது. கரண்ட மகு டம், மகர குண்டலம், கண்ட மாலை, பதக் கம், கேயூரம், காப்பு,இடைக்கச்சை,தண்டை ஆகியவை அலங்கரிக்கின்றன. இதற்கு மார் கச்சை இல்லை. காலம் கி. பி. 19ஆம் நூற் றாண்டு தொடக்கப்பகுதி. நகரத்தார் கலை

உயரம்-47. 5 செ. மீ., அகலம்—75செ. மீ

## 20. சுந்தரமூர்த்தி:

தாமரை இருக்கை மீது இரண்டு கை களுடன் நின்ற கோலத்தில் வார்க்கப்பட் டுள்ளது. வலது கை தாமரையைப் பற்றி யுள்ளது. இடது கை பரவை நாச்சியாரின் தோளில் அமையும் பாவனையில் வார்க்கப் பட்டுள்ளது. காலம் கி, பி. 19ஆம் நூற் றாண்டு. நகரத்தார் கலை

உயரம் 59 செ. மீ., அகலம்—11செ. மீ.

## 21. மாணிக்கவாசகர்:

தாமரை இருக்கை மீது இரண்டு கை களுடன் நின்ற கோலத்தில் வார்க்கப்பட்டுள் ளது. வலது கை சின் முத்திரையுடனும் இடது கை சுவடு ஏந்தியும் உள்ளன. தலை கழுத்து, புஜம், முன் கைகளில் அக்க மாலை அணி செய்கிறது மார்பில் பூணூலும்,இடை யில் கௌபீனமும், கட்டப்பட்டுள்ளது. காலம் கி. பி 19ஆம் நூற்றாண்டு தொடக் கப்பகுதி. நகரத்தார் கலை.

உயரம்—47 செ. மீ.,அகலம்—10 செ.மீ.

## 22. ஞானசம்பந்தர்:

தாமரை இருக்கை மீது இரண்டு கை களுடன் நின்ற கோலத்தில் வார்க்கப்பட் டுள்ளது. வலதுகை சூசி முத்திரை காட்டியும் இடது கை பொற்கிண்ணம் ஏந்தியும் உள்ளன. தலை, கழுத்து, புஜம், முன்கை களில் அக்க மாலையும், மார்பில் பூணூலும், ஆடையற்ற இடையில் அரைஞாணும் அலங் கரிக்கின்றன. காலம் கி. பி. 18ஆம் நூற் றாண்டு தொடக்கப் பகுதி.நகரத்தார் கலை.

உயரம்-48 செ. மீ., அகலம்-11 செ.மீ.

## 23. கொங்கண சித்தர்:

சிவனடியாரில் ஒருவரான கொங்கண சித்தருடன் இத்தலம் தொடர்பு உடையது.

இவர் தாமிரத்தை தங்கமாக்கும் ரசவாதத்தைக் கற்றிருந்தார். இரும்பு முதலிய நவ லோகங்களும்; சூதம், லிங்கம், அரிதாரம் முதலிய ரசவாதத்திற்குரிய பொருள்களோடு தாமிரத்தைச் சேர்த்தால் பொன் கிடைக்கிறது என்பதை அறிந்திருந்தார். முதல் முயற்சியில் 16 மாற்று தங்கம் கிடைத்தது. பின்னர் 500 மாற்றுவரை தாமிரத்தை தங்கமாக்கினார். தஞ்சை பதி சென்று பெருவுடையாரை வேண்டி நிற்க, ''கொங்கணரின் ஆசையை பாண்டிய நாட்டில் நிறைவேற்றுவோம்'' என ஈசன் அருளினார். பாண்டிய நாடு வந்த சித்தர் காட்டில் தங்கி விளாரி என்ற பச்சிலைச் சாற்றைப் பிழிந்து உலோகங்களை அக்னியில் காய்ச்ச 500 மாற்று பொன் கிடைக்கக்கண்டு மகிழ்ந்தார். மேலும் ஆசை அதிகரிக்க மாற்று பெருக்கவேண்டி காடுகளில் திரிந்து அலைந்தபோது முனிவர் ஒருவர் தோன்றி அவரை மதுகபுரம் செல்லுமாறும் அங்குள்ள தான்தோன்றி ஈசுவரரை பூசித்தால் அவர் எண்ணம் ஈடேறும் என்றும் கூறி மறைந்து விட்டார். கொங்கணச் சித்தர் ஆவலுடன் இவ்விடத்தை அடைந்து நீராடி, ஈசனை பூசை செய்து வணங்கியதும் ஆயிரம் மாற்று தங்கத்தைவிட அதிகமாக ஒளிவீசிக் கொண்டு கொங்கண சித்தருக்கு காட்சியளித்தார் தான்தோன்றி ஈசுவரர். இவ்விதம் ஈசன் தானே தோன்றி கொங்கண சித்தருக்கு காட்சியளித்து பொன்னாசை நீங்கியது மதுகபுரம் என்ற இலுப்பக்குடி தலமாகும்.

இத்தலத்தில் கொங்கண சித்தர் வில்வ மரத்தடியின் கீழுள்ள தான்தோன்றி ஈசுவரரை வணங்கி வழிபடும் சிற்பம் லிங்க வடிவில் நாகர் மண்டபத்திலுள்ளது.

இதே கோயிலில் கொங்கண சித்தரின் செப்புத் திருமேனி ஒன்று உள்ளது. அதன் விபரம் வருமாறு:

### *கொங்கண சித்தரின் செப்புத் திருமேனி*

இப்படிமம் தாமரை இருக்கைமீது வலது காலை ஊன்றி, இடது காலை சற்று முன் வைத்து நின்றகோலத்தில் இரண்டு கைகளுடன் வார்க்கப்பட்டுள்ளது. வலது கை சின் முத்திரையில் அக்க மாலையைப் பற்றியுள்ளது. இடதுகை ஒடுரநந்தியுள்ளது. தலையை மராட்டிய மன்னர்கள் அணியும் டர்பன் வடிவிலுள்ள தலைப்பாகை அழகு செய்கிறது. அணியற்ற நீண்ட தொல்லைக் காதுகள், முகத்தில் மீசையும், நீண்ட தாடியும் காட்டப்பட்டுள்ளன. கழுத்திலிருந்து மார்பு வரை நீண்ட அக்க மாலை ஒன்று அழகு செய்கிறது. இடது மார்பில் மெல்லிய அங்கியும், அரையில் முழங்கால்வரை ஆடையும் அணிந்து எளிமையான தோற்றத்துடன் கொங்கண சித்தரின் வடிவம் வார்க்கப்பட்டுள்ளது. தமிழகக் கோயில்களில் இங்கு (இலுப்பக்குடியில்) மட்டும்தான் கொங்கண சித்தருக்கு படிமம் உள்ளது என்பது தனிச் சிறப்பாகும்.

இது கனமாக வார்க்கப்பட்ட செப்புத் திருமேனி. காலம் கி. பி. 19ஆம்நூற்றாண்டு தொடக்கப்பகுதி. நகரத்தார் கலை. இது மண்ணிலிருந்து புதையலாக எடுக்கப்பட்டதாக செவி வழிச் செய்தி கூறுகிறது.

உயரம்-71 செ. மீ., அகலம்-15 செ. மீ.

### *பள்ளியறைச் சொக்கர்:*

தாமரை இருக்கை மீது இடது காலை மடித்து வலதுகாலை தொங்கவிட்டுஅமர்ந்த கோலத்தில் வார்க்கப்பட்டுள்ளது. மேற் கைகள் இரண்டும் மழுவையும், மானையும் பற்றியுள்ளன. கீழ் கைகள் அபய முத்திரையிலும், சிம்ம கரண முத்திரையிலும் அமைந்துள்ளன. ஜடாமகுடம், சிர சக்கரம், கண்ட மாலை, பூணூல். கேயூரம், தண்டை, கழல் காப்பு, ஆகியவை அலங்கரிக்கின்றன. காலம் கி. பி. 19ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி. நகரத்தார் கலை.

உயரம்-28 செ. மீ., அகலம்-7. 5 செ. மீ.

### *பள்ளியறை அம்மன்:*

பீடத்தின் மீது அமர்ந்த கோலத்தில் இரு கைகளுடன் வார்க்கப்பட்டுள்ளது. வலது கை நீலோற்பலம் பற்றி இடது கையால் வரதம் அளிக்கிறது. கரண்ட மகுடம், சிரசக்கரம், ரத்தினப்பட்டம், மகரக்குழை, பதக்கம், கேயூரம், காப்பு, இடைக்கச்சை,

தண்டை ஆகிய அணிகலன்கள் பூண்டு விளங்குகிறது. காலம் கி. பி. 19ஆம் நூற்றாண்டு பிற்பகுதி. நகரத்தார் கலை.

உயரம் - 21 செ. மீ., அகலம்-? செ. மீ.

## 26 பைரவர்:

இப்படிமம் பீடத்தின் மீது நான்கு திருக்கைகளுடன் நேராக நின்ற கோலத்தில் திருவாசியுடன் வார்க்கப்பட்டுள்ளது. மேற்கைகள் இரண்டு உடுக்கையையும், பாசத்தையும் ஏந்தி நிற்க, கீழ்கைகள் திரிசூலத்தையும் கபாலத்தையும் பற்றியுள்ளன. சுவாலை மகுடம், பத்ர குண்டலம், கண்டமாலை, அரவத்தால் ஆன அரைஞாண், தொடை மாலை, சதங்கை ஆகிய அணிகலன்களைக் கொண்டு ஆடையற்ற திருவுருவாய் நாய் வாகனத்தைப் பின்புறம் கொண்டு பைரவர் படிமமே மிகச் சிறியது. இந் நூற்றாண்டின் தொடக்கப் பகுதியில் செய்தளிக்கப்பெற்றது. நகரத்தாரின் படிமக்கலைக்கே சிறந்த எடுத்துக்காட்டாக விளங்குகிறது. நுட்பமான வேலைப்பாடுகள் இப் படிமத்தில் வெளிப்படுத்தியுள்ளது குறிப்பிடத்தக்கதாகும். காலம்கி.பி. 20ஆம் நூற்றாண்டு. நகரத்தார் கலை. உயரம்—11 செ.மீ. அகலம் —2.5 செ.மீ.

## 27. வடிவுடையம்மன் :

இப்படிமம் வலக் கையில் நீலோற்பலம் பற்றி, இடக்கையை தாழ்கையாகக்கொண்டு தலையில் கரண்ட மகுடம் அணிந்து, கழுத்தில் கண்ட மாலை பூண்டு, மார்பில் புரிநூல் ஓட, இடையில் கச்சை அணிந்து திரிபங்கத்தில் நின்ற கோலத்தில் வார்க்கப்பட்டுள்ளது. படிமம் சிறியது. நுட்பமான வேலைப்பாடுமிக்கது. காலம் 20ஆம் நூற்றாண்டின் தொடக்கப் பகுதி. உயரம்—12 செ.மீ. அகலம்—2.6. செ.மீ.





# இலுப்பைக்குடி தான்தோன்றீசுவரர் கோயில் திருவிளையாடற்புராண ஓவியங்கள்

**மா. சந்திரமூர்த்தி**, எம். ஏ.

பதிவு அலுவலர் (பழங்கலை), தொல்பொருள் ஆய்வுத்துறை, சிதம்பரம்.

*திருவிளையாடற் புராணம்:*

திருவிளையாடற் புராணம் மதுரை மாநகரத்தின் சிறப்பைப் பற்றிக் கூறுவது. சிவபெருமான் நிகழ்த்திய மதுரையோடு தொடர்பு கொண்ட அறுபத்து நான்கு திருவிளையாடல்களை இப்புராணம் பேசுகின்றது. இது 3363 பாடல்களைக் கொண்டது. மதுரையைப் பற்றி விரித்துப் பேசும் இப்புராணத்தை **'மதுரைத் தல புராணம்'** என்றே கூறுதல் பொருந்தும். இதற்கு இணையான தல புராணம் மற்றொன்று இல்லை.

*பரஞ்சோதியார்:*

திருவிளையாடற் புராணத்தைப் பாடிய ஆசிரியர் பரஞ்சோதி முனிவர். அவர் திருமறைக்காட்டில்பிறந்தவர். மதுரைமாநகரில் பல்லாண்டுகள் வாழ்ந்தவர். அங்கயற்கண்ணி அம்மையையும் ஆலவாய்ச் சொக்கரையும் அயராது பாடிப்பேறு பெற்றவர். இன்றைக்கு 350 ஆண்டுகட்கு முன் வாழ்ந்தவர்.

*நாயக்கர் ஓவியங்கள்:*

கம்பராமாயணம், பாரதம் முதலிய வைணவ சமயத் தொடர்புடைய இதிகாசங்களை ஓவியமாக்குவதில் முனைந்திருந்த நாயக்க மன்னர்கள், பரஞ்சோதியாரின் திருவிளையாடலையும் ஓவியமாக்கி மகிழ்ந்தனர் எனின் ஆலவாய் அண்ணல் இடத்திலும் அங்கயற்கண்ணி அம்மையிடத்திலும் அவர்கள் கொண்டிருந்த முழு ஈடுபாடே காரணம் எனக் கூறுதல் வேண்டும்.

இதனால் மதுரை மீனாட்சி அம்மன் கோயில் பொற்றாமரைக் குளத்தைச் சுற்றிலும் உள்ள சுவர் முழுதும் ஆலவாய் அண்ணலின் 64 திருவிளையாடல்களையும் எழுதி ஓவியமாக்கி மகிழ்ந்தனர் இவ்வோவியங்கள் ராணி மங்கம்மாள் காலத்தவை. கி. பி. 17ஆம்நூற்றாண்டின் பிற்பகுதியில் தீட்டிய அவ்வோவியங்கள் இன்றும் அழியாப்புகழுடன் விளங்குகின்றன.

## நாயக்கர் காலத்துச் சிற்பங்கள்:

திருவிளையாற் புராணத்தை ஓவியங்களில் மட்டுமின்றி சிற்பங்களில் முதன்முறையாக அறிமுகப் படுத்திய பெருமையும் மதுரையை ஆண்ட நாயக்கர்களுக்கு உரியது. திருமலைநாயக்கர் கட்டுவித்த புதுமண்டபத்திலுள்ள தூண்களிலும், திருப்பரங்குன்றத்தில் முதல் கோபுரத்தை ஒட்டியுள்ள முன் மண்டபத்தூண்களிலும் திருவிளையாடற் புராணம் அழகிய சிற்பங்களாக்கப் பட்டுள்ளதைக்கண்டு களிக்கலாம்.

## நகரத்தார் பணி:

மதுரை நாயக்கர்களைத் தொடர்ந்து வந்த தஞ்சை மராட்டியர்களும் இராமநாதபுரம் சேதுபதிகளும் சிவகங்கைமன்னர்களும் தாம் எடுப்பித்த கோயில்களில் திருவிளையாடற் புராணக் காட்சிகளை ஓவியமாகவும் சிற்பமாகவும் தீட்டியும் செதுக்கியும் மகிழ்ந்து வந்துள்ளனர்.

இவ்வரச மரபினரை அடுத்து தமிழகக் கோயில்களைத் திருப்பணி செய்தும் காத்தும் சைவத்தை வளர்த்து வரும் நாட்டுக்கோட்டை நகரத்தார்களும் தாம்எடுப்பித்த கோயில்களில் திருவிளையாடற் புராணக் காட்சிகளைச் சிற்பமாகவும் ஓவியமாகவும் போற்றி வளர்த்து வந்துள்ளனர்.

## நகரக் கோயில்கள்:

இந்நகரத்தார்களின் குலமரபுக் கோயில்கள் ஒன்பதில் இலுப்பைக்குடி ஒன்றாகும். ஏனைய எட்டுக் கோயில்களான இளையாற்றக்குடி, மாற்றூர், வயிரவன் கோயில், இரணியூர், நேமம் சூரைக்குடி பிள்ளையார்பட்டி வேலங்குடிபோல இந்தக் கோயிலும் பசும்பொன்முத்துராமலிங்கம் மாவட்டத்தில் அமைந்துள்ளது. இவ்வொன்பது கோயில்களில் நகரத்தார் வளர்த்த கட்டடக்கலை, சிற்பக்கலை, படிமக் கலை, ஓவியக்கலை ஆகியவற்றை நன்கு கண்டு இன்புறலாம்.

## இலுப்பைக்குடி ஓவியங்கள்

நகரக் கோயில்கள் ஒன்பதில் இலுப்பைக்குடியில் மட்டும்தான் திருவிளையாடற் புராணம் ஓவியமாக்கப்பட்டுள்ளது இது இக் கோயிலுக்குரிய தனிச் சிறப்புக்களில் ஒன்றாகும்.

இவ்வோவியங்கள் இலுப்பைக்குடிதான் தோன்றி ஈசர் கோயில் திருச்சுற்று மாளிகையின் கீழ்த்திசைத் தூண்களின் மேலுள்ள சுவரில் தீட்டப்பட்டுள்ளன. ஓவியத் தொடர் திருச்சுற்று மாளிகையின் உட்சுவரிலும் காணப்படுகிறது.

புதிய ராஜகோபுரத்தின் வழியாக சுவாமி சந்நிதிக்குச் செல்லும் வழியில் இவ்வோவியத்தைக் காணலாம்.

1842, 1882, 1901, 1959 மற்றும் 1985ல் நடந்து முடிந்த திருக்குட நன்னீராட்டு விழாவினையொட்டி நடந்த கோயில் திருப்பணிகளின் போழ்து இவ்வோவியத்தைப் பழைய நிலையிலேயே காத்துவந்துள்ள பெருமை நகரத்தாருக்கு உரியது.

## திருவிளையாடற் புராண ஓவியம்

இந்திரன் பழி தீர்த்த படலம், வெள்ளையானைச் சாபம் தீர்த்த படலம், திருநகரங்கண்ட படலம், தடாதகைப் பிராட்டியார் திரு அவதாரப்படலம், திருமணப் படலம், வெள்ளி அம்பலத் திருக்கூத்து ஆடியபடலம், குண்டோதரனுக்கு அன்னம் இட்ட படலம், அன்னக் குழியும் வைகையும் அழைத்த படலம், எழுகடல் அழைத்த படலம், மலயத்துவசனை அழைத்த படலம், உக்கிரபாண்டியன் திருஅவதாரப் படலம், உக்கிர பாண்டியனுக்கு வேல்வளை செண்டு கொடுத்த படலம், கடல் சுவறவேல்விட்டம் படலம், இந்திரன் முடிமேல் வளை எறிந்த படலம், மேருவைச் செண்டால் அடித்த படலம், மறை பொருள் உணர்த்திய படலம், மாணிக்கம் விற்ற படலம் முதலிய படலங்

கள் தொடர்ந்து இங்கு ஓவியமாக்கப்பட்டுள்ளன.

*ஓவியக் காப்பு :*

முதலில் பன்னிரு கைகளுடன் யானை முகக் கடவுள் அமர்ந்த கோலத்தில் காட்சியளிக்க ஓவியம் தொடங்குகிறது.

*இந்திரன் பழி தீர்த்தது :*

இந்திர சபையில் தேவேந்திரனும் அவன் மனைவி இந்திராணியும் சிங்கம் சுமந்த மெல் அணைமேல் தோன்ற, அவர்கள் முன்பு நாட்டிய மங்கை ஒருத்தி நடனமாடுகிறாள். அவள் அருகேயுள்ள கலைஞர் இருவரில் ஒருவர்கைத் தாளம் போட, மற்றொருவர் மத்தளம் வாசிக்கிறார். நடன மகளின் தலைக்கோலம், முகப்பொலிவு, அழகிய உடலின் உருவரை, தாள இயலுடன் கூடிய நடனவேகத்தைக் காட்டும் கைகளின் பாவநிலை எல்லாம் ஓர் ஓவிய வல்லுநனின் படைப்பாகத் திகழ்கிறது.

அன்னமென் நடையாள் ஆடும் ஆடல் மேல் ஆர்வம் கொண்ட அமரர் கோனின் காட்சி இங்கு ஓவியமாகக்கப்பட்டுள்ளது. இவ்வோவியத்தின் மேலே **'தேவேந்திரன்'** என எழுதப்பட்டுள்ளது.

அடுத்து அங்கு வியாழதேவன் எழுந்தருளுகிறார். தேவர்கோன் குருவுக்குச்செய்ய வேண்டிய சிறப்பைச் செய்யவில்லை, இதனை,

பைஅரா அணிந்த வேணிப்
பகைவனே அனைய தங்கள்
ஐயனாம், வியாழப் புத்தேள்,
ஆயிடை அடைந்தா னாக,
செய்யதாள் விழிபாடு இன்றித்
தேவர்கோன் இருந்தான் ; அந்தோ !
தையலார் மயலிற் பட்டோர்
தமக்கு ஒரு மதிஉண்டு ஆமோ ?

எனப் பரஞ்சோதியார் பேசுவார்.

அடுத்து நகுடன் என்பவன் இந்திர பதவியை எய்கிறான். அவன் இந்திராணியை விரைந்து எய்தும் எண்ணத்தால் மாதவரை மதித்தானல்லன். அதனால் அகத்தியான் சாபத்திற்கு ஆளாகிறான். இக்காட்சிகள் எல்லாம் இங்கு அழகிய சித்திரமாக்கப்பட்டுள்ளன. இவ்வோவியம் அழிந்த நிலையில் உள்ளது.

ஒரு காட்சியில், தேவேந்திரன் விருத்திராசுரனைக் கொல்ல, ததீசி முனிவர் தமது முதுகெலும்பையே நல்கி, யாக்கை நிலையாமையை இந்திரனுக்கு எடுத்துரைக்கும்காட்சி சித்திரிக்கப்பட்டுள்ளது. பின் இந்திரன் சிவலிங்கத்தைக் கண்டு மகிழ்ந்து துதிக்கும் காட்சி தீட்டப்பட்டுள்ளது. இதனை அடுத்துள்ள பல பகுதிகள் சிதைந்துள்ளன.

தொடர்ந்து வெள்ளை யானைச் சாபம் தீர்த்து, திருநகரம் கண்டது, தடாதகைப் பிராட்டி திருஅவதாரம் செய்தது ஆகிய ஓவியப் பகுதிகள் அறிய முடியாதவாறு அழிந்துள்ளன.

*மீனாட்சி திருமணம் :*

இந்திரன் முதல் ஈசானம் வரையுள்ள எண் திசைக் காவலருடன் மீனாட்சி போர் தொடுக்கும் காட்சியினைக் காணலாம். இறுதியில் மீனாட்சி ஈசான திசையில் எழுந்து ஈசனுடன் குதிரை பூட்டிய தேரில் ஏறி வில் வளைத்து அம்பு தொடுக்கும் காட்சியும் முடிவில் மூன்றாவது தனம் மறையும் காட்சியும் விளக்கப்பட்டுள்ளன.

அடுத்து எங்கும் நான்மறைகள் ஆர்ப்ப, தூரியம்—சங்கம் ஒலிக்க, நான்முகத்தான் வேள்வி செய்ய, திருமால் நீர் வார்த்துக் கொடுக்கஅங்கயற்கண்ணியை ஆலவாய்அண்ணல் கைத்தலம் பற்றும் மணக்கோல வைபவம் அழகியஓவியமாக எழுதப்பெற்றுள்ளது.

''பண்ணும்இன் னிசையும், நீரும் தண்மையும்,
பாலும் பாலில்
நண்ணும்இன் சுவையும், பூவும் நாற்றமும்,
மணியும் அங்கேழ்
வண்ணமும் வேறு வேறு வடிவு கொண்
டிருந்தால் ஒத்தது
அண்ணலும் உலகம் ஈன்ற அம்மையும் இருந்த
தம்மா !''

என்று பரஞ்சோதியார் பேசுவார்.

மீனாட்சி திருமணத்தைக் காண விண்ணுலக மகளிர் எல்லாம் புடைசூழ நிற்கின்றனர். ஒரு புறத்தில் தேவர்களும், இந்திரன், அக்னி, யமன். நிருருதி. வருணன், வாயு,குபேரன் முதலிய எண் திசைக் காவலர்களும் கண்டு போற்றி நிற்கின்றனர். மறுபுறம் அரசர்கள், அமைச்சர்கள்,அடியார்கள் முதலியோர் வணங்கி நிற்கின்றனர். கீழ்ப்பகுதியில் தவ முனிவர்கள் சூழ திசைமுகன் திருமண வேள்வித் தீ ஓம்புகிறார்.

### வெள்ளியம்பலத்தில் திருக்கூத்தாடியது :

அடுத்து பதஞ்சலி முனிவரும், புலிக்கால் முனிவரும் இரு பக்கங்களில் நின்று பணிந்து தொழ வெள்ளி அம்பலத்தில் திருக்கூத்தாடும் பிரானின் உருவம் ஓவியமாகத் தீட்டப்பட்டுள்ளது. அருகில் அம்பலத்தில் ஆடும்அருள் நடனத்தை மங்கையர்க்கரசியார் கண்டு வணங்கி நிற்கிறார். மேலே **'வெள்ளியம் பலத்தில் நடனம் செய்தது'** என எழுதப்பட்டுள்ளது. இவ்வோவியக் காட்சியை நேரில் காணின்,

***''ஆடினான் அமல மூர்த்தி; அஞ்சலி***
***முகிழ்த்துச் சென்னி***
***சூடினார்; அடியில் வீழ்த்தார்; சுருதிஆ யிரநா***
***ஆரப்***
***பாடினார்; பரமா னந்தப் பரவையில் படிந்தார்***
***அன்பு***
***நீடினார்; நிருத்தா னந்தம் காண்பது நியமம்***
***பூண்டார்',***

என்னும் பரஞ்சோதியார் பாடல் கண்முன் தோன்றும்.

### குண்டோதரனுக்கு அன்னமிட்டது :

அடுத்து குண்டோதரனுக்கு அன்னமிட்ட காட்சி மிக இயற்கையாக ஓவியமாக்கப்பட்டுள்ளது. இதில் பல்வகை உணவு வகைகளும் பழக் குவியல்களும் குண்டோதரன்முன் படைக்கப்பட்டுள்ளன.

அவன்முன் அரிசியாலாகிய அன்னம் மலைபோல் குவிக்கப்பட்டுள்ளது. குண்டோதரன் அன்னத்தையும், துவட்டலையும் பொறியல் கறியையும் புளியங் கறியையும் இன்னும் பல்வகைக் கறிகளையும், பாலும் தயிரும், நெய்யும், தேனுமாகிய இவற்றின் பெருக்கினையும், அளவிலாப் பண்டங்களையும் மிடாக்களோடு வாரி வாரி உண்கிறான். தவிர பழக் குவியல்களையும், கன்னல், கரும்பு, தேங்காய், நவதானியங்கள் ஆகியவையும் குண்டோதரன் உண்பதற்கு வரிசையாக வைக்கப்பட்டுள்ளன.

இவ்வளவையும் எளிதாக த்தின்றுதீர்த்து
''நட்டம் ஆடிய சுந்தர ! நங்கை,
எம் பிராட்டி
அட்ட போனகம், பனிவரை
அனைய வாய்க் கிடந்த;
தொட்டு வாய்மடுத் திடவும், என்
சுடுபசி தணியாது;
இட்டுஉ ணாதவர் வயிறுபோல்,
காந்துவது''

என்றான் எனப் பரஞ்சோதியார் பாடுவார். அந்தப் பாடலை மனத்தில் கொண்டு தான் இந்த ஓவியத்தைத் தீட்டினான் கலைஞன் எனின் அது மிகையன்று.

இவ்வோவியத்தில் குண்டோதரனின் முடி சுருண்டிருக்கிறது; முகம் பரந்திருக்கிறது; விழி பருத்திருக்கிறது; பார்வை கடுமையாய்த் தோன்றுகிறது; வயிறு குடத்தைப் போன்று பெருத்திருக்கிறது; உடல் குட்டையாகக் காட்சியளிக்கிறது; ஆனால் குண்டோதரனோ காந்துகின்ற கடும்பசி கொண்டவனைப் போலக் காணப்படுகிறான். அவன் முன்னுள்ள பண்டங்களும்சிற்றுண்டிகளும் பழவகையும் பாணகமும் பார்ப்போரை மிகவும் வியப்பில் ஆழ்த்துவன. திருவிளையாடற் புராணம் புகல்வது போல ஓவியக்கலைஞன் குண்டோதரனை அற்புதமாகத் தீட்டியுள்ளான்.

### அன்னக்குழியும் வைகையும் அழைத்தது :

பின் குண்டோதரனுக்காக அன்னக்குழியும் வைகையும் அழைத்த படலம் சிறந்ததோர் ஓவியமாக்கப்பட்டுள்ளது. குண்டோ

தரனின் உடம்பு எல்லாம் வயிறாய் வீங்க, மலையெனக் கீழே வீழ்ந்து புரண்டு நீர் வேட்கை எடுத்து, அங்கே நீர் நிலை தேடுவானாக எழுந்து, வாவியும் ஓடையும் குளங்களும் கிணறும் வறண்டு போகுமாறு வாய் வைத்து நீரைக்குடிக்கும் காட்சி மிகச் சிறப்பாகக் காட்டப்பட்டுள்ளது.

### எழுகடல் அழைத்தது :

அடுத்து தேவி திருமொழி கேட்டுத் தென்னவராய் நிலம்புரக்கும் காவிதிகழ் மணிகண்டர்,

''கடல் ஒன்றோ எழுகடலும் கூவிவர அழைத்தும்' எனக் கூறி எழுகடலினைத் தருவித்தது வனப்புடன் தீட்டப்பட்டுள்ளது.

இவ்வோவியங்களின் கீழே நான்மாடக் கூடலில் சிவனும் உமையும் தோன்றும் காட்சியும், கடல் சுவற வேல் விட்ட படலமும் தீட்டப்பட்டுள்ளன. இதில் **'வருணன் விட்ட கடலை சுவாமி வற்றச் செய்தது'** என எழுதப்பட்டுள்ளது. அலைகடலின் நடுவே தோன்றும் மீன், நண்டு, ஆமை, சங்கு ஆகிய கடல்வாழினங்கள்கூட மிக அழகாக தீட்டப்பட்டுள்ளன.

### இந்திரன் முடி தகர்த்தது :

மிகச் சிறப்பாக உள்ள ஓவியங்களில் இந்திரன் முடிமேல் வளை எறிந்த படலமும் ஒன்றாகும். உக்கிர வழுதி குதிரை மேலும் இந்திரன் யானை மேலும் வந்து எதிர் எதிரே தோன்ற வழுதி தன் கைவளையைச் சுழற்றி வீச அது இந்திரன் முடியை வீழ்த்துகிறது. அடுத்து அமரர்கோன் முடியிழந்து நிராயுதபாணியாய்ச் செல்கிறான். இதனைக் கண்ணுறும்போது,

***''காய்சின மடங்கல் அன்னான் கைவளை***
***சுழற்றி வல்லே***
***வீசினன்; குலிசம் தன்னை வீழ்த்து, அது***
***விடுத்தான் சென்னித்***
***தேசின்நல் மகுடம் தள்ளிச்***
***சிதைந்தது: லோடும்***
***கூசினன் அஞ்சிப் போனான் குன்று இறகு***
***அரிந்த வீரன்''***

என்று பரஞ்சோதியார் பாடிய பாடல் அப்படியே சுவரிலே ஓவியமாக இங்கு இருப்பதைக் காணலாம்.

தொடர்ந்து மேருவைச் செண்டால் அடித்த படலமும், மறைபொருள் உணர்த்திய படலமும், மாணிக்கம் விற்ற படலமும் சிறப்பாக ஓவியமாக்கப்பட்டுள்ளன.

### வளையல் விற்றது :

இறைவன் வளையல் விற்ற காட்சியில் சிவபெருமான் தாமே வளையல்காரனாகத் தோன்றி உமையவள் கைபிடித்து வளை பூட்டும் நிகழ்ச்சி மிகக் கவர்ச்சியான ஓவியமாக்கப்பட்டுள்ளது. அருகே உமையவளின் பணிப்பெண் ஒருத்தி காட்டப்பட்டுள்ளாள். அவள் முகம் அன்றலர்ந்த செந்தாமரை போல இருப்பதைக் காணலாம்.

### மறை பொருள் உணர்த்தியது

தென்முகக் கடவுள் அட்டமா சித்தி செய்த நிகழ்ச்சியில் இறைவன் அழகிய பெண்களுக்கு அறம் உரைக்கும் காட்சி ஆன்மீக அமைதி தவழும் நிலையில் எழுதப் பெற்றுள்ளது. மிகவும் மென்மையான வண்ணங்களைக் கொண்டு மறை பொருள்உணர்த்தியிருக்கும் பாங்கு பாராட்டத்தக்கது.

### பத்தினிப் பெண்டிர் மயங்கியது :

சிறிது தள்ளி அண்ணல் ஆடையில்லாத உருவில் எண்கரங்களுடன் தோன்றி தாருகா வனத்து வீதிகளில் பிச்சை புகுவதும், அண்ணலின் பேரழகைக் கண்டு காமுற்ற முனிப்பெண்டிர் தங்கள் ஆடைகள் நழுவ, அங்கங்கள் வெளிப்பட, கற்பினை இழந்த நிகழ்ச்சி அதற்கு ஏற்ற முறையில் தீட்டப்பட்டுள்ளது. கங்காதரனுக்கு அருகேதுள்ளிக் குதிக்கும் மானும், குள்ளச் சிறுகணமும் ஓவியமாக எழுதப் பெற்றுள்ளன. இவை இக் கோயிலிலுள்ள இவ்வகைச் சிற்பங்களுடன் ஒப்பிடத்தக்கன.

### பிட்டுக்கு மண் சுமந்தது

திருவாசகம் அருளிய மணிவாசகரின் வாழ்க்கை வரலாறு மதுரையோடு நெருங்கிய தொடர்புடையது. மதுரையை ஆண்ட

பாண்டிய மன்னனுக்கு மணிவாசகப் பெருமான் அமைச்சராக இருந்தார் எனச் சரித்திரம் கூறும். அவருக்காகவே சோமசுந்தரக் கடவுள் பிட்டுக்கு மண்சுமந்து பிரம்படி பட்டார் என்றும், நரிகளைக் குதிரைகள் ஆக்கினார் என்றும் புராணங்கள் புகலும் செய்தி இங்குள்ள சுவரில் ஓவியமாக்கப் பெற்றுள்ளது.

### பிரம்படிபட்டது

பிட்டுக்கு மண் சுமந்த காட்சியில் சிவபெருமான் வைகையாற்றில் மண்வெட்டியுடன் வந்தபோது கிழவியிடம் பிட்டு வாங்குவதும், மறுபுறத்தில் பாண்டியன் தோன்றி அவன் மேனியில் பிரம்பால் அடிப்பதும் காண்போரை மெய்சிலிர்க்க வைக்கும் ஓவியங்களாகும்.

ஞானசம்பந்தர் முன்னிலையும், சமணர்கள் தோன்றி அனலிலும் ஆற்றிலும் சுவடிகளை விட்டதை மற்றொரு ஓவியம் நம் மனக்கண்முன் நிறுத்துகின்றன.

### பாண்டியன் சுரம் தணித்தது

கூன் பாண்டியனுக்குச் சுரம் இறங்கிய நிகழ்ச்சியும் :மிக அழகாக எழுதப் பெற்றுள்ளது.

பாண்டியன் அரசுக் கட்டிலில் படுத்திருக்க அவன் முன்பு மூன்று கைகளில் மயில் பீலியுடன் தோன்றிச் சமணர்கள் தங்கள் மந்திரம் ஓதுகின்றனர். அவ்வோவியக் காட்சியில் கூன்பாண்டியனுக்குப் பின்புறம் ஞானசம்மந்தர் அமர்ந்து பாண்டியன் சுரம் தணித்த நிகழ்ச்சி மிகவும் தெளிவாகச் சித்திரிக்கப்பட்டுள்ளது.

### சமணரைக் கழுவில் ஏற்றியது:

மறுபுறம் சமணர்கள் நால்வர் கழுமரத்தில் ஏற்றப்பட்டு உயிர்விடும் காட்சிதீட்டப்பட்டுள்ளது! கழுவில் சமணரது உயிர்பிரியும் நிலையை அவர்களுடைய கண்கள் மிகத் தெளிவாகக்காட்டுகின்றன. கழுவேறிஇறந்த சமணர்களின் உடலை ஏழு காகங்கள்பறந்து வந்து கொத்துகின்றன. கீழே நான்கு நரிகள் கழுவில் பாய்ந்து அவ்வுடல்களைக் கடிக்கின்றன. இவ்விதம் சமணரைக் கழுவில் ஏற்றிய படலம் ஓவியமாக்கப்பட்டுள்ளது.

அடுத்து வன்னிக்கிணற்றைச் சிவலிங்கம் காட்டினதை ஓவியமாகக் காணலாம். இதனை,

> ''கரிஅதுஎன வன்னிகிணறுஇலிங்கம்கூய்
> வணிகமகள் காத்த வாறும்''

எனத் திருவிளையாற் புராண பதிகம் கூறும்.

### ஓவிய விளக்கம்:

இவ்வழகிய ஓவியங்களின் மேலே தேவேந்திரன், வெள்ளியம்பலத்தில் நடனம் ஆடியது எழுகடலை அழைத்தது, வருணன் விட்ட கடலினைஇறைவன் வற்றச்செய்தது, இந்திரன் முடி தகர்த்தது, மகாமேருவைச் செண்டால் அடித்தது, சிவபெருமான் மாணிக்கம் விற்றது, வயிற்றுக்குப் பொருமினது, சுவாமி வளையல் விற்றது, அஷ்டமாசித்தி சுப மிண்டது, கங்காதரனாக வந்து ரிஷி பத்தினிகளை மயக்கியது, தட்சிணாமூர்த்தியாக அருள் பாலித்தது, இரசவாதம் செய்தது, சிவலிங்கத்தைப் பூஜை செய்தது, வன்னிக்கிணறு சிவலிங்கம் காட்டியது, சமணரைக் கழுவில் ஏற்றியது, ஓலைகளை அக்னியில்போட்டது, வெந்ததை வைகையில் போட்டது, கூன் பாண்டியனின் சுரம் நீங்கியது, பிட்டுக்கு மண் சுமந்தது, பாண்டியன் பிரம்பால் அடித்தது முதலிய எல்லா ஓவியங்களும் முறையாக எழுதப்பட்டுள்ளன, இவற்றைக்கொண்டு திருவிளையாடற் புராணக் காட்சிகளைத் தொடர்ச்சியாக அறிந்துகொள்ளமுடிகிறது. ஓவியம் வரைந்த காலத்தைக் கணிக்கவும் ஓவியங்களுக்கு குறிப்பாக எழுதப்பட்டுள்ள எழுத்துக்கள் துணை செய்கின்றன.

இவ்வாறு எழுத்தாலும் ஓவியத்தாலும் பரஞ்சோதியாரின் திருவிளையாடற் புராணம் சுவர் முழுவதும் வெளியிடப்படுத்தப்பட்டுள்ளது. இவை நகரத்தாரின் மகத்தான ஓவியக்கலைக்குச் சான்றாக விளங்குகின்றன.

### பல்வகை வண்ணங்கள்

இவ்வோவியங்களில் நீலம், சிவப்பு, பச்சை, கறுப்பு, வெள்ளை, மஞ்சள், அரக்கு

ஆகிய வண்ணங்கள் பயன்படுத்தப் பெற்றுள்ளன. சிவன், உமை, திருமால், இந்திரன் நான்முகன் ஆகிய தெய்வங்களும், கந்தர்வர் கானவர், விண்ணவர், எண்திசைக் காவலர் அரசன், அமைச்சர், அரசி, அடியார், ஆடவர் மகளிர் ஆகிய உருவங்களும் உரிய முறையில் பொருத்தமான வண்ணம் கொண்டு தீட்டப் பட்டுள்ளன.

*காலம்:*

இலுப்பைக்குடிக் கோயில் வடிவுடையம்மன் சந்நிதியின் கபோதக் கூடுகளில் மூன்று தனங்களுடன் மீனாட்சி ஈசனுடன் போர் தொடுக்கும்காட்சியும் இறுதியில்மூன்றாவது தனம் மறையும் காட்சியும் சிற்பமாக உள்ளன. இவையும் இன்னும் பல சிற்பங்களும் இங்குள்ள ஓவியக் காட்சிகளுடன் ஒப்பிடத் தக்கன. இச்சிற்பமும் ஓவியமும் சமகாலத்தன. எனவே இக்கோயில் நகரத்தாரால் திருப்பணி செய்யப்பட்டகாலத்தில் இவ்வோவியங்கள் தீட்டப்பட்டுள்ளன என்பது வெளிப்படுகிறது. ஓவியத்தின் காலம் கி.பி. 19-ஆம் நூற்றாண்டின் தொடக்கப் பகுதி ஆகும்.

*நகரத்தார் கலைப்பாணி*

மதுரை அங்கயற்கண்ணம்மை ஆலயத்தில் பொற்றாமரைக் குளத்தைச்சுற்றியுள்ள சுவர் முழுதும் நாயக்கரும் மராட்டியரும் திருவிளையாடற் புராணத்தை அழகிய ஓவியமாக தீட்டியுள்ளனர். அவை நாயக்கர் மராட்டியர் கலைப் பாணிகளில் அமைந்துள்ளன. இலுப்பைக்குடி ஓவியம் முந்திய பாணியின் தொடர்ச்சிக்கு ஒரு குறிப்பிடத் தக்க சான்று எனலாம். **நகரத்தார் கால ஓவியப் பாணி மலர்வதற்கு 'இலுப்பைக்குடி ஓவியங்கள்' ஒரு முன்னோடியாக அமைந்து விட்டன.**

கட்டடக் கலை, சிற்பக்கலை மற்றும் ஓவியக்கலையில் உள்ள நகரத்தார் கலைப் பாணி பிற்கால நாயக்க மரபின் தொடர்ச்சி எனலாம். பசும் பொன் முத்துராமலிங்கம் மாவட்டத்தில் அதற்கு முன்பிருந்த சேதுபதி -சிவகங்கை மரபுகளைச் சில வகைகளில் இது இணைத்துக்கொண்டது.

மதுரையில் காணப்படும் திருவிளையாடற் புராண ஓவியத்தின் நயம் இந்த அழகிய ஓவிய வரிசையில் தொடரப்பெற்றிருக்கிறது.



## கட்டுரையாசிரியர் பற்றிய குறிப்பு



## திரு. மா. சந்திரமூர்த்தி

பிறப்பு 1946 பூம்புகார் அருகிலுள்ள நெய்தவாசல் கிராமம்
**கல்வி :** பி. ஏ. (இந்தியப் பண்பாடு), எம் ஏ. (தொல்லியல்).

**பணி** . 1970-ஆம் ஆண்டு முதல் தமிழக அரசு தொல்பொருள் ஆய்வுத்துறையில் தொல்பொருள் ஆய்வாளர், கல்வெட்டாய்வாளர், ஆழ்கடல் அகழ்வாய்வாளர், பதிவு அலுவலர் (பழங்கலை) ஆகிய பல பணிகளில் இருந்துவந்துள்ளார்.

மதுரை, இராமநாதபுரம் மாவட்டங்களுக்கு பதிவு அலுவலராக இருந்தபோது 2500க்கு மேற்பட்ட பழங்கலைப் பொருட்களை பதிவு செய்துள்ளார். தற்போது தென் ஆர்க்காடு-வட ஆர்க்காடு மாவட்டங்கள், மற்றும் புதுவை மாநிலம் ஆகிய பகுதிகளுக்குப் பதிவு அலுவலராகப் பணி யாற்றுகிறார்.

**படைப்பு : 'தமிழகக் கோயிற்கலைகள்' 'பூம்புகார்'** ஆகிய நூல்களின் இணையாசிரியர். **'பராக்கிரம பாண்டியபுரம்' 'இராசராசன் அருங்காட்சியகம்' 'வரலாற்றில் வெற்றிலை'** என்ற நூல்களின் ஆசிரியர்.

தமிழ்ப்பண்பாடு, தொல்லியல், நாட்டுப்புற இயல், மருத்துவயியல், கலையியல் ஆகிய துறைகளில் 250க்கு மேற்பட்ட தமிழ் மற்றும் ஆங்கிலக் கட்டுரைகளைப் படைத்துள்ளார்.

மதுரை காமராசர் பல்லைக்கழகத்தில் தமிழ்நாடு அரசு, நிறுவியுள்ள 'தமிழ்ச் செம்மல்' அறக்கட்டளைச் சொற்பொழிவில் **'பாண்டியர் கலைப்பாணி' 'தமிழகக் கோயிற்கலைகள்'** என்னும் இரு தலைப்புகளில் ஆய்வுப் பேருரை நிகழ்த்தியுள்ளார்.

1980ஆம் ஆண்டு மதுரையில் நடைபெற்ற ஐந்தாம் உலகத்தமிழ் மாநாட்டில் தொல்பொருள் ஆய்வுத்துறையின் தொடர்பு அலுவலராகப் பணியாற்றிய போழ்து, 850 தமிழர்களை ஒன்று சேர்த்து 'வீர விளையாட்டு' என்னும் கலையை நடத்தினார். இதில் 25க்கு மேற்பட்ட வீரப்போர் முறைகளும், சேவல்சண்டை மற்றும் கடாச் சண்டைகளும் நடத்திக் காட்டியிருக்கிறார்.

# இலக்கியவாதிகளும்  நானும்

□ எல். சோமு

யாதும் ஊரே யாவரும் கேளிர் என்ற கணியன் பூங்குன்றனார் காலம் முதல் கவியரசு கண்ணதாசன் அவர்கள் காலம்வரை செட்டிநாட்டைச் சேர்ந்த, சார்ந்த செந்தமிழ்ப் புலவர்களை ஆராய்ந்து அன்பர் திரு. சோமலெ அவர்கள் ஒருநூலாக எழுதி வெளியிட இருக்கிறார்கள். செட்டி நாட்டுப் பெருந்தகைகள் சிலரைப் பற்றி ஒரு சில கருத்துக்களை - நினைவு அலைகளை இந்தக் கட்டுரையில் கூற முயலுகிறேன்.

### விபுலானந்த அடிகள்

விபுலானந்த அடிகள் உருவாக்கிய''யாழ் நூல்'' அரங்கேற்றம் என் இளம் பிராயத்தில் வெகு விமரிசையாக நடைபெற்றது.

விழாவிற்குப் பேராசிரியர் நாவலர் சோமசுந்தர பாரதியார் அவர்கள் தலைமை தாங்கினார்கள். தமிழறிஞர்களும் இசை அறிஞர்களும் சைவ நன்மக்களும் தமிழ்நாடு முழுவதிலுமிருந்து வந்து அத்திருக்கோயிலில் நிரம்பியிருந்தனர்.

அப் பெரு விழாவிற்கு என் தந்தையார் அவர்களுடன் சென்று தமிழ் அமுதைப் பருகும் பாக்கியம் பெற்றேன்.

### சிதம்பரம் செட்டியார்

என் வாழ்வில் நான் சந்தித்த முதல் தமிழறிஞர் என்சிறியதந்தையார் உயர் திரு.பெ. ராம. ராம. சிதம்பரம் செட்டியார் அவர்கள் தான். அவர்களை இத் தமிழ் கூறும் நல்லுலகம் மறக்க இயலாது. யாழ் இசை அமுதம் ஒலிக்கும் போதெல்லாம் அவர்கள் நினைவு அனைவருக்கும் உண்டாகும்.

### என் தந்தையார்

தமிழின் மீது கொண்ட தணியாத ஆர்வத்தால்என் தந்தையார் உயர்திரு.பெ.ராம. ராம. லெட்சுமணன் செட்டியார் அவர்கள் கிடைத்தற்கரிய தமிழ் நூல்களையெல்லாம் திரட்டி வைத்திருந்தார்கள். திருக்கொள்ளம்புதூர் திருக்கோவிலில் அறங்காவலராக அவர்கள் இருந்தபோது, அந்தத் தலத்துக்குச் செல்லும் போதெல்லாம் என்னையும் உடன் அழைத்துச் செல்லுவார்கள். தீபாவளி உற்சவத்துடன் சேர்த்து நடைபெறும் இலக்கிய நிகழ்ச்சிகளையும் என்னைக் கேட்கச் செய்வார்கள்.

மேலைச்சிவபுரி சன்மார்க்க சபை ஆண்டு விழாக்களுக்கு என் தந்தையார்அவர்



களுடன் செல்லும் பாக்கியமும் அங்கே பண்டிதமணி கதிரேசன் செட்டியார் அவர்கள் ஆற்றிய சீரிய செந்தமிழ் உரைகளைக் கேட்கும் வாய்ப்பும் கிடைத்தது.

### டாக்டர் மெ. சுந்தரம்

தமிழில் மட்டுமின்றி ஆங்கிலத்திலும் வல்லவரானதிரு. மெ. சுந்தரம் அவர்கள் எங்கள் ஊரில் ஆண்டுதோறும் கொண்டாடப்பெறும் பொங்கல் விழாவில் ஓர் ஆண்டு கலந்து கொண்டார்கள். அன்னாரது தமிழ் நயத்தில் கட்டுண்டு அறியாப்பருவத்திலேயே அவர்களுடன் நட்புக் கொண்டேன். என் திருமண வைபவத்தில் அவர்கள் ஆற்றிய நல் வாழ்த்து இன்றும் என் மனதில் பசுமையான நினைவாக இருக்கிறது. தமிழ்கூறும் நல்லுலகம் அவர்களை இன்னும் நன்கு பயன்படுத்திக் கொள்ளவேண்டும.

### தமிழ்க் கடல் இராய. சொ.

கோவை நகரத்தார் சங்கத்தில் நான் செயலாளராகவும் தலைவராகவும் இருந்த பொழுது செட்டிநாட்டுத் தமிழறிஞர் பலரைச் சந்திக்கும் பேறு பெற்றேன்.

அவர்களில் முதலாவதாகக் குறிப்பிட வேண்டியவர் தமிழ்க் கடல் இராய. சொ. அவர்கள்.

என்பால் அவர்கள்கொண்டிருந்த பேரன்பால்,பல முறை கோவைக்கு வந்து பல நாட்கள் என் இல்லத்திலேயே தங்கியிருந்தார்கள். எப்பொழுது எந்த ஊருக்குச் சென்றாலும். அந்த வட்டாரத்திலுள்ள தம் நண்பர்குழாத்துக்குத் தம வருகையை அறிவித்து விடுவது அவர்களுடைய வழக்கம். இதன் பயனாக கொங்கு நாட்டுத் தமிழறிஞர்களுக்கு நான் அறிமுகம் ஆனேன்.

ஒரு சமயம் தமிழ்க் கடல் அவர்களைச் சந்திக்க முன்னாள் கல்வி அமைச்சராக இருந்த திரு. அவினாசிலிங்கம் செட்டியார் அவர்கள் என் இல்லத்திற்கு வருகை தந்தார்கள். நான் எவ்வளவோ தடுத்தும், ''நானே மாடிப்படி ஏறி அவர்கள் இருக்கும் இடத்தில் தான் பார்க்க வேண்டும்'' என்று என்னுடனேயே மாடிக்கு வந்து விட்டார்கள். தமிழ்க் கடல் அவர்கள் எப்பொழுது கோயம்புத்தூருக்கு வந்தாலும் அவினாசிலிங்கம் மனையியல் கல்லூரியில் சொற்பொழிவு செய்ய வேண்டும் என்றும் அன்புக் கட்டளையிட்டார்கள்.

இராய சொ அவர்கள் இலக்கியக் கடலில் தோய்ந்து மகிழ்வார்கள். அடுத்து எந்த இலக்கியத்தைத் தொட்டு மேற்கோள் காட்டப் போகிறார்கள் என்பது அவர்களுக்கே தெரியாது. ஒன்றை உணர்ச்சிவயப்பட்டு அழுத்தமாய்ப் பேசுவது அவர்களின் சொற்பொழிவுக்கு ஒரு முத்திரை எனலாம்.

நண்பர்கள் பால் கொண்ட அன்பால் அவர்கள் அழைப்பை ஏற்று விருந்துக்குச் செல்லுவார்கள். ஆனால் உடல் நலன் கருதி அதிகமாக உண்ணாது, மற்றவர்கள் சுவைபட உண்பதைக் கண்டு இன்புறுவார்கள். இக்காட்சி ''உரியன இனிதின் நாமும் உண்டன மன்றோ வென்றான்'' என்ற இராம காதையை நினைவு கூறுகிறது.

### ராஜா சர்

நான் பழகியவர்களில் ராஜா சர் முத்தையா செட்டியார் அவர்கள் அறிவுக்கு ஒரு பொக்கிஷம், பண்புக்கு ஒரு எடுத்துக்காட்டு; விருந்தோம்பலுக்கு ஒரு இலக்கியம்.

மிகப் பெரிய கூட்டங்களிலும் அவர்கள் தனித்தனியே வரவேற்கும் முறை ஈடு இணையற்றது வியக்கத்தக்கது. அந்த விழாக்கள் சீரோடும் சிறப்போடும் நடைபெறும். ஒவ்வொரு சிறு செயலும் கூட அவர்களால் தீர்மானிக் கப்பட்ட தாகவே இருக்கும். மேலும் செயல்பட வேண்டியவற்றை அவர்கள் அறிவிக்கும் பாங்கும நினைவாற்றலும் அலாதியானவை. என்பால் அவர்கள் காட்டிய பரிவும் பாசமும் மறக்க முடியாதன.

ராஜா அவர்கள் ஒரு சகாப்தம் படைத்ததை எண்ணி அக மகிழ்கிறேன்.

### கருங்குளம் ரெனா

ராஜா அவர்கள் மூலமாக, கருங்குளம் ரெனா என்று அழைக்கப் பெறும் உயர்திரு

வாளர் இராம ரெங்கநாதன் செட்டியாரெனா அவர்களுடைய இனிய சுபாவத்தால், நான் அவர்களிடம் எதைச் சொன்னாலும் செய்வோம் என்பார்கள். அவர்களுடைய நற்செயல்களுக்கு எல்லையே கிடையாது.

### கவியரசர் கண்ணதாசன்

கவிஞர் அவர்களை நான் சத்தித்த சந்தர்ப்பங்களும் அப்போது சுவைத்த இலக்கிய இன்பங்களும் ஏராளம். 'தைரியம் இல்லாதவன் ஏகபத்தினி விரதன்' என்று அவர்கள் 'கண்ணதாசன்' இதழில் எழுதியிருந்ததை ஒரு நாள் ஆதார பூர்வமாக மறுத்து வாதிட்டேன்.

கவிஞருடைய அம்பதாம் ஆண்டு நிறைவு விழாவை கோவையில் கொண்டாட காங்கிரஸ் கட்சியைச் சார்ந்த நண்பர் பாலு அவர்களும் அவர்தம் நண்பர்களும் ஏற்பாடு செய்திருந்தார்கள். அதன் நிர்வாகப் பொறுப்புகளை நான் ஏற்றுக் கொண்டிருந்தேன். நகராட்சிக் கலை அரங்கில் எங்கு நோக்கினும் அவர்தம் கவிதைகளால் அலங்கரித்திருந்தேன். இக்காட்சியைக் கண்ணுற்ற கவிஞர் அவர்கள் மெய்மறந்தார்கள். உடன் வந்த கர்நாடக முதல்வர் குண்டுராவ் அவர்களிடம் எனது அன்புப் பணியை எடுத்துக்கூறி அக மகிழ்ந்தார்கள்.

அந்த விழாவில் கவிஞர் அவர்களுக்குப் பொன்னாடை போர்த்தியும் மலர்க் கிரீடம் சூட்டியும் மகிழ்ந்தோம். அவ்விழாவுக்கு நானும் நண்பர்களும் செய்த செலவு எங்கள் பணமானாலும் கணக்குக் கொடுத்தோம். அது அவர்களுக்குப் புதியதோர் அனுபவமாகும்.

கவிஞர் அவர்களை நிகழ்ச்சிகளுக்கு அழைத்தால் ஒப்புக் கொண்டு விடுவார்கள். ஆனால் வருவதற்குத் தாமதம் ஏற்படும்.

ராஜா சர் அண்ணமலை செட்டியார் நூற்றாண்டு விழாவைக்கோவையில் கொண்டாடினோம். அதில் கலந்து கொள்ள கவிஞர் ஒப்புக் கொண்டிருந்தார்.

முதல் நாள் தேவகோட்டையில் கந்த சஷ்டி விழாவில் கவிஞர் கலந்து கொண்ட போது நண்பர் திரு. காளைராஜா அவர்கள் இதை நினைவுபடுத்தினார்கள்: விழா முடிந்ததும் கவிஞர் திருச்சிக்கு வந்து அங்கிருந்து என்னுடன் தொலை பேசியில் தொடர்பு கொண்டு நிகழ்ச்சிக்கு அவசியம் வந்து விடுகிறேன் என்று உறுதியாகச் சொன்னார்கள்.

குறிப்பிட்டபடி அந்த விழா ம.பொ.சி. அவர்கள் தலைமையில் நடைபெற்றது. பெருங்கூட்டம்.

ராஜா சர் அவர்கள் மேடைக்கு வராமல் முன் வரிசையில் அமர்ந்து விட்டார்கள். நேரமோ மிகவும் நெருங்கிக் கொண்டே இருந்தது. ''தடுமாறும் போதையிலும் கவி பாடும் மேதை''யின் சொற்பொழிவைக் கேட்க எல்லோருக்கும் ஏக்கம்!

ஆனால் கவிஞர் குறிப்பிட்டபடி வந்து சேரவில்லை. விழா நிறைவுற்று நடன நிகழ்ச்சி நடந்து கொண்டிருந்தது.

இரவு 9.30 மணிக்கு கவிஞர் அலறிஅடித்துக் கொண்டு வந்து சேர்ந்தார். நானும் அவர்களை வரவேற்று நடன நிகழ்ச்சியை இடையில் நிறுத்தி 5 நிமிடங்கள் பேசும்படி கேட்டுக்கொண்டேன்.

உடனே கவிஞர் அவர்களும் அங்கு குழுமியிருந்த பெருங்கூட்டத்தில் பேசத் தொடங்கினார்கள்:

''என் நண்பர் சோமு எது சொன்னாலும் தட்டாமல் செய்வேன். ஆனால் இன்று எதிர்பாராத விதமாக தாமதம் ஏற்பட்டு விட்டதே!'' என வருத்தப்பட்டு ''இங்கேஒரு சில வார்த்தைகளாவது பேசிய பின்புதான் என்னுள்ளம் பேரானந்தம் அடைகிறது'' என உணர்ச்சி பொங்கக் கூறியது இன்று

நினைத்தாலும் என்னை மெய் சிலிர்க்க வைக்கிறது.

மறுநாள் நடைபெற்ற கோவை நகரத்தார் சங்க ஆண்டு விழாவிலும் கலந்து கொண்டு எங்களை மகிழ்வித்தார்கள்.

நான் உடல் நலமின்றியிருந்தபோது,எங்கள் 'வள்ளி வளமனை'க்கு வருகை தந்து என்னைப் பார்த்து ஆறுதல் கூறினார்கள். எங்கள் இல்லத்திற்கு வருகை தந்த பெரியவர்களில் ஒருவராய் பெருமை சேர்த்தார்கள்.

அடுத்து சென்னையில் நடைபெற்ற அவர்தம் 54 வது பிறந்த நாள் விழாவை நானும் சென்னையிலுள்ள என் நண்பர்களும் சிறப்பாகக் கொண்டாட ஏற்பாடு செய்தோம். தமிழக முதல்வர் டாக்டர் எம். ஜி. ஆர் அவர்கள் தலைமையில் மூன்று மாநிலங்களைச் சேர்ந்த சிறந்த கலைஞர்கள்பலரும் கலந்து கொண்டார்கள். நான் ரூபாய் அய்யாயிரம் கொடுத்து கவியரசு குடும்ப நல நிதிஎன்ற டிரஸ்டைத் துவக்கினேன். உடனே நமது தமிழக முதல்வர் அவர்களும் ரூபாய் பத்தாயிரம் கொடுத்து என்னையும் கவிஞர் அவர்களையும் பெருமைப்படுத்தினார்கள். அந்தத் தொகையைக் கவிஞர் கையில் கொடுத்தால் உடனே செலவு செய்து விடுவார் என்று எண்ணி, பணத்தை என் கைகளில் கொடுத்தார்கள். நான் அதை வாங்கிக் கவிஞரிடம் கொடுத்து ஆசி பெற்று அந்தத் தொகையையும் வங்கியில் டெப்பாசிட் செய்தேன்.

சென்னையில் நடைபெற்ற அடகுத் தொழில் அதிபர்கள் மாநாட்டு ஊர்வலத்தைத் துவக்கி வைக்க கவிஞர் அவர்களைக் 'கிளப்பிக் கொண்டு வந்துவிட வேண்டும்' என்ற அளவில் அவர் இல்லத்திற்குச் சென்றேன். அங்கே நான் கண்ட காட்சி :

கவிஞர் அவர்கள் கையில்லா பனியனுடன் பாம்பணையில் துயிலும் பரந்தாமனைப் போல படுத்திருந்தார்கள். குளுமை நிரம்பிய அறை, குழப்பமான சூழ்நிலை,சிந்தனையைத் திரட்டிச் செயலாக்கும் தருணம்! முத்தும் விழலாம்! பவளமும் விழலாம்! ரத்தினமும்விழலாம்! வேண்டியவர்கள் வேண்டியவற்றை எடுத்துக் கொள்ளலாம் என்ற நிலை. ஒரு கவிதை உருவாகும் இந்தக் காட்சி என்னைப் பரவசப்படுத்தியது.

நாங்கள் காத்திருந்த நேரத்தில் அவர்களுடைய பனியனை வெளியில் கொண்டு போய் பணியாள் ஒருவர் இஸ்திரி போட்டுக் கொண்டு வந்தார். அதை அணிந்துகொண்டு மாநாட்டுக்கு வந்த கவிஞர் அந்த நிகழ்ச்சியையும் ஒளிவு மறைவின்றிக் கூட்டத்தில் குறிப்பிட்டார்கள்.

இறுதிக் காலத்தில் அவர் இயற்றிய 'இயேசு காவியம்' பெருமைக்குரியது! அர்த்தமுள்ள இந்து மதம் தந்த கவிஞர் அவர்கள் 'இயேசு காவியம்' இயற்றியதன் மூலம் இந்து—கிறித்துவ மதத்தினர் இரு மதங்களையும் புரிந்து கொள்ள உதவினார் என்றே எண்ணத் தோன்றுகிறது.

கவிஞரின் இறுதி ஊர்வலத்தில் கலந்து கொண்ட இலட்சக்கணக்கான மக்கள் தமிழகம் இப்படிப்பட்ட ஒரு கவிஞரைஎன்று இனி காணப் போகிறது என்று கதறி அழுதனர். சென்னை மாநகர ஷெரிபாக இருந்த திரு. ரெக்சு அவர்களும் நானும் கவிஞருக்கு நினைவு மண்டபம் அமைக்கப் பெருமுயற்சி எடுத்துக் கொண்டோம். அதன் பயனாக, தமிழக முதல்வர் மாண்புமிகு டாக்டர் எம். ஜி. ஆர். அவர்கள் கவிஞரின் இறுதி ஊர்வலத்தை முன்னின்று நடத்தி அரசாங்க மரியாதைகளைச் செய்ததுடன், காரைக்குடியில் கவிஞருக்கு மணி மண்டபத்தை தமிழக அரசு அமைக்கும் என்று மயானத்தில் நடைபெற்ற சடங்குகளின்போது அறிவித்தார்கள்.

கவிஞரின் இறுதி ஊர்வலம் புறப்படும் நேரத்தில் வீடுவரை உறவு வீதிவரை மனைவி காடுவரை மகன் கடைசிவரை 'தமிழ் தமிழ்' என்று என்னை மறந்து முழங்கினேன்.

## தமிழ்வாணன்

சிரிக்கச் சிரிக்கப் பேசி, கல் மனத்தவரையும் வாய்விட்டுச் சிரிக்க வைக்கும் ஆற்றல் படைத்த மாபெரும் எழுத்தாளர் கல்கண்டு தமிழ் வாணன் அவர்களுடன் பழகும் பேறும் பெற்றிருக்கிறேன்.

## சின்ன அண்ணாமலை

தொன்றுதொட்டு நடந்துவரும் அடகுத்தொழில் பாதிக்கப் பட்டிருந்த காலம். அந்தப் பிரச்சினை குறித்து அரசின் கவனத்தை ஈர்க்க, சென்னையில் ஒரு மாநாடு கூட்ட ஏற்பாடு செய்திருந்தோம்.

மாநாட்டிற்கு ராஜா சர் முத்தையா செட்டியார் அவர்கள் அமைச்சர்மாண்புமிகு இராம வீரப்பன் அவர்கள் சிலம்புச் செல்வர் டாக்டர் ம.பொ.சி அவர்கள், அன்பில் தருமலிங்கம் அவர்கள், திருமதி அனந்த நாயகி அவர்கள், முத்தமிழ்க் காவலர் கி. ஆ. பெ. விசுவநாதன் அவர்கள் முதலிய பல பெரியவர்கள் வந்திருந்தார்கள்.

சிறப்புப் பேச்சாளராக நாங்கள் சின்ன அண்ணாமலை அவர்களை அழைக்க மறந்திருந்தாலும், அவர்கள் கூட்டத்தில் ஒருவராக வந்து உட்கார்ந்திருந்தார்கள். அதைப் பார்த்ததும் பேசும்படி பணிவுடன் வேண்டினோம்.

''என் இனம் எப்போது மவுண்ட் ரோடிலே கொடி பிடித்து ஊர்வலம் நடத்தக்கூடிய அளவுக்குத் தைரியம் பெற்றதோ அப்போதே என்னை நான் உங்களுடன் இணைத்துக் கொண்டுவிட்டேன்'' என்று கையொலிகளுக்கிடையே கூறினார்கள்.

## கம்பன் அடிப்பொடி

கம்பன் புகழ்பாடிக் கன்னித் தமிழ் வளர்த்த திரு' சா. கணேசன் அவர்களை நீண்ட நாட்களாக அறிவேன். கொங்கு நாட்டுத் தமிழ் அன்பர்கள் தொழில் அதிபர்கள் பல்வேறு இனத்தவர்களும் அன்னாரிடம் காட்டிய பக்தியையும் மரியாதையையும் பல முறை நேரில் பார்த்து, எனக்கு ஏற்பட்ட பெருமையாகவே கருதி மகிழ்ந்தேன்.

## சோமலெ

அடுத்து என் உள்ளத்தில் இடம் பெற்றுக் கொண்டிருப்பவர் திரு. சோமலெ— அவர்கள். அவர்கள் எழுதியிருக்கும் நூல்களில் என்னை மிகவும் கவர்ந்தது ஓமந்தூர் இராமசாமி ரெட்டியார் அவர்களுடைய வாழ்க்கை வரலாறு. கோயில் என்ற நூலில் சிதம்பர ரகசியங்கள் அனைத்தையுமே தொகுத்துத் தந்திருக்கிறார்கள். திருவண்ணாமலை, இராமேசுவரம், காசி நாட்டுக் கோட்டைச் சத்திர மலர் என்றெல்லாம் எத்தனையோ மலர்களை நாம் நுகரப் படைத்துள்ளார்கள். ராஜா சர் அண்ணாமலைச் செட்டியார், கலைத் தந்தைகருமுத்து தியாகராசச் செட்டியார், ஏ.வி.எம். அவர்கள் மற்றும் காரைக்குடி தேவகோட்டைப் பகுதிகளில் நம் சமூகத் தலைவர்கள் திருப்பணியாளர்கள் புலவர்கள் புரவலர்கள் பற்றியும் நம் சமூகத்தின் பழக்க வழக்கச்சிறப்புக்கள்குறித்தும் ஆயிரமாயிரம் சின்னச் சின்னச் செய்திகளை சோமலெ அவர்கள் சுவையாகச் சொல்ல நான் கேட்டுப் பரவசமடைந்திருக்கிறேன்.

## சித. நடராசன்

நானும் என் சிறிய தகப்பனார் பெ. ராம. ராம. சிதம்பரம் செட்டியார் அவர்கள் மகன்சித. நடராசன் அவர்களும்பிறந்தகாலம் முதல் இன்றுவரை நன்றாக இணைந்து செயலாற்றி வருகிறோம். எங்களின் நெருங்கிய நட்புக்கு இனிய பாலமாக இலங்குவது தமிழ் இலக்கியத் தொடர்புதான்.

சோமு பதிப்பகம் வெளியிட்ட 'நகரத்தார் வரலாறு' கோவை நகரத்தார் சங்கக் கட்டிடத் திறப்பு விழாச் சிறப்பு மலர், திருக்கொள்ளம்புதூர் குடநீராட்டு விழாச் சிறப்பு மலர், பேரையூர் ஸ்ரீ பொய்யாத வினாயக மூர்த்தி கோயில் குட நீராட்டு விழா மலர், மற்றும் இராயவரம் மு. அ. மு. பழநியப்ப செட்டியார் அறுபதாம் ஆண்டு மணி விழாவில் வெளியிட்ட 'பாடுவார் முத்தப்ப செட்டியார் வரலாறு' ஆகியன மலர் வெளியீட்டுப் பணிகளில் என் இளவல் நடராசன்அவர்களும் பங்கு பெற்றுச் சிறப்பாக உதவியது எண்ணுந்தோறும் இன்பம் பயப்பதாகும்.

இப்பொழுதும் இலுப்பக்குடி கும்பாபிடேக மலர் வெளியீட்டுவேலைகளிலும்தொடர்ந்து உதவியாக இருந்து வருகிறார்கள்.

அடுத்து, வைதீக முறையிலும் புதிய சிந்தனையிலும் பலவிதச் சிறப்புக்களைப் பெற்ற குழந்தை ராமு அவர்கள் (P.V.R.M. KL)கூடிய விரைவில் அவர்களுடைய தந்தையைப்போன்று தமிழ்ப் புலவராக மலர்வார்கள். நம் கோனாபட்டுப் பங்காளி இலக்கியச் செம்மல் விசு. திருநாவுக்கரசு அவர்கள் எழுதிய என் வாழ்வில் எனும் புத்தகம் அனைவரும் படிக்க வேண்டிய ஒன்றாகும்.

கோனாபட்டு இளங்கோவன் பத்திரிக்கைத் துறையில் ஈடுபட்டது குறிப்பிடத் தக்கது.

### பதிப்பாளர்கள்

இலுப்பக்குடி கும்பாபிடேகத்தில் பங்கேற்றுச் சிறப்பாகப் பணியாற்றிய நேரத்தில் எனக்குப் பல அரிய நண்பர்களின் அறிமுகம் கிடைத்தது. இக்கட்டுரையில் கூடுமான வரையில் நகரத்தார் அன்பர்களில் நான் சந்தித்த இலக்கியவாதிகள் என்ற அளவிலே நான் சொல்லிக் கொண்டு செல்வதால் இங்கு பலரை நான் குறிப்பிட இயலவில்லை.

எண்ணிறந்த நூல்களைப் பதிப்பித்து வெளியிட்ட தேவகோட்டை திரு. கி. கரு. ராம.சாமிநாதன்செட்டியார் அவர்களையும் வைரம் பதிப்பகத்தின் மூலம் நூற்றுக்கணக்கான நூல்களை உருவாக்கி உலவ விட்டிருக்கும் தேவகோட்டை திரு. வடிவேலன் அண்ணன் அவர்களையும் இங்கு குறிப்பிடாமல் இருக்க முடியாது.

அரிமா சங்க கவர்னரும் என் மைத்துனரும் ஆன இராயவரம் திரு; மு. அ. மு. சுப. காசி செட்டியார் அவர்களும் அவர்கள் தம்பி திரு. வயிரவன் செட்டியார் அவர்களும் ஆங்கில இலக்கியத்தில் ஆழ்ந்த பற்று உடையவர்கள் — அவர்களுடன் பேசும் போது நமக்கும் அம்மொழி மீது, அது அந்நிய மொழியாயினும் மோகம் பிறக்கும்.

### எம். வி.

அடுத்து ஆங்கில இலக்கியத்தில் சிறப்புமிக்க திரு. M. V. அருணாசலம் அவர்களையும் இளைய தம்பி M. A. M. இராமசாமி அவர்களையும் என்னால் மறக்கவே முடியாது. திரு. M. V. அருணாசலம் அவர்களை கோவை வர்த்தகக் கழகத்தில் பல தடவை சந்தித்துள்ளேன்.

### டாக்டர் எம். ஏ. எம்.

திரு. M. A. M. இராமசாமி அவர்களை நகரத்தார் ஐக்கிய சங்கத் தலைவராக, அண்ணாமலைப் பல்கலைக் கழகத் துணை வேந்தராக, சிறந்த விளையாட்டு வீரராக, புரவி வூட்டப் பிரியராகச் சந்தித்து இருக்கிறேன். எனினும் அரிஅரன் புதல்வன் ஐயப்பன் பக்தனாக அவர்கள் நோன்பு மேற்கொண்டு இருக்கும் காலத்தில் அவர்களை நேரில் சந்தித்த போது எனக்கு ஏற்பட்ட பரவசம் அளவிடற்கரியது. அவர்களின் ஆங்கில உரை கேளாரும் வேட்ப மொழிவதாம் சொல் என்ற வள்ளுவரின் வாய்மொழிக்கிணங்க அனைவரையும் ஈர்க்கக் கூடியதாகும்.

### ஏ. எல். சிங்காரம் செட்டியார்

கோவையில் வாழ்ந்து வந்த சைவச் செம்மல் தெற்கு வீட்டு ந. அவர்களுடன் பழகும் வாய்ப்பும் எனக்குக் கிடைத்தது. சன்மார்க்க சீலர், அருட்பா அமுதம், திரு.A. L சிங்காரம் செட்டியார் அவர்களும் நானும் தந்தையும் மகனுமாகப் பழகி வந்தோம். நான் சன்மார்க்க சங்கத்திற்குள் நுழையும் போது நச்சாந்துபட்டி திரு. குமரப்ப செட்டியாரவர்களையும் சிங்காரம் செட்டியார் அவர்களையும் நினைவு கூராமல் இருக்க இயலாது.

### கலைமாமணி, டாக்டர் ஆறு அழகப்பன்

திடீரென நகரத்தார் வரலாறு ஆராய்ச்சிக் கூட்டம் ஒன்று நடத்தினோம். அதனைச் சிறப்பித்த நாடகச்சிற்பி ஆறு அழகப்பனைக் குறிப்பிடாமல் இருக்கமுடியாது.

கொஞ்சு மொழி பேசும் பஞ்சு அருணாசலம், சிறியவரையும் பெரியவராக மதிக்கும் உயர்பண்பு நிறைந்த S. P. முத்துராமன் ஆகியோர் கோவை நகரத்தார் சங்கத்திற்கு நிதி வசூலுக்கு நாங்கள் முயன்ற போது திரையுலக நட்சத்திரங்களையும் திரளாக அழைத்து வந்து நிதியைத் திரட்டித்தந்ததும் மறக்கற்பாலதோ!

இனிப்பான தமிழில் என்றும் உரையாடும் என்னருமை வலம்புரி சோமனாதன் அவர்கள் 'ரசித்ததை வர்ணனை செய்வதில் பெயர் பெற்றவன் நீ' என்று கவிஞர் கண்ணதாசன் சொன்னதற்கு மேல் நான் எதுவும் சொல்ல இடமுண்டோ ?கோவை நகரத்தார் சங்கத்தில் தோளோடு தோள் கொடுத்துப் பாடுபட்ட மயில்மனை திரு. இராம அவர்களின் புதல்வனன்றோ நீர் ?

முத்தையா வேளின் முத்தான திட்டங்களைக் கச்சிதமாய்ச் செய்து முடிக்கும் A. R. இராமசாமி அவர்களையும் அறியாதார் யார் ?

கட்டிடங்கள் கட்டத் திட்டங்கள் உருவாகும் போது என்றும் நினைவில் வருவது செட்டி நாட்டுச் சிமெண்டே ! பாங்காக நினைத்துருகும் பங்காளி சபாரெத்தினத்தைச் சொல்லாமல் இருக்கலாமோ ! அவர்கள் தமையன் L. ஷண்முக அண்ணன் அவர்களும் நாங்களும் கோவையிலே நற்செயல்களுக்கு உடன் பிறப்பு.

அன்புடன் அனைவராலும் 'ச' என்று அழைக்கப்படும் திரு. K. R. சடையப்ப செட்டியார் அவர்களும் மற்றும் பலரும் அரிஅரன் புதல்வன் அய்யப்பன் பக்தர்கள். நாங்கள் ஒரு அய்யப்ப குடும்பம். 16 ஆண்டுகட்கு முன்பு என்னை முதன் முதலில் அய்யப்பன் ஆலயத்திற்கு, சபரிமலைக்குக் கூட்டிச் சென்ற பெருமை திரு. 'ச' அவர்களையே சேரும். அவர்கள் புண்ணியத்தால் நானும் தொடர்ந்து 16 ஆண்டுகளாய் போய் வந்து கொண்டிருக்கிறேன்.

'குட்டி' என்னும் தலைப்பில் கவிதை நூல் வெளியிட்டுச் செட்டி நாட்டைச் சிறப்பித்த கவிஞர் திரு. மா. கண்ணப்பன் அவர்கள், இலுப்பக்குடிச் சிற்பங்கள் போல் எழிலார்ந்த கவிதைகளை பொங்கும் உணர்ச்சியுடன் படைத்திட்டுப் பூரிக்கும் கவிஞர் அர. சிங்கார வடிவேலன் அவர்கள், எண்ணற்ற நூல்களைக் கவியரசு கண்ணதாசன் சொல்லச் சொல்ல எழுதிக்குவித்த இராம கண்ணப்பன் அவர்கள் ஆகியோரை இங்கு குறிப்பிடுவதில் பெருமகிழ்ச்சியடைகிறேன்.

## ஏனையோர்

கவிஞர் செல்ல கணபதி குழந்தைக் கவிஞர் அழ வள்ளியப்பா, வானதி பதிப்பகம் திருநாவுக்கரசு, பாரதி பதிப்பகம் பழ சிதம்பரம், பாரி நிலையம் செல்லப்பன், அன்புச் சகோரதர்களான பழனியப்பா பிரதர்ஸ், கருமமே. கண்ணாக இருக்கும் குமுதம் எஸ். ஏ. பி. அண்ணாமலை அவர்கள், பஞ்சு அருணாசலம், டாக்டர் தமிழண்ணல் சொ. சொ.மீ. சுந்தரம், புலவர்கள் சிவப்பிரகாசம், மீனவன், மணிவாசகர் பதிப்பகம் மெய்யப்பன் ஆகிய எத்தனையோ இலக்கியப் பணிபுரியும் நகரத்தார்களுடன் பழகும் வாய்ப்பு எனக்கு ஏற்பட்டிருக்கிறது.

அனைவருக்கும் தங்களால் இயன்ற உதவிகளைச் செய்துவரும் ராயவரம் மு. அ. மு. குடும்பத்தாரையும் குறிப்பிடுவது என் கடமையாகும்.

தான்தோன்றி ஈசுவரர் உடனாய சௌந்தர நாயகி அம்பாள், வயிரவ சுவாமி அருளால் எத்தனையோ சிறப்புக்களையுடைய நம் இலுப்பக்குடி கோயில் பங்காளிகள் அனைவரையும் அறிந்து அவர்களுடன் பழகி மகிழ்ந்து இணைந்து வேலை செய்யும் பேறு பெற்றேன்.

டெல்லியில் 25 ஆண்டுகளாகப் பணியாற்றி வரும் கொத்தமங்கலம் திரு. M.S.P. ஷண்முகம் அவர்கள் மற்றும் தேவகோட்டை பேராசிரியர் திரு. கணகிற்சபேசன், விரையாச்சிலை சைவப் பேரறிஞர் திரு. முரு.பழ, இரத்தினம் செட்டியார் அவர்கள் ஆகியோரைப் பற்றிப் பிறிதோர் சந்தர்ப்பத்தில் விரிவாக எழுத முடிவு செய்திருக்கிறோம்.

அனைவர்க்கும் எல்லாம் வல்லஇறைவன் திருவருள் பாலிக்க வேண்டுகிறேன். ❑

# கும்பாபிஷேகக் கிரியாவாரி விவரம்

1. முகூர்த்த நிர்ணயம்
2. ஸ்தம்ப ஸ்தாபனம்
3. அனுக்ஞை
4. தன பூஜை
5. ஆசாரிய வரணம்
6. பிரஸன்ன கணபதி பூஜை
7. கிராம சாந்தி
8. பிரவேச பலி
9. ரக்ஷோக்ன் ஹோமம்
10. ஆசாரிய தசவித ஸ்நானம்
11. வாஸ்து சாந்தி
12. கிரஹ மகம்
13. திசா ஹோமம்
14. கோ பூஜை
15. விப்ர போஜனம்
16. மிருத் சங்கிரஹணம்
17. ரத்ன நியாசம்
18. நயனோன் மீலனம்
19. தான்யாதி வாசனம்
20. ஜலாதி வாசம்
21. சாந்தி ஹோமம்
22. மூர்த்தி ஹோமம்
23 சம்மிதா ஹோமம்
24. அங்குரார்ப்பணம்
25. ரக்ஷா பந்தனம்
26. சயனதி வாசம்
27. யாகசாலை தான்ய ஸ்தாபனம்-சூர்ய காந்தாக்நி சங்கிரஹணம்
28. ருத்விக் சாதஹாதி வரணம்
29. பிரசன்னுபிஷேகம்
30. கும்பஸ்தாபனம்
31. கலாகர்ஷணம்
32. மூர்த்தி ஹோமம்
33. யாத்ரா ஹோமம்
34. யாத்ரா தானம்
35. கடோத் வாஸனம்
36. யாகசாலாப் பிரவேசம்
37. யாக பூஜை--திரவ்யாகுதி
38. பூர்ணுகுதி சாமான்கள்
39. ஜம் ரத்ன நியாசம், யந்திர ஸ்தாபனம்
40. தேவதா ஸ்தாபனம்
41. அஷ்டபந்தனம்--சுவர்ண பந்தனம்
42. கிருத சிரோர்ப்பணம்
43. தைலாபிஷேகம்
44. பிம்ப சுத்தி
45. பிம்ப ரக்ஷாபந்தனம்
46. தீபஸ்தாபனம் & லக்ஷ்மி பூஜை
47. லக்ஷ்மி பூஜை
48. கந்தலேபனம்
49. மஸ்தக ஜபம்
50. நியாஸார்ச்சனம்
51. சாந்தி கும்பம்
52. ஸபரிசாகுதி
53. மஹா பூர்ணுகுதி
54. யாத்ரா தானம்
55. கடோத் வாஸனம்
56. மூலாலயப் பிரவேசம்
57. ஸ்தூபி கும்பாபிஷேகம்
58. சுவாமி கும்பாபிஷேகம்
59. பரிவார கும்பாபிஷேகம்
60. யஜமான உற்சவம்
61. சண்ட ஹோமம்
62. மகாபிஷேகம்
63. திருக்கல்யாணம்
64. திருவீதி உலா
65. அவபிருத ஸ்நானம்
66. ஆசாரிய உற்சவம்
67. மண்டல பூஜாரம்பம்
68. மண்டலாபிஷேகப் பூர்த்தி
69. சண்டிகேச உற்சவம்
70. யஜமானஸ்ய பல சமர்ப்பணம்



# தொழில் துறையில் பங்கு பெறுவோம்!

நா கருப்பஞ்செட்டியார்,

நிர்வாகக்துறை இயக்குநர், பழுப்பு நிலக்கரி நிறுவனம், நெய்வேலி.

இலுப்பைக்குடி நகரத்தார் வெளியிட இருக்கும் விழாமலரின் குழுத்தலைவர் திரு. எல். சோமு அவர்கள், 'தொழில் துறை வளர்ச்யில் நகரத்தார் பங்கு' என்ற தலைப்பில் ஒரு கட்டுரை தருமாறு கேட்டுக் கொண்டார்கள். அந்த வேண்டுகோளை ஏற்றுக் கொண்டு, எனது எண்ணங்களில் சிலவற்றை உங்களுடன் பகிர்ந்து கொள்வதில் மகிழ்ச்சி அடைகிறேன்.

## தொழில் துறையில் கூட்டு முயற்சியின்மை

வணிகத்துறையில் நமது சமூகத்தினர் கடந்த சில நூற்றாண்டுகளாக உள்நாட்டிலும், வெளிநாடுகளிலும் சிறந்து விளங்கிவந்தனர். கடந்த முப்பது அல்லது நாற்பது ஆண்டுகளாகத்தான் கல்வியில் நாட்டம் செலுத்திப் பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் பயின்று பட்டம் பெற்று வருகின்றனர். அரசியல் மாற்றம் காரணமாக 1940 ஐ ஒட்டிய ஆண்டுகளில், நம் மக்கள் பெரும் எண்ணிக்கையில் பர்மாவிலிருந்து தாயகம் திரும்பினர். சாபமே வரமாவதைப் போல கல்வியில் அவர்களில் சிலர் கருத்தைச் செலுத்துவராயினர். மற்றவர்களில் ஒரு சிலர் வணிகத்திலும், சிறுபான்மையோர் தொழில் துறையிலும் ஈடுபட்டனர். பெரும் பான்மையோர் பழம் பெருமையைத் தொடர்ந்து நினைத்துக் கொண்டு எந்த முயற்சியிலும் ஈடுபடாமல் இருந்தனர். இந்த நிலை ஏன் என்றுசிந்தித்துப் பார்க்கிற போது இரண்டு காரணங்கள் எனக்குத் தெரிய வந்தன. ஒன்று பணவசதி குறைந்தமை. மற்றொன்று நம் சமூக மக்களிடம் ஒன்றுபட்ட கூட்டு முயற்சி இல்லாமை என்பதாகும்.

## பொருளாதாரத்தில் பின்னடைவு

நமது சமூகத்திற்குப் பொருளாதாரத் துறையில் ஏற்பட்ட பல்வேறு சோதனைகளைக் கண்ட பிறகும் நமது சமூகம் மற்றைய சமூகங்களைப் போலத் தன்னையும், இன்றைய சமுதாய நடைமுறைகளுக்கு ஏற்ப மாற்றிக் கொள்ளவில்லை என்று நான் கருதுகிறேன். ஆனால் நாம் நம் பழம் பெரும் பண்பாடுகளை மாற்றிக்கொள்ள வேண்டுமென்று சொல்லவில்லை. காரணம், அவை பொன்னானவை. நாம் எளிய வாழ்க்கை வாழ்ந்து, தினப்படிசெலவுகளைக் குறைத்துக்கொண்டு, பணத்தைச் சிறுகச் சிறுகச் சேமித்துச் சேர்த்து அதில் பெரும் பகுதியைத் திருமணம் போன்ற குடும்ப நிகழ்ச்சிகளிலும், சமூகக் கடமைகளிலும், ஆடம்பரமாகஇன்றும் செலவழிக்கின்றோம். நம்மில் சிலர் வசதிபடைத்தவர்களாக இருப்பது உண்மைதான். ஏனையோரும் அதற்காக சமூக காரியங்களில் பெருந் திட்டங்களைப் போட்டு நண்பர்களும், உறவினர்களும் அவற்றைப் பார்த்து நம்மையும் பெரிதாக நினைக்க வேண்டும் என்ற நினைப்பில் தம்முடைய பொருளாதார நிலைக்கு மேல் செலவு செய்கிறார்கள்,

அப்படிச் செய்யவில்லையென்றால் பிள்ளைகள், பேரப்பிள்ளைகள் ஆகியோரின் வளமான வருங்காலம் பாதிக்கப்படுமோ என்றும் அச்சப்படுகிறார்கள். அப்படிப் பட்ட பெருஞ் செலவுகள் இன்றைய நிலையில் தேவையா என்று சற்று சிந்தித்துப் பாருங்கள்? நம் சமூகத்தில் பெரும்பான்மையானவர்கள் வறுமைக் கோட்டுக்குக் கீழே வாழ்கிறார்கள். அவர்களது பிள்ளைகளின் நிலைமை என்ன ஆவது? அவர்களுடைய அச்சத்தைப் போக்க நாம் முயல வேண்டாமா? இது நம் சிந்தனைக்குரியது.

## படித்தவர்களின் வருவாயும் சமூகச் செயல்களும்

பல்கலைக் கழகத்தில் படித்து முடித்த ஒருவர் நல்ல வேலை வாய்ப்பை எண்ணிக் கொண்டு வெளியே வரலாம். ஆனால் வேலைபார்க்கும் அவரால் நமது சமூகம் எதிர்பார்க்கும் அளவுக்குச் சமூகச் செயல்களில் செலவு செய்ய முடியாமல் திண்டாடுவதைப் பார்க்கிறோம். இந்த சூழ்நிலையில் திருமணம் போன்றவற்றின் செலவுகள் ஒரு குறித்த அளவுக்குள் கொண்டுவரப்படுமானால், ஒவ்வொருவரும், பெருஞ்செலவுகள் என்னும் சுமையிலிருந்து விடுபட்டு, தொழில் துறையில் முதலீடு செய்து முன்னேறலாம். முன்னோர்களைப் பின்பற்றிதானும் தொழிலதிபராகலாம். இருந்தும்கூட அவருக்கு சமூகக் கடமைகளைக் குறைத்துக் கொண்டு தைரியமாகச் செயல்பட முடிவதில்லை. காரணம், நம் சமூக மக்கள் முன்பு தான் விரும்பிய சோதனையைச் செய்து பார்க்கப் போதிய தைரியம் வருவதில்லை.

## தொழிலில் முதலீடும் இடர்ப்பாடுகளும்

இந்த சூழ்நிலையிலும் சிலர், ஏதோ சில காரணங்களால் தூண்டப்பட்டு, நல்ல நண்பர்களுடன் கூடி பாடுபட்டுத் தேடிய பணத்தைத் தொழிலில் முதலீடுசெய்கிறார்கள். அப்படிப்பட்ட முயற்சி உள்ளவர்களை வளர முடியாமல் செய்பவரும் நமது சமூகத்திருக்கிறார்கள் என்பது என் கவனத்துக்குச் சில நேரங்களில் வந்ததுண்டு. இப்படிப் பட்ட சூழ்நிலை இதற்கு முன் நம்முன்னோர்களிடம் இருந்தது இல்லை.

## நேர்மையும் நாணயமும் நம் பெருமை

நமது சமூகம் நேர்மைக்குச் சான்றாக விளங்கிய ஒன்றாகும். நேர்மையாக நடந்து கொண்டால்தான் செல்வத்தின் நாயகி இலக்குமி என்றும் நம்முடன் இருப்பாள் என்று எண்ணி வாழ்ந்தவர்கள் நம் முன்னோர். சிலர் சமூகத்தின் ஒட்டுமொத்தமான நன்மையை எண்ணாமல் சுயநலத்தையே கருதிச் செய்கிறார்களே என்று எண்ணும்போது அவர்களை நான் தவறு செய்பவர்களாக எண்ணுவதுமில்லை. அதற்குக் காரணம் சமூகக் கடமைகளைச் செய்ய வேண்டும் என்ற நிர்ப்பந்தம் அவர்களை அவ்வாறு செயல்படத் தூண்டுகிறது.

உலகில் தொழில்துறையில் சிறப்பாக வளர்ந்து செழிப்பை எட்டியுள்ள நாடுகளில் நமது நாடும் ஒன்றாகும். இதனை நாம் சாதிக்க முடிந்ததற்குக் காரணம் உழவுத் தொழிலிலும் பிற தொழில்களிலும் நம்முடைய புராதனமான வழிகளை விட்டு விட்டு வளர்ந்தநாடுகளின் புதிய நடைமுறைகளைப் பின்பற்றியதே ஆகும்.

## உலகத்தோடு ஒட்டி வாழ்வோம்

எவ்வது உறைவது உலகம்-அவ்வதுறைவது அறிவுடைமை அல்லவா? உலகத்தோடு ஒட்ட ஒழுகல் நமது கடமையல்லவா? நாட்டு முன்னேற்றத்திற்கான அடிப்படைக் காரணத்தை நம் சமூகம் உணர்ந்து தன்னுடைய பழைய நடைமுறைகளைத் தாண்டி புதிய சிந்தனையில் தெளிவாகச் செல்லுவோமேயானால் தொழில் துறையில் நாம் உயர்ந்த நிலையை அடையும் நாள் வெகு தொலைவில் இல்லை என்பதை என்னால் தெளிவாகக் கூற முடியும். நமது நாட்டின் தொழில் வளர்ச்சியில் பங்குகொள்ள விரும்பினால், தனிப்பட்ட சுயலாபங்களை மறந்து தியாக உணர்வோடு தம் வாழ்க்கை முறைகளையும் பழக்க வழக்கங்களையும் மாற்றிச்

கொண்டு,இன்று தொழில் துறையில் முன்ன ணியில் இருக்கும் சமூகத்தைப் போல நாமும் அவர்களைப் பின்பற்றி முயற்சி செய்ய வேண்டும். இந்த நிலையிலும் கூட்டுமுயற்சி, ஒருவரையொருவர் பரஸ்பரம் அன்புடன் உணர்ந்து நம்பிச் செயல்படுதல், இவைதான் நமக்கு நல்ல வளர்ச்சியை உண்டாக்கும். இதனை வளர்த்துக் கொள்ள நான் ஒரு உதாரணத்தைச் சொல்ல விரும்புகிறேன்.

### பணி செய்பவர்களுக்கு இருக்க வேண்டிய உணர்வு

தமிழ்நாட்டில் முன்னணியில் உள்ள தொழிற்சாலை ஒன்றிற்குச்சென்றிருந்தேன். தமிழகத்தைச் சார்ந்த ஒரு நகரில் ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னால் ஒரு சிறிய அள வில் ஒரு குடும்பத்தாரால் தொடங்கப் பெற்ற அந்தத் தொழில் நிறுவனம் இன்று 'ஆல்போல் தழைத்துஅருகுபோல் வேரோடி' தமிழ்நாட்டில் மட்டுமின்றி மற்ற மாநிலங் களிலும் வளர்ந்து அகில உலகம் போற்றும் அளவில் உள்ளது. எனது சிந்தனையில் இது ஒரு கூட்டு முயற்சியின் சிறந்த வெற்றி என்றே தோன்றுகிறது. அந்த நிறுவனத் தில் பணியாற்றும் ஒரு அதிகாரி, அந்தத் தொழில் அதிபரின் சமூகத்தைச் சேர்ந்தவர். அவர்

**''நான் இந்த நிறுவனத்தில் என்னுடைய 16 வயதில் சேர்ந்து 36 ஆண்டுகளாகப் பணியாற்றி வருகின்றேன். இந்த நிறு வனத்தில் பணியாற்றுவதில் அளவற்ற மகிழ்ச்சி அடைகிறேன். நான் என்னை வளர்த்த இந்த நிறுவனத்திற்கு என்னை முழுவதுமாக அர்ப்பணித்து விட்டேன். என்னைஇந்த நிலைக்கு ஆளாக்கியஇந்தக் குடும்பத்தாருக்குநான்வாழ்நாள்பரியந்தம் கடமைப்பட்டவன்''** என்று உள்ளம் பூரிக்க உணர்ச்சிப் பெருக்கோடு கூறினார். அந்த நிறுவனத்தில் பணி செய்யும் அந்த சமூகத் தினர் அத்தனை பேரும் இதே உணர்வைக் கொண்டவர்களாக இருக்கின்றனர் என்று சொன்னால் மிகையாகாது.

அதே நேரத்தில் நம் சமூகத்தைச்சார்ந்த ஒரு சில தொழிலதிபர்களைக் கண்டேன். அவர்கள் கூறிய செய்திகள் முன்னதற்கு மாறானதாக இருந்தது. அதில் ஆச்சரியம் இல்லை. காரணம் என்னுடைய கருத்தும் அதுதான். எனவே இரு சாராரும் இந்த நிலைக்கு என்ன காரணம் என்பதை ஒன்று சேர்ந்து கூட்டாக ஆராய்ந்து அதற்கான பரிகாரங்களைத் தேடிக்கொண்டால் நம் முடைய சமூகத்தினரும் மற்றவர்களைப் போல் தொழில் துறையிலும் இன்னும் சிறந்த வளர்ச்சி பெற நல்ல வாய்ப்பு கிடைக்கும்.

### நமக்குள் உதவிக்கொள்ள வேண்டும்

நம் முன்னோர்கள் ஒருவருக்கு ஒருவர் தானாகவே முன் வந்துஉதவி செய்துவாழ்ந்த வர்கள். இன்று இதுபோன்ற பண்புகள் சிறுகச்சிறுக மறைந்து வருவதாக உணரு கிறேன். நமது சிந்தனையில் தெளிவு இன்னும் பிறக்கவில்லையென்றால் நமது சமூகத்தின் பிற்காலம் என்ன என்பதைச் சிந் திக்க வேண்டி இருக்கின்றது. இதில் தீவிர கவனம் செலுத்திப் புதிய சிந்தனையை ஏற்றுக் கொண்டு செயல்படுவதே இன்றைய தேவை ஆகும்.

### அரசு வழங்கும் தொழில் வளர்ச்சி வாய்ப்புக்கள்

நம்முடைய மத்திய அரசும், மாநில அரசும் தொழில்துறை வளர்ச்சிக்குப் பெரி தும் ஆக்கமும் ஊக்கமும் அளிக்கின்றன. நமது இளம் சந்ததியினர் இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக்கொண்டு, அரசின் உதவி களைப் பெற்றுச் சிறந்த தொழிலதிபர் ஆகலாம். முதியோர்களும் பிறரும் அதற் கான நல்ல சூழ்நிலையைத் தோற்றுவிக்க வேண்டும். சிலர் பண உதவி செய்யலாம். சிலர் பங்குதாரர் ஆகலாம். எப்பாடுபட்டா கிலும் தொழிலைத் தொடங்குவோருக்கு அனைத்து உதவிகளையும் நாம் அளிக்க வேண்டும்.

### முடிவுரை

யாராக இருந்தாலும் சமூகக் கூட்டு முயற்சி ஒன்றுதான் நல்ல பலன் அளிக்கும். நமது இனத்தின் பொருளாதார வளர்ச்சி யைப் பெருக்கும். எனவே தெளிவான சிந் தனையோடு வருங்காலத்தை ஆக்கப்பூர்வ மான வழிகளில் செலவிட்டால் நம்மவர்கள் வாழ்வு வளமாகும் என்பது என்னுடைய பணிவான கருத்து. நம் முன்னோர்கள் போல் நாமும் வளமாக வாழ்ந்து நம்மைச் சார்ந்தவரையும் வாழவைக்கலாம் என்பது என்னுடைய நம்பிக்கை!

## ஆசிரியர் பற்றிய குறிப்பு



நா. கருப்பஞ் செட்டியார் அவர்கள்

இவர் 1957-இல் நெய்வேலி பழுப்பு நிலக்கரி நிறுவனத்தில் உதவி நிர்வாகப் பொறியாளராக ஹெவி லிப்ட்ஸ் டிவிசனில் சேர்ந்தார். விடாமுயற்சி, கடினமான உழைப்பு, தொழில் திறமை, நேர்மை, இனிய இயல்புகள், அவ்வப்போது ஒப்புக்கொண்ட பொறுப்புக்களை நிறைவேற்றுவதில் கருமமே கண்ணாக இருந்தது ஆகிய ஆற்றல்களால் படிப்படியாக முன்னேறிப் பல பதவிகளை வகித்து நிர்வாக இயக்குநர் என்ற பெரும் பதவிக்கு உயர்ந்துள்ளார்.

நெய்வேலி நிறுவனம் அடைந்துள்ள இன்றைய பொற்காலத்தின் சிற்பிகளுள் இவரும் ஒருவர்.

இந்த நிறுவனம் அடைந்திருக்கும் மாபெரும் வளர்ச்சிக்கும் இமயமலை அளவினதாகிய அதனுடைய சாதனைகளுக்கும் திரு. கருப்பஞ் செட்டியார் அவர்களுடைய பங்கு குறிப்பிடத்தக்கது.

இவர் கீழப்பூங்குடி ஊரினர். இலுப்பைக்குடிக் கோயில் புள்ளி. 20-4-1927இல் பிறந்தவர்.

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் பி. ஈ. (மெக்கானிகல் எஞ்ஜினீயரிங்) படித்து 1949-இல் முதல் வகுப்பில் தேர்ச்சியடைந்து பின்னர் இண்டஸ்ட்ரியல் எஞ்ஜினீயரிங்கில் பட்டமேற்படிப்புச் சான்றிதழும் பெற்றார்.

1949 முதல் 1957 வரை தமிழக அரசின் பொதுப் பணித் துறையில் பணி புரிந்தார்.

நெய்வேலி பழுப்பு நிலக்கரி நிறுவனப் பணிகளுக்காக இருமுறை மேற்கு ஜெர்மனிக்குச் சென்று பல மாதங்கள் தங்கி, தொழில் நுட்ப உயர் பயிற்சி பெற்றுள்ளார். ஏராளமான கருத்தரங்குகளில் ஆய்வுக் கட்டுரைகளை வழங்கிப் பாராட்டப் பெற்றிருக்கிறார்.

## நம் புண்ணியத்துள் ஒரு பாவமா?

(அறிஞர் வ. சுப. மாணிக்கம்)

தெய்வப் பணியிலும் கொடையிலும் கலையிலும் வணிகத்திலும் உழைப்பிலும் வரலாற்றுப் புகழ் கொண்ட நம் நகரத்தார் சமூகத்திற்கு ஒன்றில் மட்டும் பெருமைக் குறைவும் பழியும் ஏற்படவிடலாமா? இப்பெருஞ்சமூகத்தில் ஏழைப் பெண்கள் ஏன் பிறந்தோம் என்று உள்ளம்நொந்து வெந்து பொசியும் அளவுக்கும் ஏன் பெண் பெற்றோம் என்று ஏழைப் பெற்றோர் கண்கசியும் அளவுக்கு பாவமான ஒரு போக்கு போய்க் கொண்டிருக்கின்றது. நம் சமூகப் பெருமைக் குறைவு தரும் ஒரே பிரச்சினை இது.

காரணங்களும் சீர்திருத்தங்களும் சொல்லிக்கொண்டிருப்பது திருமணப் பசியைத் தீர்க்காது 'மிக நலம் பெற்றுள் தமியள் மூத்தற்று' என்று திருக்குறள் பழிப்பது போல, நம் இளங்கன்னியர்களைக் கிழவியாக மூப்படைய விடுவது நாம் ஈட்டிய அவ்வளவு புண்ணியத்தையும் அழிக்கும் பெரும்பாவமாகும்.

இன்பம் என்பது எவ்வுயிர்க்கும் பிறப்புணர்ச்சி ஏனையுயிர்கள் திருமணம் தான் சடங்கு என்பதில்லாமல் மெய்யின்பம் இயற்கைச் சூழலில் பெறுகின்றன. உயர்திணையான மக்கட்கோ திருமணம் என்ற புறக்கட்டுப்பாடு உள்ளது. ஆதலின் நல்ல சமூகத்திற்கு நல்ல அடையாளம் திருமண எளிமை. எந்தச் சமூகம் தன்னிடத்துப் பிறந்த பெண்கட்குத் திருமணக் கடுமை கொடுமை செய்கின்றதோ அந்தச் சமூகம், பிற வகையில் எவ்வளவு பெருமை குவித்திருந்தாலும் தனக்குத் தானே பாழுங்குழி தோண்டிக் கொள்ளும் சமூகமாகும். சமூகம் என்ற பெயருக்குத் தகுதியற்றதுமாகும் கன்னியர் கண்ணீர் வடிப்பது சமுதாயத்தை மெல்லத் தேய்த்துவிடும்.

### தேங்கிக் கிடக்கும் கூட்டம்

பெண் திருமணம் பருவக்கட்டுப்பாடு உடையது. பருவங் கூடினால் பொலிவு குறையும். 'பருவத்தே பயிர் செய்' என்பது கன்னியர்க்குப் பொருந்தும், ஆதலின் நகரத்தார் சமூகம் திருமணமாகமாட்டாமல் தேங்கிக்கிடக்கும் வயதேறும் கன்னியர்களின் பிரச்சினையைக் குறிப்பிட்ட காலத்துள் தீர்க்க வேண்டும். நம் வசதி போல் ஆண்டு தோறும் கொஞ்சம் கொஞ்சமாக அசலிலிருந்து வரும் வட்டியைக் கணக்கிட்டு அந்த அளவு உதவி செய்வோம் என்பது கல்வி முதலியவற்றிற்குப் பொருந்துமேயன்றி, வயதேறித் தேங்கிக் கிடக்கும் ஏக்கம் பெண்ணினத்துக்கு ஒத்துவராது.

நகரத்தாராகிய நாம் ஏறக்குறைய 16,000. புள்ளிகள் நம் மக்கள் தொகை 50,000 இருக்கும், பெண்ணினம் 26,000 இருக்கும், இத்தொகையுள் பருவம் எய்திய கன்னியர்கள் 6,000 இருக்கலாம். இவருள் 24 வயதுக்கு மேலான இள மடவார்கள் 3,000 இருப்பர். இவருள்ளும் பிறர் உதவியின்றியே மணம் கொள்ளும் வசதியுடைய செல்வக் குடும்ப நங்கையர்கள் 1,500 இருப்பர். இவ்வாறு தோராயமாகக் கணக்கிட்டால் 24 வயதுக்கு மேற்பட்டுத் திருமணவுதவி வேண்டி நிற்கும் ஏழைக் குடும்ப இள நல்லார் 1,500 அளவுதான் தேறுவர்.

**இது நமக்கு ஒரு சுமையா ?**

இது நம் இனத்திற்கு ஒரு சுமையா! பெரும்பாரமா? நம் சமூகம் செய்த பல்வேறு பலதிசைக் கொடையை இன்றைய நாணயத்திற் கணக்கிட்டால், எத்தனையோ ஆயிரம் கோடியாகும், நெஞ்சுடையார் தம் நெஞ்சினைத் தொட்டுப்பார்த்தால், நம் சமூகப் பெருஞ் செல்வர்கள் உலகிற்கு செய்த பரந்த கொடை கடல் போன்றது. நம் சமூகத்தில் ஏழையெளியவர்கட்குச் செய்த உதவி தோட்டத்துப் பாத்தி போல் ஓரமானது 'ஏதிலார் ஆரத் தமர்பசிப்பர்' என்றார் வள்ளுவர். இதற்கு நம் சமூகம் எடுத்துக்காட்டாகலாமா? நம் பெருமக்கள் எங்கும் செய்யும் பரந்த கொடைக்கண்ணை இங்கும் சிறிது சில நாள் சாய்த்தாற் போதும், நாலைத்து குடமுழுக்கு கோபுரங்கட்குச் செய்யும் செலவைச் செய்தால் நம் கன்னியர்கள் தாயார்களாகிச் சமூகப் புள்ளிகளைப் பெருக்குவார்கள். திருமணப்பணிதான் இன்று நமக்குத் தெய்வப்பணி.

**இனிய எளிய முறைகள் :**

நம் ஏழைக் குமாரிகளின் பிரச்சினை நம்மால் தீர்க்க முடிந்த எளிய பிரச்சினை. இதற்கு அரசு உதவியோ பிறவுதவியோ கிடைக்காது. நாமே நமக்குள் முடிக்க வேண்டிய உட்சாதிப் பிரச்சினை.

1961-ஆம் ஆண்டும் அதற்கு முன்னும் பிறந்த 24 வயதுக்கு மேலாகித் திருமண வுதவி நாடும் குடும்பக் கன்னியர் சுமார் 1,500 பேர் உளர். இவர்கள் எல்லாம் இரண்டு மூன்று ஆண்டிற்குள் தாலி நலம் பெற உதவி செய்ய வேண்டும். ஆண்டுக்கு இத்துணைப் பேருக்கு இன்ன மாதத்தில் தான் உதவியளிப்பது என்ற பொது முறை வைக்காமல் வயதேறிய இவர்களைப் பொறுத்தவரை, பேசி முடிவு செய்து வருவார்க்கெல்லாம் உடனடி உதவி வரையாது வழங்க வேண்டும்.

இப்போது நம் சமூகச் சங்கங்களும் அறக்கட்டளை நிறுவனங்களும் ஆண்டுத் தோறும் குறிப்பிட்ட தொகைகள் திருமணவுதவி செய்து வருவது பாராட்டத்தகும். அசலை கொண்டு வட்டி வரவில் திட்டமிட்டுச் செய்யும் இவ்வுதவி இயல்பான நடைமுறைக்குப் பொருந்தும். வயதேறிப் பல்லாண்டு தேங்சி வாடும் கன்னிக்கூட்டத்திற்கு வேறு வழி காண வேண்டும். மேலும் மேலும் வயதேறி விடக் கூடாது என்பதுவே என் எச்சரிக்கை. இத்தேக்கக் கூட்டத்தை ஓரிரு ஆண்டுகளில் குறைக்கவும், முற்றுப்புள்ளி வைக்கவும் இதற் கெனத் தனித் தொகை சேர்த்து, சேர்ந்த தொகையை முழுவதும் திருமணக் கொடை செய் யவும் வேண்டும். இன்றைய விலைவாசி ஏற்றத்தில் ஒரு திருமணத்திற்கு ரூ. 5,000 அளவா வது வழங்க வேண்டும். காலம் பாராது திருமண மாதங்களில் எல்லாம் முன் கூட்டி உள்ளூர்க் காரியக்காரர் மூலம் உதவி அளிக்கலாம். எவ்வாறும் 24 வயது கடந்த நகரத்தார் கன்னியர் களின் திருமணத் தேக்கம் இனிவும் பாவத்தாக்கம் ஆகாமல் முழுமையாக ஒருசேரத் தீர்க்க வேண்டும். ஆண்டிற்கு ஏழை கன்னியர்க்கு நானூறு ஐந்நூறு திருமணங்களை உதவி செய்து நடத்தி வைத்தால் தான் தேக்கப் பிரச்சனை மூன்றாண்டுகளில் குறைந்து நிற்கும்.

திருமணமும் தெய்வப் பணியும் :

மலையரையன் பொற்பாவை வாணுதலாளி பெண்திருவை
உலகறியத் திவேட்டான் என்னுமது என்னேடி
உலகறியத் திவேளா தொழிந்தனனேல் உலகனைத்தும்
கலைநவின்ற பொருள்களெல்லாம் கலங்கிடுங்காண் சாழலோ (திருவாசகம்)

சுற்று நாள் மறைகள் ஆர்ப்பத்து ரியம் சங்கம் ஏங்கக்
கற்றநான் முகத்தோன் வெள்ளிச் சடங்கு நூல் கரைந்த வாற்றால்
முற்றமங் கலநாண் சாந்தி முழுதுல கீன்றாள் செங்கை
பற்றிண பற்றி லார்க்கே வீடருள் பரம யோகி (திருவிளையாடற்புராணம்)

இவ்வாறு சிவனுக்கும் பிராட்டிக்குமே உலகறிய திருமணம் இன்றியமையாதது என்பதனை மணிவாசகரும் பரஞ்சோதியாரும் பாடுகின்றனர். திருமணமின்றேல் உலகமே அழிந்துவிடும் என்று திருவாசகம் சுட்டிக் காட்டுமாயின். ஒரு சாதி நலிவதை கூறவேண்டுமா?

உமையொரு பாகனை வழிபடும் நம் சைவ சமயத்தில் திருமணம் தெய்வ மணம் என்பது வெளிப்படை ஆதலின் நம் ஏழைக்குமரியர்க்கு இன்னும வயது ஏறுமுன் இல்லறம் காணவும் கொழுநர் வலம் வரவும் உதவுங்கள். யார் யரோ எவ்வகையாலோ உதவி செய்யலாம். பெருஞ்செல்வர்கள் பெருந்தொழிலதிபர்கள் பெண் குழந்தையில்லாதோர், பிள்ளையில்லாதோர், வாழ்வுக் கடமைகளை முடித்தோர்கள், தேவைக்குமேல் வருவாய் உடையோர், நகரத்தார் வெளிநாட்டு மேதைகள் எல்லாரும்நம் கன்னியர்கள் வாழ வழி செய்வது மனிதக் கடமையாகும் சாதிப் பொருப்பாகும் நகரத்தார் சங்கங்கள், நகரத்தார் அறநிறுவனங்கள், அயல்நாட்டு நகரத்தார் கடைகள் முன் வரலாம் முன்னோர் தேடிவைத்துச் சிதறிக்கிடக்கும் நகரத்தார் பொதுச் சொத்துக்களை வழிப்படுத்தி நகரத்தார் ஏழைப் பெண்களுக்கு வாழ்வளிக்கலாம் கடன் பட்டேனும் நல்ல கடமைகளை செய்து முடிக்க வேண்டும் என்பது தமிழறம் 1,500 ஏழைக் கன்னியர்கள் கோயில் மாலைப் பெற்றுக் கொழுநரைக் கைப்பிடித்துக் குடியாவதற்கு நம் சமூகம் உதவி செய்தால் மிக ஏழையாகி விடுமா? உள்ளது குறைந்து விடுமா? குடிப்புள்ளி கூடித் தொகைப் புள்ளியும் கூடும்.

அன்றைக்கு வந்த எங்கள் அம்மா இலக்குமியே
என்றைக்கும் நீங்கா திரு

என்று பாடுவார் முத்தப்பர் திருமகளுக்கு இட்ட ஆணை பலிக்க வேண்டுமேல், கன்னியர்களைத் திருப்பூட்டி விட்டு இலக்குமிகளாக ஆக்குவது நம் கடமை இதனைச் செய்தால் நாம் செய்புண்ணியங்கள் பாவங் கலவாத தூய புண்ணியங்களாகும் நகரத்தார் குலத்துக்குப் பழி கலவாத வழிவழிப் பெருமையும் ஆகும்.



# "மெய்ஞ் ஞானம் பெறுவோர் மேவுமிடம் இலுப்பைக் குடியே"

மோ. அருளொளியார்

சீர்மேவு கொங்கணர்; சிறப்பமை முனிவர்;
பேர்மேவு தவஞ்சால் பெரியார்; இலுப்பைக்
குடிதனி லுறைந்து குவலயம் வியக்கும்
படிபுகழ் மருத்துவம்; பாங்கமை இரசவாதம்;
பற்பஞ் செந்தூரம்; பயன்தரு சுண்ணம்;
பொற்பமை முப்பூப் பொலிவுறுங் களங்கு;
பஞ்ச பூதப் பகுப்பினை ஆய்ந்து
மிஞ்சு சத்துரு மித்துரு முணர்ந்து
பாயிருள் நீக்கும் பண்பமை சுத்தியால்
ஆயிரம் மாற்று அரும்பொன் னியாற்றிட
தான்தோன்றி யீசரும் சவுந்தர நாயகியும்
வான்புகழ் முனியிடம் வந்துளம் புகுந்து
பொய்ப்பொருள் காட்டிட மேதினி யுவப்பப்
பூரண ஞானப் பொலிவுடன் திகழ்ந்தார்;
சீரிலுப்பைக் குடிச்சீர் செப்புதல் அரிதே.








உணவுச் சுவை போல வகை வகையாய் இதுவும் உண்டு







திருக்குட நன்னீராட்டு
காட்சிகள்















செட்டிநாட்டு முகப்பு அழகு
சித்திரச் சிறப்பு அழகு





கொடி வளரும் தில்லை நகர் நடுவில் திருக்கோயில் கொண்டிருக்கும் – சிவகாம சுந்தரி உடளுகிய நடராஜப் பெருமான் நர்த்தன காட்சிகளும் உண்டு











புதிய ஐந்துநிலை இராச கோபுரக் காட்சிகள்
சிற்பியின் சிந்தனை சித்திரமாய்ப் பேசும்

தெய்வ மணம் கமழும் இலுப்பக்குடி.









கொங்கனச் சித்தர் வரலாறும் உண்டு.















இருப்பக்குடியில் நுட்பமும் உண்டு





முன்னழகு பின்னழகு செட்டி நாட்டு வழவும் அழகு.













வேதம் ஓத வேதியர்கள் தான் சூழ நாதம் முழங்க
நற்றமிழும சார்ந்த யாகசாலே.





# விநாயகரின் ஆறுபடை வீடுகள்

முரு. பழ. இரத்தினஞ் செட்டியார்,

புலவர்மணி-சித்தாந்த வித்தகர்-விரையாச்சிலை

முருகப் பெருமானுக்கு ஆறுபடை வீடுகள் உண்டு. ஆனால் விநாயகப்பெருமானுக்கு ஆறுபடைவீடுகள் உண்டெனச் சொல்லுவது வழக்கமில்லை. இருப்பினும் தமிழ் நாட்டிலுள்ள ஆறு தலங்களில் விநாயகப் பெருமானின் மூர்த்தங்கள் மிகுந்த சாந்நியத்துடன் விளங்குவதால் அவற்றை அவர்க்குரிய ஆறுபடை வீடுகளாக அறிமுகப்படுத்த விரும்புகிறேன்.

கடவுள் எங்கும் நிறைந்தவர்; எனினும் சில இடங்களில் அவர் திருவருள் முனைத்து நிற்கிறது. அப்படி நிற்கின்ற இடங்களையே படை வீடுகளென்றும் சாந்நித்தியம் மிகுந்த இடங்களென்றும் கூறுகிறோம். இறைவன் திருவருள் இவ்வாறு சில இடங்களில் முனைத்திருப்பதற்குக் காரணம் அருளாளர்கள் அவ்விடங்களைச் சிறப்பித்துப் பாடியிருப்பதேயாகும்.

**முதலாவது படை வீடு**

விநாயகப் பெருமான் வினைதீர்ப்பதில் மிகவும் வல்லவர். ''விநாயகனே வெவ்வினையை வேரறுக்க வல்லான்'' எனப் பதினோராம் திருமுறை பேசுகிறது. தேவாரத்தில், ''ஆடிப்பாடி அண்ணாமலை கைதொழ, ஓடிப்போகும் உள்ள வினைகளே'' எனச் சொல்லப்பட்டிருக்கிறது. இதனால் திருவண்ணாமலை வினைதீர்க்கும் தலம் என்பது புலனாகிறது.

திருவண்ணாமலைக் கோயில் நுழைவாயிலில் ஒரு பிள்ளையார் இருக்கிறார். அவர்க்கு ''அல்லல் தீர்க்கும் பிள்ளையா''ரெனப் பெயரிடப்பட்டிருக்கிறது. பிள்ளையார் சிறியவராக இருந்தாலும் வல்லமை வாய்ந்த மூர்த்தமாக விளங்குகிறார். இப்பிள்ளையாரைப் பற்றிய பழைய பாடல் வருமாறு:

''அல்லல்போம் வல்வினைபோம் அன்னை
வயிற்றிற் பிறந்த
தொல்லைபோம் போகாத்துயரம் போம்—
நல்ல
குணமதிக மாம்அருணைக் கோபுரத்தில்
வீற்றிருக்கும்
கணபதியைக் கைதொழுதாக் கால்!''

இப்பிள்ளையார் நம் வினைகளைப் போக்குவதில் மிகவும் ஆற்றல் படைத்தவர். வினைகளைப் போக்குவதுதான் மிக அரிய செயலாகும். இச்செயலைத் திருவண்ணாமலையிலுள்ள இப்பிள்ளையார் செய்வதால் அவர்க்குரிய முதல் படை வீடாகத் திருவண்ணாமலை விளங்குகிறது.

**இரண்டாவது படை வீடு** திருமுதுகுன்றம் எனப்படும் விருத்தாசலம் ஆகும். விருத்தாசலக்கோவில் நுழைவாயிலில் பூமிக்கடியில் ஆழத்துப் பிள்ளையாரென ஒரு பிள்ளையார் விளங்குகிறார். அவர் பொருட்செல்வமும் கல்விச் செல்வமும் தருவதில் மிகவும் சிறந்தவர். அவர்க்குரிய பாடல் வருமாறு:

''திருவும் கல்வியும் சீரும் தழைக்கவும்
கருணை பூக்கவும் தீமையைக் காய்க்கவும்
பருவமாய் நமது உள்ளம் பழுக்கவும்
பெருகும் ஆழத்துப் பிள்ளையைப்
பேணுவாம்.'

**மூன்றாவது படை வீடு** திருக்கடவூராகும். அங்கே திருக்கோவிலில் உள்ள பிள்ளையாருக்குக் ''கள்ள விநாயக'' ரென்று பெயர். இப்பிள்ளையார் மரண பயம் நீக்கு

வதில் மிகவும் வல்லவர். திருக்கடவூர் மார்க் கண்டனுக்கு மரணமில்லாப் பெருவாழ்வை வழங்கிய தலமாகும். ஆதலால் இத்தலத்தி லுள்ள ''கள்ள விநாயகரை'' வணங்கினல் மரணபயம் அடியோடு நீங்கும். அவர்க்குரிய பாடல்:

''தண்டாயுதத்தையும் சூலா
யுதத்தையும் தாங்கியென்னைக்
கண்டாவிகொள்ள நமன் வரும்
வேளையில் காத்திடுவாய்
வண்டார வாரஞ்செய் மாமலர்
சோலை வளப்பமுடன்
விண்டாவிய கடவூர் வாழுங்
கள்ள விநாயகனே!''

**நான்காவது படை வீடு** திருஆலவாய் எனப்படும் மதுரையம்பதியாகும். அம்மன் சந்நிதிக்குள் நுழைவதற்கு முன் உள்ள மண்டபத்தில் விநாயகர் சந்நிதி இருக்கிறது. 'சித்திவிநாயகர்' என்று அந்தச் சந்நிதியில் எழுதியிருக்கும். மணிவாசகப் பெருமான் குதிரை வாங்கப் புறப்படும்பொழுது இந்தப் பிள்ளையாரைத்தான் வழிபட்டுச் சென்றுள் ளாரென்று ''திருவிளையாடல் புராணம்'' கூறுகிறது இவர் சித்தி விநாயகராக விருப் பதால் இவரை நினைந்து எந்தக் காரியத்தைத் தொடங்கினுலும் அது உடனே சித்தியாகும். காரியசித்தி செய்கின்ற விநாயகராக இருப் பதால்தான் இவருக்குச் சித்தி விநாயக ரென்று பெயர். பிள்ளைகளுக்குத் திருமண மாக வேண்டுமானுலும், பிள்ளைப் பேறு கிடைக்க வேண்டுமானுலும், செல்வம் கிடைக்க வேண்டுமானுலும், வேலை கிடைக்க வேண்டுமானுலும் இவரை வேண்டினுல் உடனே கிடைக்கும். இவர்க்குரிய பாடல் வருமாறு:

"உள்ளமெனுங் கூடத்தில் ஊக்கமெனுந்
தறிநிறுவி உறுதியாகத்
தள்ளரிய அன்பெனுந் தொடர்பூட்டி
இடைப்படுத்தித் தறுகட் பாசக்
கள்ளவினைப் பசுபோதக் கவளமிடக்
களித்துண்டு கருணையென்னும்
வெள்ளமதம் பொழிசித்தி வேழத்தை
நினைந்துவரு வினைகள் தீர்ப்பாம்!''

**ஐந்தாவது படை வீடு** பொது வீடா கும். எல்லா ஊர்களிலுமுள்ள பிள்ளையார் மூர்த்தங்களை இதன்கண் அடக்கலாம். எனினும் காசியிலுள்ள ''துண்டிராஜ கணபதி'' குறிப்பிடத்தக்க பெருமானுவார். இதனுல், காசி ஐந்தாவது படை வீடா கின்றது. இவரை வணங்கினுல் எல்லாத் தெய்வங்களையும் வணங்கிய பலன் கிடைக்கும். காசிக்குப் போக முடியாதவர் கள் பிள்ளையார்பட்டியிலுள்ள கற்பக விநாயகரை வணங்கினுல் இதே பலன் கிடைக்கும். கற்பக விநாயகர் கற்பக விருட்சத்திற்குத் திருவருள் வழங்கியவரா தலால் வழிபடுவோர் அனைவருக்கும் எல்லா வகையான இன்பங்களையும் வழங்குவார். காசி விநாயகருக்குள்ள பாடல் வருமாறு:

''தருவான கற்பகச் சோலையே எல்லாம்
தரும் பெரிய பதும நிதியே
சங்கநிதியே உண்ண உண்ணத் தெவிட்டாத
நண்ணமுதின் அதிமதுரமே.
கருவூலமே என்றுனைப்பாடி உருக அருள்
காசிவாழ் துண்டிராச
கணபதியெனும் பெரிய குணமேருவே அருட்
கருணுநிதிக் கடவுளே!''

பிள்ளையார்பட்டிப் பெருமானை வணங்கி னுல் எல்லாப் படை வீட்டிலும் உள்ள பெரு மானை வணங்கிய பலன் கிடைக்கும். அவர்க் குரிய பாடல் வருமாறு:

''பிள்ளையார்பட்டிப் பெருநகரில் வீற்றி
ருந்தே
உள்ளுவார் துன்பம் ஒழிக்கின்ற—
தெள்ளமுதே
என்னருமைக் கற்பகமே என்னுளத்தில்
நீ இருக்கத்
துன்னுமோ முன்னைவினைச் சொல்!''

**ஆருவது படை வீடு** சிதம்பரத்திற்குப் பக்கத்திலுள்ள திருநாரையூராகும். இங் குள்ள பிள்ளையார் பெயர் ''பொல்லாப் பிள்ளையார்'' என்பதாகும். இவர் தேவாரத் திருமுறைகளை வெளியாக்கியவர். ஆகவே, இவர் ஞானம் தருகின்ற பிள்ளையாரா வார். இவர்க்குரிய பாடல் வருமாறு:

''மருப்பை ஒரு கைக்கொண்டு நாரையூர்
மன்னும்
பொருப்பை அடிபோற்றத் துணிந்தால்
—நெருப்பை

அருந்த எண்ணுகின்ற எறும் பன்றே அவரை
வருந்த எண்ணுகின்ற மலம்!''

உலக வாழ்க்கையில் என்ன செல்வம் பெற்ருலும் இறுதியில் ஞானம் பெறுவதே நம் குறிக்கோளாகும். இந்த ஞானத்தைத் திருநாரையூரில் உள்ள பொல்லாப் பிள்ளை யார் தந்தருள்வார்.

இதுகாறும் கூறியவற்ருல் திருவண்ணு மலைப் பிள்ளையாரிடத்தே வினை நீக்கம் பெறலாமென்பதும், விருத்தாசலம் பிள்ளை யாரிடத்தே பொருட் செல்வமும் கல்விச் செல்வமும் பெறலாமென்பதும், திருக் கடவூர்ப் பிள்ளையாரிடத்தே மரண பயத்தை நீக்கிக் கொள்ளலாமென்பதும், மதுரைப் பிள்ளையாரிடத்தே நினைத்த காரிய சித்தி பெறலாமென்பதும், காசிப் பிள்ளையா ரிடத்தே எல்லாத்தெய்வங்களையும் வணங்கிய பலனைப் பெறலாமென்பதும் அங்கே போக முடியாதவர்கள் பிள்ளையார்பட்டிப் பிள்ளையாரை வணங்கினுல் அதே பலனைப் பெறலாமென்பதும், திருநாரையூர்ப் பிள்ளையாரிடத்தே ஞானத்தைப் பெறலாம் என்பதும் இனிது புலனுகும்.

தம்பிக்கு ஆறு வீடு இருக்கும் பொழுது அண்ணனுக்கும் ஆறு வீடு இருக்க வேண்டு மென்னும் கருத்தால் முன்னைய மரபு இல்லா விட்டாலும் இவ்வாறு வகுத்துக் கூறியுள் ளேன் என அறிதல் வேண்டும். □



## நகரத்தார் பற்றி 'கவியரசு' கண்ணதாசன்

காசி விசாலாட்சி கவின் மதுரை மீனுட்சி கட்டியுள்ள ஆடைகளும்
கழுத்திலுள்ள பொன் நகையும் சுற்றியுள்ள மண்டபமும் தூக்கி வரும்
வாகனமும் மற்றும் அழியாத மொட்டைக் கோபுரத்தழகும்
அண்ணுமலையில் அமர்ந்திருக்கும் பேரழகும் ஆக்கிக் கொடுத்தவர்கள்
அங்கிருந்து காத்தவர்கள் நாட்டுக்கோட்டை வளர்த்த நகரத்தார் அல்லேமோ,

# புகலிடம் கொடுத்த பட்டணம் எனும் இலுப்பைக்குடி

— சேது. அருணாசலம் —

அலகிலா விளையாட்டுடை அண்ணல், அடியவரை ஆட்கொள்ளும் கருணையே அருள் விளையாட்டு, பரமன் பக்தர்களை ஆட்கொண்ட அற்புதங்கள் பலப்பல. பால் கொடுத்துப் பாட வைத்தான் ஒரு குழந்தையை. ஓடி வந்து ஓலை காட்டித் தன்னைப் பித்தன் எனப் பாட வைத்தான் ஒரு தொண்டனை. விண் சுமந்தவன், நெற்றிக் கண் சுமந்தவன், அடியவர் அருளில் கலந்து மண் சுமந்தவன், மதுரை மண்ணும் சுமந்து, பிரம்படியால் புண்ணும் சுமந்தவன் என்றால் பெம்மான் பேரருளைப் பேசுதற்கு நமக்கு ஆற்றலேது?

தாய், சேயிடம் ஒன்றைக் கொடுத்து, அதைத் திரும்பத் தான் பெற்றுக் கொள்வதில் தாய்க்குத் தனித்ததொரு ஆனந்தம். இறைவன் தாயிற் சிறந்த தயாவான தத்துவன் அல்லவா? எனவேதான் அடியவர்களை ஆட்கொள்ள எளியவனாகி, ஆண்டவன் நாம் இருக்கும் இடம் தேடி வருகின்றான். இல்லங்கள் தோறும் எழுந்தருளும் நம்பெருமான் இலுப்ப மரச் சோலைக்குள் சுயம்பிரகாசமாய் எழுந்தருளித் திருவருள் பாலிக்கத் திருவுள்ளம் கொண்டான் போலும்.

நகரத்தார் திருக்கோயில்களாகிய நகரக் கோவில் ஒன்பதில் ஒன்றாகிய இலுப்பக்குடியைப் பற்றித் தமிழ்நாடு கெஜட் இராமநாதபுரம் பிரிவில், இலுப்பைக் கிராமம் என்றும், இலுப்பை மரங்கள் நிறைந்த பெரிய சோலை என்றும், நகரத்தார் செய்த திருப்பணி என்றும், மிகவும் போற்றுதற்குரிய சிற்பங்கள் நிறைந்த ஓர் ஆலயம் என்றும், மிகுந்த பாராட்டுடன் வெளியிடப்பட்டுள்ளது கண்டு மிகப் பெருமை அடைகின்றோம்.

வில்வமரம் தல விருட்சமாகவும், பாவம் போக்கிப் புண்ணியம் சேர்க்கும் தீர்த்தங்களாகப் பிரம தீர்த்தம், சிவகங்கைத்தீர்த்தம், கௌரி தீர்த்தமும் உள்ளன. ஒன்பது நகரக் கோவில்களில், இலுப்பக்குடியில் மட்டும் தான் பிரம்ம உற்சவம் (முதல் நாள் காப்புக் கட்டிப் பத்தாவது நாள் கொடி இறக்கி 11வது நாள் தெப்ப உற்சவம்) நடைபெறுகிறது என்பது குறிப்பிடத் தக்கது. 1842, 1882, 1901, 1959 ஆண்டுகளில் முறையே முதல் நான்கு திருக்குட நன்னீராட்டுகள் நடைபெற்றுள்ளன. இத்திருக் கோவிலில் வரும் தைத் திங்கள் 26 வ (8-2-85) வெள்ளிக் கிழமை முற்பகல் 12 மணி அளவில் சிறப்பாகத் திருக்குட நன்னீராட்டாக ஐந்து நிலை இராஜ கோபுரத்துடன் நடைபெற உள்ளது எண்ணி உளம் பூரிக்கிறது.

இத் திருக்கோயிலைப் பற்றி எண்ணுகிறவர்கள் எவரும் அங்குள்ள சிற்பக் கலையைப் பற்றிச் சொல்லாமலிருக்க முடியாது. அந்த அளவுக்கு நம் கண்ணையும், கருத்தையும் கவரும் வண்ணமாக அமைந்துள்ளன. தக்ஷிணாமூர்த்தி சன்னிதியில், மேலே கற்களாலான கை மரங்களை முறுக்குக் கம்பி, தட்டையான கம்பிகளாலே இணைக்கப் பட்டிருப்பதும் (இழைவைக் கம்பிக்குப் பதிலாகக் கல்லாலே கம்பி போன்று அமைத்திருப்பது) முருகன் சன்னிதி எதிரில், அதாவது சுவாமி சன்னிதியின் மேற்புறத்தில் உள்ள ஒரு இடத்தில் மிகவும் சிறிதான

உருண்டைக் கற்கம்பிகளால், கைகள் இணைக்கப் பட்டிருப்பதையும் காணும் போது, கம்பிகளாலே இணைக்கப் பட்டிருப்பது போல இருப்பது கண்டு வியக்கத் தக்கதாய் உள்ளது. சுவாமி சன்னிதியில், முதல் தூணின் உட்புறத்தில், அருள் பொருந்திய $1\frac{1}{2}$ அங்குல விநாயகர், சண்டிகேசுவரர் சன்னிதியின் எதிரே உள்ள தூணில் 1 அங்குல விநாயகர் இவைகளைக் காணும் பொழுது நமக்கு ஆச்சரியம் மிக மேலிடுகிறது.

சௌந்தரநாயகி அம்மை உடனுய அருள் மிகு சுயம்பிரகாசர் உறையும் இத்தலத்தைச் சூடாமணிபுரம் என்று அழைப்பது இத் தலத்தின் தனிச் சிறப்பு (இன்றைக்கும் இலுப்பக் குடிக்கும் காரைக்குடிக்கும் இடையே உள்ள ஒரு புறநகர்ப் பிரிவுக்குச் சூடாமணிபுரம் என்று பெயர் வைத்திருப்பது இங்கு நினைவுகூரத்தக்கது). சூடாமணிபுரம் என்ற பெயர் நகரத்தார்களின் முன்னோர் களில் ஒருவரான தனபதி செட்டியாரவர்கள் மூலம் உண்டானது என்பதை இங்குச் சற்று நோக்குவோம்.

தனவணிகச்செம்மலாம் தனபதிச்செட்டியாரவர்கள் வணிகத்தின் பொருட்டு அயலூர் செல்லும் பொழுது, வில்வவிருக்ஷத் தடியில் ஆழ்ந்த நித்திரையில் இருந்த பொழுது, வைசியக் குலமணியை, வலிய ஆட்கொள்ளத் திருவுள்ளம் கொண்டு, சிவ பெருமான், கனவில் ஒரு சித்த வேடம் கொண்டு தோன்றி, ''நாம் அருகில் உள்ள இலுப்பக்குடியில் வீற்றிருக்கிறோம். நீ வந்து என்னைப் பூசிக்கக் கடவாய். உமக்கு இம்மை இன்பத்தோடு மறுமை இன்பமும் நிரம்ப அளிக்கின்றோம்!'' எனத் திருவாய் மலர்ந்தருளினர். இறைவன் இருக்கும் இடத்தை நாம் தேடிச் செல்வதைவிட, நாம் இருக்கும் இடம் தேடி, இறைவன் வருவது மிகச் சிறப்பாகும். இதைத்தான் மணி வாசகப் பெருமானும் ''தானே வந்து என் உள்ளம் புகுந்து அடியேனுக்கு அருள் செய்தான்'' என்பார். இதற்கு ஏற்பவே சிவ பெருமான் தனபதிச் செட்டியாரை வலிய ஆட்கொண்டான் போலும்.

அதன்படி தனபதிச் செட்டியாரும் மருங்குள்ள இலுப்பக்குடியை அடைந்து முறைப் படி விசேஷ அபிஷேக ஆராதனைகள் நடத்தி, மெய்யுருக வழிபட்டு, ''இந்த நாயினும் கடையேனை, இருக்கும் இடம் தேடி வந்து அருள் புரிந்த உனக்கு நான் என்ன கைம் மாறு செய்யப் போகிறேன்? என்னால் என்ன செய்ய முடியும்?'' என, நீர் சொரிந்த கண் களோடும், குவிந்த கரத்தோடும், குனிந்த சிரத்தோடும் நின்றபோது இறைவன் நேரில் பிரசன்னமாகி, ''அன்பனே தனபதி! நாம் அருளிய வண்ணமே நீ செய்த பூசைக்கு மிக மகிழ்ந்தோம்; யாது வேண்டும் நினக்கு?'' என இறைவன் வினவ காரைக்கால் அம்மையார் போலவே தனபதியும், ''எனக்கு எதுவும் வேண்டாம், உம் அருளால் எனக்கு யாது குறையும் இல்லை. உம் திருவடியில் 'இறவா அன்பு' தான் வேண்டும்!'' என்றார். ''அவன் அருளாலே அவன் தாள் வணங்கி'' என மணிவாசகப் பெருமான் சொல்லுமாப் போல, அவனை வணங்கவும், அவனுக்குத் தொண்டு செய்யவும் அவன் அருள் வேண்டினர்.

சுயம்பிரகாசர் தனபதிச் செட்டியாரை நோக்கி, ''நின்னால் பல திருப்பணிகளைச் செய்விக்கத் திருவுளம் கொண்டோம். எடுக்கும்தோறும் எள்ளளவும் குறையாது (அக்ஷய பாத்திரம் போன்றது) மென்மேலும் பொருள் கொடுக்கும் 'சூடாமணியை'க் கொடுக்கின்றோம். பெற்றுக்கொள்'' எனக் கொடுத்தருள, அதனைப் பயபக்தியுடன் இருகரம் ஏந்திக் கண்களில் ஒற்றிகுதூகலித்து ஆனந்தக் கூத்தாடிப் பெற்றுக்கொண்டார். **சுயம்பிரகாசர் சூடாமணி கொடுத்ததால், சூடாமணிபுரம் என்றும். வலிய ஆட்கொண்டு புகலிடம் கொடுத்தமையால், புகலிடம் கொடுத்த பட்டணம் என்னும் பெயர்** இலுப்பைக்குடிக்கு வந்தது.

சூடாமணி என்பது தலையில் அணியும் ஒரு அணி என்பது, கலைக்காட்சிக் குழு இரண்டாவது உலகத் தமிழ்க் கருத்தரங்கு மாநாடு சென்னையில் வெளியிட்ட கையேட்டில் உள்ள திரு கம்பன் அடிப்பொடி அவர்களின் கட்டுரையால் தெரிய வருகிறது. ஜோடி

வாகனத்துடன் காட்சி அளிக்கும் வயிரவர் வேறு எங்கும் இல்லை.

மேலும் இங்கு இரு வடுக வாகனங்கள் கூடிய வடுகவயிரவர் மிகப் பிரசித்தி பெற்ற தெய்வம் ஆவார். அதனை இங்கு ஒருவாறு நோக்குவோம். முன்னொரு காலத்தில், அசுரனின் கொடுமை தாங்காமல் தேவேந்திரன் வெள்ளியங்கிரியை அடைந்து பார்வதி மணாளனிடம் முறையிடவே, சிவபெருமானும், ''அன்பனே! நீ ஒருசிறிதும் அஞ்சவேண்டாம். வில்வ வனத்திலே தானே தோன்றியதாகிய நம் சிவலிங்கத்தைப் பூசிப்பாயாக. நாம் வைரவத் திருஉருக் கொண்டு அத்துஷ்டனைச் சங்கரிக்கின்றோம்!'' எனத் திருவாய் மலர்ந்தருளினார்.

இந்திரனும் சகல தேவர்களுடன் இலுப்பக்குடியை அடைந்து சுயம்பிரகாசரைச் சில நாள் முறைப்படி பூசிக்கவே எம்பெருமானும் வைரவக்கோலம் கொண்டு (கண்ட அரக்கன் திடுக்கிட்டு அஞ்சி ஓடும்படியான கோலம்) கும்பாண்டசுரனை அழித்துத் தேவேந்திரன் இடர் களைந்தனன். ''அன்பனே! நீ எண்ணியபடி உம் துயர் தீர்த்தோம். இன்னும் என்ன வேண்டும்?'' என வினவ, தேவேந்திரனும், ''அடியேன் தனை இரட்சித்ததற்கு அறிகுறியாக இத்தலத்தில் எப்போதும் இத்திருமேனியுடன் வீற்றிருந்து, வரும் அடியவர்கள் துயர் களைய வேண்டும்!'' என்றும், 'யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்பதற்கேற்பவேண்டிக்கொண்டனன். ''அங்ஙனமே ஆகுக!'' எனத்திருவாய்மலர்ந்தருளி இன்றும் நமக்கு வைரவக் கோலத்தில் அமர்ந்து காட்சி தந்து கொண்டிருக்கிறார்.

இலுப்பக்குடியைச் சார்ந்த நகரத்தார்கள் எதனைத் துவங்குகிற போதும் ''வைரவ மூர்த்தி துணை'' என்று எழுதித்தான் துவங்குகிறார்கள். முப்பத்து மூன்று ஊர்களில் பரவி வாழும் இத்திருக்கோவிலைச் சேர்ந்தவர்கள் விசேட காலங்களிலும், அடிக்கடியும் வந்து அபிஷேக ஆராதனை செய்து மாலையோடு வடைமாலையும் சார்த்திப் பயபக்தியுடன் வணங்கி வருகின்றனர். வயிரவரின் திருவருளால் வையத்தில் நோயற்ற வாழ்வுடனும் குறைவற்ற செல்வத்துடனும் வாழ்ந்து வருகின்றனர். வயிரவருக்குத் திருவிழாக் காலங்களில் ஊரார்களும் நகரத்தாரும் வேல் குத்திக் காவடி எடுத்துப் பால் குடம் செலுத்தித் தத்தம் பிரார்த்தனைகளைச் செய்து வருகின்றனர். கடந்த 40 ஆண்டு காலமாகத் தொடர்ந்து அங்கு, திரு கல்யாண சுந்தரக் குருக்கள் அவர்கள் பூசைப்பணியினைப் பணிவுடன் செய்து வருகின்றார்கள். அவர் அங்கு வரும் பக்தர்களை இன்முகத்தோடு வரவேற்று இத் திருக்கோயிலைச் சுற்றிக் காண்பிக்கும் முறை மிகப் போற்றுதற்குரியது. இத்திருக்கோவிலின் தென்னை மரங்களின் காய்கள், மட்டைகள் போன்ற எச் சிறு பொருள்களும் தெருவில் கிடந்தால் கூட யாரும் எடுக்க மாட்டார்கள். தெரியாமல் யாரேனும் எடுத்தால் கூடப் பல இன்னலுக்கு ஆளாக்கப் பட்டிருக்கின்றனர்என்றுசொல்லக்கேட்டிருக்கின்றோம். முன்னொரு காலத்தில் ஒருவர் தெருவில் கிடந்த இளநீரை எடுக்கும் போது ஒரு பெரியவர், ''இதுவயிரவர் இளநி, எடுக்கக் கூடாது!'' என்று சொல்ல ''இதிலென்ன கொம்பா முளைத்திருக்கிறது?'' என்று கேட்டு அதனை எடுத்தாராம். அது உடனே, கொம்பு முளைத்த இளநீராக மாறிவிட்டதாம். அந்தக் கொம்பு முளைத்த இளநி இன்றும் கண் கூடாகக் காணுகிற அளவில் இந்தத் திருக்கோவிலில் உள்ளது.

சுயம்பிரகாசர் சூடாமணி கொடுத்து நகரத்தார்களைத் தனபதிச்செட்டியார் மூலம் ஏன் ஆட்கொண்டார்? நகரத்தார்களின் புகழையும் பெருமையையும் இறைபணியில் தோய்த்து பணி செய்பவர்கள் என்பதை உலகத்துக்கு இனம் காட்டவே ஆட்கொண்டார் என்றால் அது மிகையாகாது. எனவேதான் இன்றும் நகரத்தார்கள், வந்தார்க்கு இல்லையெனச் சொல்லாது உதவும் ஈகைக் குணம் உடையவர்களாகவும், திருப்பணி செய்வதிலே மன்னர்களுக்குப் பின் முடிசூடா மன்னர்களாகவும் திகழ்கின்றனர். சூடாமணி தந்த சுயம்பிரகாசராய் இலுப்பக்குடியில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமான் திருவருளால் வான்மாரி பெய்து, வையம் செழித்து, வளமுடனே நாளும் வாழ அவன் அருள் போற்றுவோமாக. ■

# இலுப்பைக்குடி கோவில் வரலாறு

சித. நடராசன், M.A.

**கோவில் சிறப்பு**

நகரத்தார்கள் குல மரபுக் கோயில்கள் ஒன்பது. அவற்றுள் ஒன்ருன இலுப்பைக் குடி கோவில் காரைக்குடியிலிருந்து தென் கிழக்கே மாத்தூர் சாலையில் சுமார் 3 கல் தொலைவில் அமைந்துள்ளது. செந்தாமரை மலர் நிரம்பிய தடாகங்களும் நிழல் தரும் பசுமரங்களும் சூழ்ந்த குளிர் சோலையின் நடுவே புதியதாகக் கட்டப்பட்ட இராஜ கோபுரத்துடன் எழிலார்ந்த கோலத்தில் வடிவுடையம்மன் உடனுய தான்ருேன்றிஈசர் அருள் பாலிக்க இத்திருக்கோயில் காட்சி அளிக்கின்றது.

'தான் தோன்றி ஈசரையும்
சங்கரியையும் போற்றறும்
மான் மதஞ்சேரும் துளவமார்மார்பர்,''
என்ற பாடுவார் முத்தப்பரின் வரிக ளானும்,
'பெருகு நன்நதிசூழ் பிரம்பூர் நாட்டில்
அரசர் மகிழ் சூடாமணிபுரத்தில்
நாதர் தான்தோன்றி நாயகர் மருவிய
மாது வடிவுள்ள மங்கையைத் தொழு வோர்
மிகுதமிழ் வாதுவென்ற விற்பன்னர்
புகழிடங் கொடுத்த பட்டணம்
உடையோர்''

என்ற ''ஏழு நகரத்தார் பேரில் குளுவ நாடக''த்தில் வரும் அடிகளானும் இத்தலத் தின் பெருமை புலனுதும்.

**சிற்பக் கலை நயம்**

இவ் ஆலயம் சோழர் பாணியில் கட்டப்பட்ட கட்டடக் கலைச் சிறப்பை உடையது. சுவாமி, அம்மன் கருவறைகள், அர்த்த மண்டபம் இவற்றின் வெளிப்புறச் சுவர்கள், தட்சிணுமூர்த்தி மண்டபம், மகா மண்டபத்தின் தூண்கள் ஆகியவற் றில் காணப்படும் கலை நயம் மிகுந்த சிற்பங் கள் நம்மை வியக்க வைக்கின்றன.

கர்னடக மாநிலத்திலுள்ள பேலூர், ஹளேபீடு ஆகிய இடங்களில் காணப்படும் நுண்ணிய வேலைப்பாடுகளுள்ள [ஆபரண அணிகளும் நகாசு வேலைகளும் மாக்கல்லில் இழைக்கப் பட்டவை. ஆனல் அதே போன்ற நுட்பம் மிகுந்த ஆபரணங்களை— அணிகளைக் கருங்கல்லில் சிற்பிகள் இங்கு செதுக்கியிருப்பது வியந்து பாராட்டுதற் குரியது.

அவற்றை நாம் இங்கு அம்மன் சந் நிதிக் கருவறையின் புறச்சுவரில் காணப் படும் எட்டுக்கால் மண்டபத்திலும் இரண்டு கருவறைகளின் வெளிப்புறம் காணப்படும் எண்திசை யானைகளின் (அஷ்ட திக்குகஜங்கள்) (மொத்தம் பதினறு 8 × 2 = 16) கழுத்து அணிகள், தலையணிகள், முகபடாம் அலங் காரம் இவற்றில் ஆபரண வேலைப்பாட் டையும், காற்சங்கிலி, மற்றும் துதிக்கை இவற்றில் யானைக்கு யானை வேறுபட்ட கலை நயங்களுடைய படைப்பையும் சிற்பி யின் கலைத்திறன் மிளிர்வதையும் காண் கின்ருேம். பொதுவாக நோக்குமிடத்து யானைகள் ஒரே மாதிரித் தோற்றம் அளிப் பினும் அவை ஒன்றுபோல் மற்ருென்று இருப்பதில்லை. ஊன்றிப் பார்த்தால் ஒவ் வொன்றும் வேறுபட்ட வேலைப்பாடுகள் நிறைந்து கலைப் பெட்டகமாய் விளங்குவது புலப்படும்.

[இது போல மற்ருெரு கலைக் கருவூலம் தட்சிணுமூர்த்தி மண்டபம் ஆகும். இங்கு மேலே காணும் வீணுதர தட்சிணுமூர்த்தி யும் கொடுங்கை வேலைப்பாடுகளும் கருங்

கல்லில் செதுக்கப்பட்டுள்ள முறுக்குக் கம்பி, தட்டைக் கம்பிகளின் நேர்த்தியும் கண்டு இன்புறத்தக்கவையாகும். மேலும் சுவாமி சந்நிதித் தூணில் காணப்பெறும் 1½'' விநாயகர் சண்டிகேசுவரர் முன்பு காணப்படும் 1'' பிள்ளையாரின் உருவங்கள் பார்த்துப் பாராட்டப்பட வேண்டியவையாகும்.]

### இலுப்பைக்குடி நகரத்தார்

நகரக் கோவில்கள் ஒன்பதில் இலுப்பைக் குடி ஒன்றாகும். ஏனைய எட்டுக் கோவில்கள் பின்வருமாறு:

இளையாற்றக்குடி, மாற்றூர், வயிரவன் கோயில், இரணியூர், பிள்ளையார்பட்டி, நேமம் கோயில், சூரைக்குடி மற்றும் வேலங்குடி என்பன ஆகும். இவை அனைத்தும் இராமநாதபுரம் மாவட்டத்தில் காரைக்குடி திருப்பத்தூர் வட்டங்களுக்குள் அமைந்திருப்பவை ஆகும்.

இவ்வொன்பது கோயில்களில் உறையும் சிவபெருமானை நகரத்தார்கள் தங்கள் குல முதல்வனாக எண்ணி வழிபட்டு வரும் சிறப்பை உடையவர்கள். அதற்கேற்பத் தங்கள் வீட்டுத் திருமணத்தைக் கோயிற் பிரிவுப்படி தமக்குரிய கோயிலில் பாக்கு வைத்துப் பதிவு செய்து அங்கிருந்து கோயில் மாலை பெற்றே நடத்திக் கொள்வர். இந்த மரபு வழா நெறிமுறை இன்றும் கண்டிப்பான முறையில் பின்பற்றப்பட்டு வருகின்றது.

இலுப்பைக்குடி கோயில் நகரத்தார்களில் உட்பிரிவுகள் இல்லை. ''கேரள சிங்க வள நாடாகிய பிரம்பூர் நாட்டில் இலுப்பைக்குடியான புகலிடங் கொடுத்த பட்டணத்தில் சூடாமணிபுரம் உடையார்'' என்பது இவர்கள் இசை குடிமானத்தில் எழுதப் பெறும் வாசகமாகும்.

சுமார் 1250 ஆண்டுகட்கு முன்பு பாண்டிய நாட்டை அரசாண்டு வந்த சவுந்தர பாண்டிய மன்னன் என்ற அரிகேசரி மாறவர்மனால் கலியுகம் 3815—கி. பி. 714ஆம் ஆண்டில் நகரத்தார்களுக்கு க்ஷேத்திர சுவாத்தியங்களுடன் விட்டுக் கொடுக்கப்பட்ட கோயில் இது என்று நகரத்தார் வரலாறு கூறும்.

### தல புராணம் — தலச் சிறப்பு

மதுகபுரம், சூடாமணிபுரம் என்று குறிக்கப் பெறும் இலுப்பக்குடித் தலத்தைச் சிறப்பித்துக் கூறும் தல புராணம் ஒன்று உண்டு. சுமார் 70, 80 ஆண்டுகட்கு முன்பு நம்குலவண்ணெண்டர் மாணுக்கர், தஞ்சை சதாவதானம் சுப்பிரமணிய அய்யர் அவர்களால் அழகிய செய்யுள் நடையில் இயற்றப் பெற்று, 936 பலவகை யாப்பில் சிறந்த பாக்களைக் கொண்ட நூலாகும் இது. தேவகோட்டை வித்துவான் வயிரவன் செட்டியார் அவர்கள் இதனை வசன நடையில் எழுதியுள்ளனர்.

பாயிரம், நாட்டுப் படலம், நகரப் படலம், நைமிசப் படலம், பிரமன் பூசித்த படலம், வேதம் பூசித்த படலம், வயிரவப் படலம், முண்டாசுரப் படலம், சௌந்திர நாயகி திருமணப் படலம், கண்ணன் மகப்பேறு படலம், கொங்கண சித்தப் படலம், திரிபுவனச் சக்கரவர்த்தி படலம், அதிவீர பாண்டியப் படலம், மன்றையனூர் படலம், சூடாமணிப் படலம், தீர்த்த விசேடப் படலம், தல விசேடப் படலம், முனிவர் பூசனைப் படலம் எனப் பதினெட்டுப் பிரிவுகளாகப் புராணக் கதைகளை விரித்துரைக்கின்றது இந்நூல்.

### வயிரவர் தோற்றம்

வயிரவர் சிவ மூர்த்தங்களுள் ஒருவர். நீல நிறம் உடையவர். திருவடிகளில் சிலம்பும் மார்பில் தலை மாலையும் அணிந்தவர், முக்கண்கள் உடையவர். சூலம், மழு, பாசம். உடுக்கை ஆகியவற்றைக் கைகளில் ஏந்தியவர். செஞ்சடையும் கோரைப் பற்களும் உடையவர். மேலும் வயிரவர் கோலத்தை,

''ரக்த ஜ்வால ஜடாதரம் ம்ருகதரம்
ரக்தாங்க தேஜோ மயம்
ஹஸ்தே சூல கபால பாச டமருகம்
லோகஸ்ய ரக்ஷாகரம்
நிர்வாணம் சுவனவாகனம்
ஆனந்த கோலாகலம்
வந்தே பூத பிசாச நாதம் வடுகம்
க்ஷேத்திரஸ்ய பாலம் சிவம்''

என்ற வடமொழி சுலோகமும் தெரியப் படுத்தும்.

வைரவர் வரலாற்றைச் சிவ புராணமும் ஸ்காந்தமும் எடுத்தியம்புகின்றன. பிரம் மாண்ட புராணம் அவருடைய புகழைச் சொல்கிறது. சிவபிரான் பிரம்மனுடைய அகந்தையை அடக்குவதற்காகத் தனது புருவ மத்தியிலிருந்து ஒரு மனித வடிவத்தைப் படைத்தார். இவரே பைரவர் என்று சிவ புராண ஸ்லோகம் ஒன்று கூறும். அப்பர் பெருமான் தமது திருச்சேறைப் பதிகத்தில் வயிரவர் வெளிப்பட்ட தோற்றத்தினைக் கீழ்க் கண்டவாறு விவரிக்கின்றார்:

''விரித்தபல் கதிர்கொள் சூலம் வெடிபடு தமருகம் கை
தரித்ததோர் கோலகால பைரவனாகி வேழம்
உரித்துஉமை அஞ்சக்கண்டு ஒண்திரு மணிவாய் விள்ளச்
சிரித்துஅருள் செய்தார் சேறைச் செந்நெறிச் செல்வனாரே!''

அசுரர்கள் இழைத்த கொடுமையினின் றும் தேவர்களைக் காப்பதற்காகக் காசி நகரில் பிரகதாரணன் என்ற முனிவன் செய்த உருத்திரயாகத்தில் வயிரவக் கடவுள் தோன் றினார் என்று திருப்புத்தூர்ப் புராணம் கூறு கிறது. வைரவர் தமது அம்சத்தால் எட்டு வைரவர்களைப் படைத்தார். அவர்கள்,

1. சிதாங்க வைரவன்
2. ருரு வைரவன்
3. சண்ட வைரவன்
4. குரோத வைரவன்
5. உன்மத்த வைரவன்
6. காபால வைரவன்
7. பீடண வைரவன்
8. சங்கார வைரவன்

வயிரவர் வழிபாடு திருப்பத்தூரைச் சேர்த்துச் சுற்றிலும் எட்டு ஊர்களில் கொண்டாடப் படுகிறது. திருப்பத்தூர் வைரவருக்குச் சிரசுத் தானம், வயிரவன் பட்டி இருதயத்தானம் — இலுப்பைக்குடி பாத ஸ்தானம் ஆகும்.

இனி, இலுப்பைக்குடி தல புராணத்தில் வயிரவர் தோற்றம் வயிரவப் படலத்தில் பின்வருமாறு கூறப்படுகிறது.

கும்பாண்டகன் எனும் அசுரன் இந்தி ராதி தேவர்களைப் போரிட்டு வென்று தேவ லோகத்தைக் கைப்பற்றிக் கொண்டான், அவனால் விரட்டப் பட்ட இந்திராதி தேவர் கள் சிவபெருமானிடம் சென்று முறையிட அவர் அருளியபடி வில்வ வனத்திலே வந்து சுயம்பிரகாச மூர்த்தியாய் விளங்கும் சிவ பெருமானைப் பூசைசெய்து வழிபாடு இயற்றி வந்தனர். அங்ஙனம் வரும் நாளில் கும் பாண்டகன் இம் மதுகபுரம் தலத்திலும் வந்து போரிட்டு இந்திரனைத் தோல்வியுறச் செய்ய, இந்திரன் தான்றோன்றி ஈசரைச் சரணடைந்து வேண்டி நின்றனன். உடனே சுயம்புலிங்கத்தினின்றும் வயிரவ மூர்த்தி அச்சமூட்டும் வடிவில் வெளிப்பட்டுக் கும்பாண்டக அசுரனைத் தம் திரிசூலத்தால் வதம் செய்தார். பின்பு தேவர்கள் வேண்டு தலுக் கிணங்கி சுவாமி சந்நிதானத்திற்கு ஈசான்ய திக்கில் வடுக வயிரவ மூர்த்தியாய் வீற்றிருந்து பக்தர்களுக்கு அருள்பாலித்து வருகிறார் (என்பர்).

இங்குள்ள வேட்டை வயிரவர் குறிப் பிடத்தக்க சிற்பமாகும். இரட்டை வாகனத் துடன் காணப்படுகிறார்—இங்கு மூலவர் தான்றோன்றி நாதர் என்றாலும் ஆட்சி செய்யும் தெய்வம் (வயிரவர்) (உச்சாடனம்) வயிரவ மூர்த்தி **என்பது பொருந்தும்**—இத் தெய்வம் சுற்றுப்புற மக்களால் பயபக்தி யுடன் கொண்டாடப் படுகிற உக்கிரமான காவல் தெய்வமாகும்—சித்திரா பௌர்ணமி சித்திரை நட்சத்திரத்தில் வேல் குத்தி காவடிகள் எடுப்பதுண்டு; முடி இறக்குவ துண்டு; குழந்தைகட்குப் பெயர் சூட்டுவதும் நடைபெறும். (பொதுவாக இக்கோயிலார் தம் கடிதங்களின் முடிவில் ''வேணும் வயிர மூர்த்தி துணை'' என எழுதுவதுண்டு.)

**கொங்கணச் சித்தர்**

கொங்கணச் சித்தரின் ஐம்பொன் சிலை யொன்று பல ஆண்டுகட்கு முன்பு இங்கு பூமியைத் தோண்டும்போது கிடைத்தது. தற்போது அது கோவிலின் உள்ளே சுவாமி சந்நிதியில் அர்த்த மண்டபத்தில் வட மேற்கே உற்சவ விக்ரகங்களுடன் வைக்கப் பட்டுள்ளது. கொங்கணச் சித்தர் அடங்கிய தலம் இது எனவும் கருதப்படுகிறது.

மேலும் பள்ளியறையின் பின்புறம் அமைந்துள்ள சதுரங்க மண்டபம் கொங்

கணச் சித்தரின் சமாதியாக இருக்கலாம் என்று கருதப்படுகிறது. அதன் மேல் காணப்படும் சிலையொன்று—வில்வ மரத்தடியில் சித்தர் லிங்க வழிபாடு செய்யும் காட்சி—இவ்வாறு கருத இடமளிக்கின்றது.

கொங்கணச் சித்தரைக் குறித்து தல புராணம் (என்ன செய்தி) சொல்லுகிறது? கொங்கண தேயத்திலிருந்து வந்த சித்தர் கொங்கண சித்தர் எனப்பட்டார். அவர் சித்துக்களில் வல்லவர். நவலோகங்களில் பச்சிலைகள் மூலிகைகள் இவற்றைக் கொண்டு தங்கம் செய்யும் இரசவாத வித்தையை நன்கு அறிந்தவர். ஆயிரம் மாற்றுப் பொன் பெற அவா மிகக் கொண்டு இரசவாதத் தொழிலில் மிக முயன்று வந்தார். தஞ்சையில் பதினறு மாற்றுப் பொன் வரை கிடைத்தது. மீண்டும்முயன்ருர். நூறு மாற்று கிடைத்தது. எனினும் சித்தருக்கு ஆசையறவில்லை. தஞ்சை மாநகர் வந்து பெருவுடையார் தாள் வணங்கி இரசவாதத்தைத் தொடர்ந்தார்— இருநூறு மாற்றுப் பொன் கிடைத்தும் அவர் மனம் அமைதியுருததைக் கண்ட இறைவன் அவர்பால் பரிவுற்று பாண்டி நாட்டுக்கு வரச் சொல்லி ஆக்ஞை பிறப்பித்தார். பாண்டிய நாடு போந்த கொங்கணரும் மாற்றூரில் தங்கி இரசவாதம் செய்ததில் ஐநூறு மாற்றுப் பொன் பெற்ருர். எனினும் ஆயிரம் மாற்றுப் பொன்னை விரும்பி ஈசனைத் துதித்த போது அவரை இறைவன் அருகிலுள்ள வில்வ வன க்ஷேத்திரம் சென்று **இலுப்பைக் குடித்தலத்தில்** அங்கு உறையும் சுயமபிரகாச வள்ளலை வழிபடு எனக் கூற, சித்தரும் அவ்வாறே இங்கு வந்து தான்ருேன்றி ஈசனைப் போற்றி நிற்க, ஈசன் ஆயிரம் மாற்றுப் பொன்னினும் மிக்க அளவிலாப் பெருஞ் ஜோதி ரூபமாய்க் காட்சி அளித்தார். அந்த ஒளி வெள்ளத்தில் மூழ்கி ஆன்மஞானம் விழித்தெழப் பெற்ற சித்தர் தன் அறியாமையை உணர்ந்து வெட்கி, பொன்னுசையை நீத்து இறைவன் திருவடி நீழல் இன்பமே எல்லையற்றது என்பதுணர்ந்து, அவனருள் பெற்று உய்ந்தார் என்பது தலபுராணம் உணர்த்தும் சித்தரின் கதையாகும்.

### சோழமன்னனின் கோயில் திருப்பணி

இனி, திரிபுவனச் சக்கரவர்த்தி எனும் சோழமன்னன் ஒருவன் பாண்டி நாட்டிலுள்ள இவ்வில்வவனத்திற்கு வேட்டையாட வந்தபோது, பக்தர்களை வலிந்தாட் கொள்ளும் சிவபெருமான் தம் பூத கணங்களில் ஒன்றை ஏவி பொன்மான் உருக்கொளச் சொல்லி, இவனை வழி நடத்தி, தாம் அவ்வனத்திலேயே, சுயம்பிரகாச மூர்த்தியாய் எழுந்தருளியிருப்பதை மன்னன் உணரும்படி செய்தார். பொன்மானின் பின் தொடர்ந்து வந்த மன்னவன் ஒரு குறிப்பிட்ட இடத்தில் மான் மறைந்ததும் அதைக் காணுது தேடி அவ்விடம் சுயம்புலிங்கம் ஒன்று இருப்பதைக் கண்டு இறைவன் தன்னை வலிய ஆட்கொண்டு அருள் செய்த அற்புதத்தை நினைந்து நினைந்து வியந்தான். பின் சிலகாலம் அங்கேயே தங்கி தான்ருேன்றி நாதருக்கு முறைப்படி கருவறை. அர்த்த மண்டபம், மகாமண்டபம் ஆகியன அமைத்து கோயில் திருப்பணி செய்தான் என்றும் தலபுராணம் கூறுகிறது.

### சூடாமணிபுரம் உடையார்

அடுத்தபடியாக, இத்தலம் நகரத்தாருக்கு புகலிடம் கொடுத்த பட்டினமாகக் கருதப்படுகிறது.

புகார் நகரில் உயர்வாணிகம் செய்து சிறப்புடன் வாழ்ந்திருந்த—ஔவையாரால் பந்தன் அந்தாதி பாடப்பெற்ற பந்தன் என்ற வணிகனின் வழிப்புதல்வன் தனபதிஎன்பவன் அரசனின் அநீதி பொறுக்க முடியாமல் தன் மனைவி நீலவிழியுடனும் சுற்றத்துடனும் (சொத்துக்களுடனும்) சோழநாடு நீங்கி பாண்டிய நாட்டை அடைந்து இவ்வில்வ வனத்தைச் சார்ந்து களைப்பு மேலிட்டதால் ஒரு மர நிழலில் கண்ணயர்ந்திருந்தான். அவ்வமயம் அவன் கனவில் சுயம்பிரகாச வள்ளல் ஒரு சித்தர் வடிவில் தோன்றி தன் இருப்பிடம் கூறி வருமாறு பணித்து மறைந்தார். திடுக்குற்று கண்விழித்தெழுந்த தனபதியும் தான் கண்டவண்ணமே வழி நடந்து தான்தோன்றி ஈசரைக் (சுயம்புலிங்கத்தை) கண்டு பூசனைகள் புரிந்து நின்ருன். ஈசரும் அவனுக்குக் காட்சி தந்து, "நீயும் உனது சுற்றமும் இங்கு தங்கி நம் கோயிலுக்கு தொடர்ந்து திருப்பணி செய்ய வேண்டும் எனத் திருவுளம் கொண்டோம். அதன்

பொருட்டு எடுக்க எடுக்கக் குறையாது பொருள் வழங்கும் சூடாமணியினை நும்பால் தருகிறோம்'' எனக்கூறி சூடாமணியினையும் அவனிடம் கொடுத்து மறைந்தார்.

எனவே, வைசிய குல வள்ளல்பால் இறைவன் தோன்றி வலிந்தாட்கொண்டு அவனுக்கும் உறவினர்க்கும் புகல் இடங் கொடுத்தமையால் இது புகலிடம் கொடுத்த பட்டணம் என்றும் சூடாமணி கிடைத்ததால் சூடாமணிபுரம் என்றும் வழங்கப்பெற லாயிற்று.

### திருவிழாக்கள்

பிரம்மோற்சவம், சித்திரா பௌர்ணமி, சித்திரை மீ சித்திரை நட்சத்திரத்தில் தீர்த்த வாரி விழா நடைபெறுகிறது. தவிர, மார்கழி திருவாதிரை தரிசனமும், புரட்டாசி மீ நவராத்திரி உற்சவமும் நடைபெற்று வருகிறது.

ஒன்பது நகரக்கோயில்களிலும் பிரம மோற்சவம் இலுப்பைக்குடியில் மட்டும் தான் நடந்து வருகிறது.

### கல் திருப்பணி

நகரக் கோயில்கள் செம்புராங்கல் திருப்பணியிலிருந்து வெள்ளைக்கல் திருப்பணி யாக புதுப்பிக்கப்பட்டு வரும்போது முதல் கல்திருப்பணி இங்கு நடைபெற்றது. திருக்குட நன்னீராட்டு விழாக்கள் முறையே 1842, 1882, 1901, பின் 1959ம் ஆண்டுகளில் நான்குமுறை நடைபெற்றுள்ளது. ஐந்தாவது திருக்குட நீராட்டுவிழா, புதியராஜகோபுரம் நிர்மாணிக்கப்பெற்று ரக்தாக்ஷி வருடம் தை மாதம் 26-ம் நாள் 8-2-85 மிகச் சிறப்பாக நடைபெற்றது. □



தொடுகின்ற இதழ் மீது உறவாடும்
நாசிக்குள் சுகமான தென்றல் வருமே
தொடர்பான மணவாளன் இல்லாத நேரத்தில்
சுடுகின்ற தீயும் வருமே

— கவிஞர் கண்ணதாசன்

# நகரத்தார் திருமணம் : நடைமுறைகள் - விளக்கம்

பெ. ராம. ராம. லெ. இராமநாதன் செட்டியரர்,
நச்சாந்துபட்டி

நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் நடத்தும் திருமணங்கள்-அவற்றின் இடையே நடைபெறும் சடங்குமுறைகள் யாவும் சிறப்பு மிக்கவை; அர்த்தத்துடன் கூடியவை; காரண காரியங்களுடன் வகுக்கப் பட்டவை. சிந்தனைக்கு உரிய சிறப்புமிக்க அம்சங்களைத் தன்னுள் அடக்கிக் கொண்டவை ஆகும்.

நமது செட்டி நாட்டில் தற்போது நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் அநேகம் பேர் குடும்பத்துடன் தொழில் காரணமாக நம் மாநிலத்தின் பல ஊர்களிலும் பரவலாக வாழ்ந்து வருகின்றனர். உறவினர் வீட்டுக் கல்யாணங்கட்கும் பங்காளி வீட்டு திருமணங் கட்கும் வந்து கலந்து கொண்டு உடன் திரும்பிச் சென்று விடுகின்றனர். எனவே, திருமணங்களில் நடைபெறும் சடங்கு முறை கள், மரபுகள், மற்றும் பழக்க வழக்கங்கள் ஆகியவற்றை வளர்ந்து வரும் இளைய தலை முறையினர் அறிய வாய்ப்புகள் குறைவாகவே உள்ளன. இதே நிலைதான் மலேசியா, சிங்கப்பூர் மற்றும் பிற நாடுகளில் வாழ்ந்து வரும் குடும்பங்கட்கும் ஏற்பட்டுவிடுகின்றது.

மேலே குறிப்பிட்ட குடும்பங்களில் அவரவர் வீடுகளிலேயே தன் பெண்ணிற்கோ அல்லது பையனுக்கோ திருமணம் நடை பெறும்போது மாப்பிள்ளை அழைக்க என்ன என்ன எடுத்து வைக்கவேணும், திருப்பூட்டுத் தாம்பாளத்தில் எது எது வைத்துக் கொண்டு செல்ல வேண்டும், எப்ப விளக்கு வைக்க வேணும், யார் விளக்கு வைப்பது போன்ற விவரங்கள் ஒன்றும் தெரியாத காரணத்தால் உறவினர் களில் பெரியவர்களிடமோ பங்காளிகளில் மூத்தவர்களிடமோ இவைபற்றிக் கேட்க வேண்டி உள்ளது. எனவே இளைய தலை முறையினர் அவைகளை நன்கு விவரம் தெரிந்து கொள்ளவும், இப்பழக்கங்கள் யாவும் காலத் தால் மாறுபடாமல் அப்படியே நடந்து வரவும் இக்கட்டுரையை உருவாக்கித் தந்துள்ளேன்.

இக்கட்டுரையில் குறிப்பிட்டுள்ள சடங்கு நடைமுறைகள் பற்றிய குறிப்புகள் யாவும் நச்சாந்துபட்டியைச் சுற்றியுள்ள ஐந்து ஊர்களில் நடைபெறுவன ஆகும். மற்ற செட்டிநாட்டுப் பகுதிகளிலும் இதுவே ஒரு சில சிறு மாற்றங்களுடன் முன்பின்னாக நிகழுமே தவிர வேறு அடிப்படை மாற்றங் கள் எதுவும் இல்லை

திருமணத்தில் தற்போது நாம் நடத்தி வரும் நடைமுறைச் சடங்குகளையும் பழக்க வழக்கங்களையும் வரிசைக் கிரமமாக வகைப் படுத்திக் கீழே தந்துள்ளேன்.

**திருமணத்திற்கு முதல் நாள் இரவு**

1. பெண் வீட்டார் மனைக்கு மண் எடுத்து வருவது.

2 மாப்பிள்ளை வீட்டார் பெண் வீட்டி லுள்ள (கழுத்துருவைப்) பெற்று வந்து கோர்த்து வைப்பது.

3. பெண் வீட்டில் அரசு ஆணைக்கால் கட்டுதல்.

**திருமணத்தன்று**

4. மணப் பெண்ணிற்குப் பூரம் கழிப்பது.

5. மாப்பிள்ளை அழைப்பு.

6. மாப்பிள்ளைக்கு பகவத் தியானம் செய்விப்பது.

7. பெண்ணிற்கு பகவத் தியானம் செய்விப்பது.

8. திருப்பூட்டுத் தாம்பாளம் காட்டி ஆசீர்வாதம் பெறுதல்.

9. திருப்பூட்டும் நிகழ்ச்சி.

10. திருப்பூட்டுச் சடங்கு செய்வது.

11. இசை குடிமானம் என்னும் இசைவுப் பிடிமானம் எழுதி இரு வீட்டாரும் கையெழுத்திட்டு மாற்றிப் பெற்றுக் கொள்ளுதல்.

12. குதிரையில் இருக்கும்போது பூ எறிதல்.

13. குதிரை ஏறிக் கோயில் சென்று வருதல்.

14. பெண் எடுக்கிக் காட்டுவது.

15. மணவறை வைபவம்.

16. பங்காளிகள் பணம் எழுதுதல்.

17 பெண் வீட்டார் கல்யாண வேவு எடுக்க வேண்டியது.

18. மஞ்சள் நீர் ஆடுவது.

19. காப்புக் கழட்டுவது.

20. கால் மோதிரம் இடுவது.

21. நாணலைச் சடங்கு செய்து கொள்வது.

22. சோறு போடுவது.

23. பிள்ளை எடுக்கிக் கொடுப்பது.

24. மாமக்காரப் பெண்கள் அரசாணைக் காலுக்குப் பொங்கல் இடுவது.

25. காப்பு அவிழ்ப்பது.

26. அரசாணிக்கால் அவிழ்ப்பது.

27. பெண் சொல்லிக் கொள்வது.

28. முந்தானையில் முடிவது.

29. பெண் வீட்டில் பெண் அழைப்பது.

30. மாப்பிள்ளை வீட்டில் "பெண் அழைத்த வீட்டுப் பொங்கல்" வைப்பது.

31. மாப்பிள்ளை வீட்டில் பெண் அழைப்பது.

32. புது மணமக்கள் இருவரும் 'குலம் வாழும் பிள்ளை' எடுப்பது.

33. பெண் அழைத்த வீட்டுச் சடங்கு செய்வது.

34. புது மணத் தம்பதியர் பால் பழம் சாப்பிடுவது.

35. பெண் வீட்டார் எடுக்கும் பச்சரிசி வேவு.

36. மாப்பிள்ளை வீட்டார் எடுக்கும் நெல் வேவு.

37. பெண் வீட்டார் சொல்லிக் கொள்வது.

**கோலம் போட வேண்டிய விவரம்**

திருமணத்திற்கு முதல் நாள் பகல் மாப்பிள்ளை வீட்டில் வளவுப் பங்காளி வீட்டுப் பெண்டுகளை வைத்துக் கல்யாணம் நடைபெறும் நடு வீட்டிலும், வளவு நடையிலும் கோலம் போடப்படும்.

பெண் வீட்டில் நடு வீட்டிலும், வளவு நடையிலும், மணையின் மேலும், பூரம் கழுக்கும் இடத்திலும், அரசாணிக்கால் கட்டும் இடத்திலும், அரசாணி அடுப்பிலும் கோலம் போட வேண்டும்.

**சாமிக்குப் பணம் முடிவது**

மாப்பிள்ளை வீட்டார், பெண் வீட்டார் ஆகிய இரு வீட்டாரும் திருமணத்திற்கு முதல் நாள் இரவு, நல்ல நேரம் பார்த்து அவரவர் குல தெய்வங்கட்கும் பழக்கப்படி பணம் எடுத்து முடியும் சாமிகட்குப் பணம் முடிய வேண்டியது. வளவு நடு வீட்டில் விளக்கு ஏற்றி வைத்துப் பணம் முடிந்ததும் விபூதி எடுத்துப் பூசிக் கொள்ள வேண்டியது.

படைக்கும் பழக்கம் உள்ளவர்கள் அவரவர் வீட்டுப் பழக்கப்படி படைத்து, பின் உணவு உண்ண வேண்டியது.

**கொழு மேளம்**

அன்று மாலையில் உள்ளூர் நகரச் சிவன் கோயிலில் இருந்து மேளக்காரர்கள் மற்றும் நாதஸ்வர வித்வான்கள் வந்ததும், பாய் எடுத்துக் கொடுத்து அவர்கள் அமர்ந்ததும், சங்கு எடுத்து ஊத வேண்டியது. உடனே அவர்கள் மங்கள வாத்தியம் வாசிக்க ஆரம்பித்து விடுவார்கள். கல்யாணமும் களை கட்ட ஆரம்பித்து விடும்.

**வயிரவி கொண்டுவரும் கோயில் மாலை**

அன்று இரவு இரு வீட்டாரின் நகரக் கோயில்களிலுமிருந்து நாம் மூன்று தினங்கள்

முன்பு-வியாழன் திருமணம் என்ருல் திங்கட் கிழமை பாக்கு வைக்க வேண்டும். ஒருநாள் முன்னதாகச் சென்ருல் ஞாயிறன்று பதிவு செய்ய ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். ஒரு நாள் பிந்தினுல் 35 காசு அபராதத் தொகையுடன் பதிவு செய்து கொள்வார்கள்- நேரில் பங்காளியை அனுப்பிப் பாக்கு வைத்ததை ஏற்று அவ்விடம் புத்தகத்தில் பதிந்து கொண்டு அதற்கு ஆதாரமாகவும் அரசர் ஆணையாகவும் திருமணம் செய்யலாம் என்பதற்கு அனுமதியாகவும் வயிராவி வசம் விபூதி பிரசாதமும் கோயில் மாலையும் கொடுத்து அனுப்பி வைப்பார்கள். வயிராவி வந்ததும் பெண்ணின் அல்லது மாப்பிள்ளை யின் அப்பத்தாள் அல்லது அயித்தையைக் கூப்பிட்டு நடு வீட்டில் அவர்களையே விளக்கு ஏற்றச் சொல்லி, சங்கு ஊதி, கோவில் மாலையை அவர்கள் கையாலேயே வாங்கி வைக்கச் சொல்ல வேண்டியது.

### மணைக்கு மண் எடுப்பது

முதல் நாள் இரவு 8மணி அளவில் பெண் வீட்டில் குறிப்பாக அந்த அந்த வீட்டுவளவுப் பெண்டுகள், தாயாதிப் பெண்டுகள் ஆகி யோர் யாவரும் ஆளுக்கு ஒரு சிறு சட்டியோ போகணியோ கையில் எடுத்துக் கொண்டு பழக்கமாய் உள்ள கண்மாய்க் கரைக்கோ ஊரணிக் கரைக்கோ சென்று, சிறு பெண்கள் சங்கு ஊதிக் கொண்டு வர, மணை போடு வதற்காக எல்லாக் கிண்ணங்களிலும் அந்த மண்ணை எடுத்து வைத்துத் திரும்ப வீடுவந்து, வீட்டில் மணை போடப் பெறும் இடத்தில் கொட்டி சதுரப்படத் தட்டி அதன் மேல் இரண்டு செங்கற்களை வைத்தவுடன் பளிங் குக் கல் மணையைக் கொண்டு வந்து அதன் மேல் வைக்க வேண்டியது.

### அரசு ஆணைக்கால் எனும் அரசாணிக்கால் கட்டுதல்

பெண் வீட்டார்கள் அவர்கள் பங்காளி களைக் கொண்டு வகை ஆட்களும் இருந்து கொண்டு அரசாணிக் காலைக் கட்ட ஆரம் பிக்க வேண்டியது. சிட்டைப்படி சாமான் கள் வந்ததும் ஐயாக்கள் வீட்டில் பெரிய வரோ பங்காளிகளில் பெரியவர்களைக் கொண்டோ அரசாணிக்கால் நடும் சிமெண்ட் கட்டையில் (Block) உள்ள பள்ளத்தில் பாலை ஊற்றி, பவளத்தையும் 25 பைசா காசையும் போட்டுப் பாலைக் கம்பு, கிழுவைக் கம்பு இரண்டையும் நட்டு மேற்புறம் குறுக்கே போட்டுள்ள மூங்கிலில் கட்டிவிட வேணும். பின்னர் கீழிருந்து மேலாக இரு கம்புகளைச் சுற்றிலும் அரச இலையை அதிகமாகவும் மாவிலையைக் குறை வாகவும் பயன்படுத்தி வாழை நாரைக் கொண்டு அழகாகவும் படிமானமாகவும் வலிந்து கட்டிவிட வேண்டியது. பின்னர் அதன் அருகில் $4\frac{1}{2}$ அடி உயரத்தில் விளக்கின் அடிப் பாகம் இருக்குமாறு சர விளக்கைத் தொங்கவிட வேண்டியது.

### மாப்பிள்ளை வீட்டில் கழுத்துருக் கோர்ப்பது

முதல் நாளிரவு சாமிகட்டுப் படைத்து முடிந்ததும் பெண் வீட்டிற்கு ஆள் அனுப்பி கழுத்துருவை வாங்கி வர வேணும். பின்னர் பங்காளிகள் மற்றும் பெரியவர்கள் இருந்து 10 நிர். நூற்கண்டைப் பிரித்து முப்பிரி நூலாக வரும்படி திரித்து, முறுக்கேற்றி, மஞ்சள் தடவி, மஞ்சள் சரடாகவே மாற்றி மேலும் கீழுமாக இரட்டை வரிசை வரும்படி யாகக் கழுத்துஉரு,உருப்படி 32ல் குச்சி,தும்பு துவாளை 3 நீங்கலாகப் பாக்கி உள்ள 29ஐயும் ஷ்டி சரட்டில் கோர்க்க வேண்டியது. கீழ் வரிசையில் திருமாங்கல்யம் வர வேண்டும். இரண்டு வரிசையை இழுத்துப் பிடித்தால் திருமாங்கல்யம் மேலாக வரும்படி கோர்க்க வேண்டியது. உதவியாக ஒரு கோர்க்கப் பட்ட கழுத்துருவை முன்னே வைத்துக் கொண்டு செயல்பட்டால் எளிதாக இருக்கும்.

குச்சி, தும்பு, துவாளை மூன்றையும் பின்னீடு பெண் மருந்து குடிக்கும்போது (தீர்த்தம் சாப்பிடுதல்) சேர்த்துக் கட்ட வேணும். எனவே, அவை தவிர மற்ற யாவற்றையும் இப்போது சேர்த்து விட வேண்டியது.

கழுத்துரு கோர்த்து முடிந்ததும் திருப் பூட்டுத் தாம்பாளத்தில் அதனை வைத்து மற்றும் சிட்டைப்படி உள்ள சாமான்களையும் அதில் தயாராக எடுத்து வைத்துக் கொள்ளவும்.

**பூரம் கழித்தல்**

திருமணத்தன்று அதிகாலை 4 மணிக்கு மணப் பெண்ணுக்குப் பூரம் கழிக்கச் சிவன் கோவில் குருக்கள் ஐயரைக் கூட்டிவரச் சொல்லி,மாமன் மனைவி உடனிருக்க குருக்கள் சிட்டைப்படி சாமான் கொடுத்துப் பூரம் கழிக்கச் சொல்ல வேண்டியது. பின்னரே பெண் குளிக்க வேணும்.

**மாப்பிள்ளை அழைப்பு**

மாப்பிள்ளை வீட்டிலிருந்து, பார்த்த நேரப்படி, மாமக்காரர் கைபிடிக்க நடு வீட்டில் உட்கார்ந்து,மாலை போட்டு,டர்பன் வைத்து, விபூதி அணிந்து அழைத்து வந்து, வளவு பெரிய கதவுக்கு முன்பாக வீட்டைப் பார்த்தபடி நிற்கும் போது மாப்பிள்ளையின் அப்பத்தாள் விளக்கு வைத்து விபூதி பூசிவிட வேணும். பின்னர் பையனின் தந்தை தேங் காய்ச் சட்டியுடனும் தாயார் திருப்பூட்டுத் தாம்பாளத்துடனும் மாப்பிள்ளையை அழைத்துச் சென்று பழக்கப்படி உள்ள இடத்தில் திருமணம் நடைபெறும் ஊருக்குக் காரேற்றி அனுப்பி வைக்க வேண்டியது.

மாப்பிள்ளை அழைத்துப் போகும்போது மணமகன் வீட்டார் பெண வீட்டிற்கு ஒரு கடகத்தில் உப்பும் ஓலையும் ஒரு பூசணிப் பழமும் கொண்டு சென்று வைக்க வேண்டும்.

பெண்ணின் ஊரில் மாப்பிள்ளை வந்து இறங்கியவுடன் ஆகாசவாணம் வெடித்து மாப்பிள்ளையின் வருகையை அறிவிக்க வேண்டும். முக்கியமானவர்கள் அனைவரும் வந்து சேர்ந்ததும் மாப்பிள்ளை வீட்டார் பெண் வீட்டார்க்கு மாப்பிள்ளை அழைக்க வருமாறு சொல்லி விட வேண்டும்.

பெண் வீட்டார் தங்கள் வீட்டுப் பெரி யவர்களிடம் மாப்பிள்ளை அழைக்க எடுத்து வைத்த சாமான்கள் அடங்கிய தாம் பாளத்தைக் கொடுத்து எடுத்து வரச் சொல்லிப் பெண்டுகள் உடன்வர மாப்பிள்ளை வந்து இறங்கியிருக்கும் இடத்திற்கு வர வேணும்.

அங்கு பங்காளிகள் வகையில் பெரியவர் மாப்பிள்ளைக்கு விபூதி அணிவித்து மோதிரம், செயின் போட்டு, கெடிகாரம் கட்டி விட வேண்டும். பூமாலை போட்டு செண்டை வேட்டியை மாலைக்குக் கீழே செருக வேணும். பின்னர் எலுமிச்சம் பழத்தைக் கையில் கொடுத்துப் பூச்செண்டும் கொடுத்து மணமகனை அழைத்துக் கொண்டு பெண் வீட்டிற்கு வர வேண்டும்.

**மணமக்கள் பகவத் தியானம் செய்தல்**

மாப்பிள்ளை அழைப்பு முடிந்ததும் பஞ்சாங்கக்கார ஐயரைக் கூட்டி வந்து கண்டிப்பாக முதலில் மாப்பிள்ளைக்கும் பின்னர் பெண்ணுக்கும் பகவத் தியானம் செய்விக்க வேண்டும். மாப்பிள்ளை பகவத் தியானம் செய்யும்போது தலைச் சீலையில் பணம் முடிய வேண்டும்.

**திருப்பூட்டுதல்**

ஆண்களில் பெண்ணின் மாமக்காரரும் பெண்கள் பகுதியில் மாப்பிள்ளையின் தாயார் அல்லது தங்கைமாரும் திருப்பூட்டுத் தாம்பாளத்தை எடுத்துச் சென்று அனை வரிடமும் ஆசி பெற்று வருதல் வேண்டும்.

மணப் பெண்ணுக்கு மாப்பிள்ளை வீடு கொண்டு வந்து தந்த திருப்பூட்டுச் சேலையை மாற்றிக்கொள்ளச் சொல்லி,மாமக்காரரிடம் கோயில் மாலையைக் கொடுத்து, கழுத்தில் அணிந்து, மணைக்குக் கூட்டி வந்து மணையில் நிற்க வைக்க வேண்டியது. மணையில் நின்ற வுடன் மஞ்சள் தடவிய தேங்காய்-1 வெற்றிலை பாக்கு, விறலி மஞ்சள்-2 கொண்டு வந்து கொடுத்து இரு கைகளிலும் சேர்த்து வைத்துக் கொள்ளச் சொல்லவும். உடன் மாப்பிள்ளையை மணையைச் சுற்றினாற்போல் கூட்டி வந்து மணைக்குக் கீழே பெண்ணிற்கு நேர் எதிரில் நிற்கச் சொல்ல வேண்டும். அருகில் பையனின் தாயார் திருப்பூட்டுத் தாம்பாளத்தைக் கைகளில் ஏந்தி நிற்க வேண்டும்.

திருப்பூட்டும்போது பெரியவர்கள் நின்று கொண்டு முதலில் விபூதியை எடுத்துக் கொடுத்து மாப்பிள்ளையைப் பூசிக்கொள்ளச் சொல்வது; பின்னர் பெண்ணிற்குப் பூசி விடச் சொல்லவும். பின்னர், கழுத்து உருவை—திருமாங்கல்யத்தை முன் பார்வை யாக இருக்கும்படி வைத்து இரு முனைகளை யும் மாப்பிள்ளையின் கையில் கொடுத்துக்

கெட்டிமேளம் கொட்டச் சொல்லி அனைவரும் பூமாரி பொழிய திருப்பூட்டச் சொல்ல வேண்டியது. கழுத்துருவை மூன்று முடிச்சுப் போடச் சொல்ல வேணும். பின்னால் இருந்து நாத்திமார்கள் வாங்கி முடிய வேண்டும். பின்னர் சிறு தாலி சோடிப்பு, பெரு தாலி சோடிப்பு முதலிய வற்றையும் மாப்பிள்ளை பெண் கழுத்தில் அணிவிக்க வேண்டியது.

பின்னர் கழுத்துஉருவில் உள்ள தாலி யிலும் சிறிதாலி பெருதாலி சோடிப்புகள் இவற்றுலும் அரைத்த மஞ்சளை வைக்கச் சொல்லவும். முடிச்சு மூன்றிலும் மஞ்சளை வைக்கச் சொல்லவும். பின்பு அதன் மேல் குங்குமம் வைக்க வேண்டியது. பிறகு திருப்பூட்டக் கொண்டு வந்த பெரிய பூ மாலையை எடுத்து மாப்பிள்ளை பெண்ணிற் குச் சூட்ட வேண்டியது. இது முடிந்ததும் மணமக்கள் இருவரும் இனிப்பு மிட்டாய் களைப் பரிமாறிக் கொண்டு சாப்பிட வேண்டியது. பின்னர் இருவரும் மும்முறை மாலை மாற்றிக் கொள்ள வேண்டும். இவை முடிந்ததும் மணமக்கள் இருவரும் முகப்பு வரை சென்று இருபுறமும் நோக்கி வந்திருந் தோரைக் கைகூப்பி வணங்கி ஆசி பெற்று வர வேண்டும். இதன் பின்னர் திருப்பூட்டுச் சடங்கு நிகழ்ச்சி தொடரும்.

### திருப்பூட்டுச் சடங்கு

பெண்ணைத் தடுக்குப் போட்டுக் கீழே நிற்கச்சொல்லிசடங்குசெய்துகொள்பவர்கள் தடுக்கின் மேலே மணையில் நின்று கொண்டு சடங்குத் தட்டைக் கொண்டு வரச் சொல்லி ஷெ தட்டில் உள்ள விபூதியைத் தானும் பூசிக்கொண்டு பெண்ணிற்கும் பூசிவிட வேண்டும். சடங்குத் தட்டில் உள்ள நெல், மஞ்சள், பஞ்சு, உப்பு, புளி ஆகிய ஐந்தையும் ஒவ்வொன்ருக மும்முறை தொட்டுச் சடங்கு செய்பவர்கள் தன் கழுத்திலும் பின்னர் பெண் கழுத்திலும் தொட்டுச் சடங்கு செய்ய வேண்டும். பின்னர் கெண்டிச் செம்பில் உள்ள தண்ணீரைப் பெண்ணின் கையில் உள்ள வெற்றிலையில் ஊற்றவும். அப்போது நிறை நாழியை எடுத்து வந்து ஒரு கையில் தொட்டுக் கொண்டு மறுகையால் தண்ணீர் 3 முறை ஊற்ற வேண்டும். பெண் வெற்றிலை யில் விழும் தண்ணீரைத் தன் பாதத்தின் கட்டை விரலில் ஊற்றிக் கொண்டு வெற் றிலை நுனியைத் தன் நெற்றியில் வைத்துக் கொள்ளுதல் வேண்டும. இது முடிந்ததும் நிறை நாழியைப் பெண் தலையைச் சுற்றிக் கொடுத்து உள்ளே வைக்க வேண்டியது.

பின்னர் சிலேட்டு விளக்கு, சடங்குக் குழவி இவற்றைக் கொண்டும் சடங்கு செய் வித்து உள்ளே வைக்க வேண்டும். இத்துடன் திருப்பூட்டுச் சடங்கு முடிந்தது. அடுத்து மணவறைச் சடங்கும் இதே போல்தான் செய்து கொள்ள வேண்டும்.

### பணம் எழுதுதல்

திருப்பூட்டி முடிந்ததுமே நேரத்தை அனுசரித்துப் பங்காளிகள் இருந்து பணத் திருப்பேடு எழுதவேண்டியது. ஒரு முக்காலி யில் சருவச் சட்டி வைத்துப் பச்சைப்பாலை ஊற்றி வெற்றிலையைக் கிள்ளிப் போட்டு அதில் ஒரு தங்கமோதிரத்தையும் ஒரு ரூபாய் நாணயத்தையும் போட்டதன் பின் பணம் எழுத வேண்டும்.

முதலில் அந்த வகை ஆட்கள், அப்புறம் பங்காளிகள், பிறத உறவினர் ஆகவும் பங்காளிகளாகவும் உள்ளவர்கள், பின்பு மாமக்காரர்களை எழுதிப் பின்பு சடங்குக் காரர்கள் சம்பந்தப் புரங்களையும், உறவினர், நண்பர்களையும் எழுதி ஒன்ருகப் பணத்தைச் சிகப்புத் துணியில் முடிந்து, மாப்பிள்ளை வீடாக இருந்தால், வெற்றிலை பாக்குடன் கூடிய தாம்பாளத்தில் வைத்து மாப்பிள்ளை யிடமும், பெண் வீடாக இருந்தால் பெண் ணின் தந்தைஅல்லது உடன் பிறந்தாரிடமும் கொடுக்க வேண்டியது.

### இசைவுப் பிடிமானம் எழுதுதல்

இசைவுப் பிடிமான வாசகங்கள் தற் போது அச்சிடப்பட்டுத் தயாராகக் கிடைக் கின்றன. இரு தரப்பாரும் அவற்றில் அவர வர்கள் கோயில்கள், பிரிவுகள் விவரத்தினை நிரப்பி மணமக்களின் தந்தைமார்கள் இருவரும் மணையின் மேல் அமர்ந்து கையெழுத்துச் செய்து மாற்றிப் பெற்றுக் கொண்டு வைத்துக் கொள்ள வேண் டியது.

மணவறை

மாப்பிள்ளை பெண் இருவரும் மணையில், இடது பக்கம் பெண் காலை மடக்கிப்பின்புறம் வருமாறு இருக்கவும். மாப்பிள்ளை மணையின் வலது பக்கம் அமர வேண்டியது. மணவறை நடவடிக்கைமுழுவதும் பஞ்சாங்கக்கார ஐயர் சொல்படி நடைபெறுவதுதான். இதில் இரு வீட்டாரின் உறவினர்கள் ஆண்கள் யாவரும் முளைப்பாரியில் நவதானியம் போட்டும் பெண்ணுக்கும் மாப்பிள்ளைக்கும் பூமணம் இடவும் வேண்டும். மணவறை முடிந்து பெண் மாப்பிள்ளை இருவரையும் மாமக் காரர்கள் வீட்டுக்குள் அழைத்துச் செல்லும் போது நெல் கோட்டையை வைத்துத் தாண்டி உள்ளே செல்ல வேண்டும்.

ஏனைய சடங்குகள், நிகழ்ச்சிகள் விவரம்

இனி, குதிரைஏறிக் கோவிலுக்குச் சென்று வருதல், பெண் எடுக்கிக்காட்டுதல், பூ எறிதல் நிகழ்ச்சிகள் திருப்பூடடுச் சடங்கு முடிந்ததும் தொடர்வன ஆகும.

பின்னர் மணவறை முடிந்ததும் மண மக்கள் கும்பிடு கட்டிக்கொண்டு பெரியோ ரிடம் நல்லாசியும் வாழ்த்தும் பெறுவார்கள்.

பிறகு பெண் வீட்டார் கல்யாண வேவு எடுப்பார்கள் தலைப் பிள்ளையின் திருமண மாக இருப்பின் மாம வேவு எடுத்துப் பின் கல்யாண வேவு எடுப்பார்கள்.

இதன் பிறகு மஞ்சள் நீர் ஆடுதல், காப்புக் கழட்டிக் கால் மோதிரம் இடுதல் நாணுளைச் சடங்கு செய்து கொள்வது, சோறு போடுவது, பிள்ளை எடுக்கிக் கொடுப்பது, அரசாணிக் காலுக்குப் பொங்கல் இடுதல், காப்பு. அவிழ்த்தல் அரசாணைக் கால் அவிழ்த்தல், பெண் சொல்லிக் கொள்ளுதல், முந்தானையில் முடிவது, பெண்வீட்டில் பெண் அழைப்பது ஆகிய நிகழ்ச்சிகள் நடைபெறும்.

மாப்பிள்ளை வீட்டில் ''பெண் அழைத்த வீட்டுப் பொங்கல்'' இடுதல், பெண் அழைப்பது, மணமக்கள் 'குலம் வாழும் பிள்ளை' எடுத்தல், பெண் அழைத்த வீட்டுச் சடங்கு செய்தல், புது மணமக்கள் பால் பழம் சாப்பிடுவது ஆகிய நிகழ்ச்சிகள் தொடரும்.

பின்னர் பெண் வீட்டார் பச்சரிசி வேவு எடுப்பார்கள். மாப்பிள்ளை வீட்டார் நெல் வேவு எடுப்பார்கள். பின்னர் கணக்குப் பார்த்து பெண் வீட்டார் சொல்லிக் கொள் வார்கள். திருமணம் முடிந்தவுடன் மூன்று முறை பெண்வீட்டார் மாப்பிள்ளை பெண்ணை தன் வீட்டுக்குக் கூட்டி வரவேணும். இந்த முறையுடன் திருமணச் சடங்கு முறைகள் நிறைவு பெறுகின்றன. கட்டுரையின் விரிவஞ்சி பிற்பாடு சொல்லிவந்த சடங்கு முறைகளை நான் இங்கு விளக்கவில்லை. அவை பின்னர் வெளிவரும் நூலில் விரிவாக இடம் பெறும என நவின்று இத்துடன் நிறுத்திக் கொள்கிறேன்.



அள்ளியிடும் கையினால் அர்த்த சாமத்திலும்
அருள் செய்யும் அன்பு மயிலே
அறமுடைய வணிகர் குலம் சிலை வைத்த தேவியே
அழகு விசாலாட்சி உமையே

- கவிஞர் கண்ணதாசன்

# நகரத்தார் திருமணச் சிறப்பு

'சோமலெ'

நாட்டுக்கோட்டை நகரத்தார் திரு மண முறைகள்—குறிக்கத்தக்க சிறப்புகக்ள வாய்ந்தன. அச்சிறப்புக்கள் சிலவற்றைச் சுட்டிக் காட்டுவதும் அவற்றுக்கு விளக்கம் கூறுவதும் இங்கே என் நோக்கங்கள் ஆகும்.

**1. திருமணம் நிகழும் இடம் :**

நகரத்தார் திருமணங்கள் செட்டி நாட்டில்தான் நடைபெறுவது வழக்கம். திருமண நிகழ்ச்சிகள் மணமகள் இல்லத் திலேயே நிகழ்வதும் மரபு.

விதி விலக்காக, சிலர் தாங்கள் தொழில் செய்யும் நகரிலோ நாட்டிலோ திருமணத்தை நடத்துகிறார்கள். இவை அத்தி பூத்தாற் போல் அங்குமிங்குமாக நடப்பவை.

**2. கோத்திரப் பிரிவு :**

நகரத்தார்களுள் கோத்திரங்கள் உள்ளன. இளையாத்தக்குடி முதலிய ஒன்பது நகரக் கோவில்களில் பிள்ளையார் பட்டியும், இரணிக்கோவிலும் சேர்ந்து ஒரே கோத்திர மாகக் கருதப்படுகின்றன. இளையாத்தக் குடியிலும் மாத்தூரிலும் ஏராளமான குடும்பங்கள் (புள்ளிகள்) இருப்பதால் இவற் றுக்குள்ளேயே உட்பிரிவுகள் அல்லது கோத் திரங்கள் இருக்கின்றன. மொத்தம் இரு பத்திரண்டு கோத்திரங்கள் இருக்கின்றன.

ஒரு கோத்திரத்தார் தங்கள் கோத் திரத்தைச் சேர்ந்தவர்களைப் பங்காளிகள் என்று அழைப்பார்கள். ஏனைய கோத் திரங்களைச் சேர்ந்த குடும்பங்களில்தான் பெண் கொள்ளலாம் அல்லது கொடுக்கலாம்.

இளையாத்தக்குடிக் கோவிலைச் சேர்ந்த அனைவரும் ஒரே பங்காளிகளாய் இருந்தும். அவர்களுக்குள்ளேயே கொள்வினை கொடுப் பினை இருப்பதால் ஒரு பிரிவினரை மற் றொரு பிரிவினர் **பகல் பங்காளிகள் அல்லது பெரும் பங்காளிகள்** என்று சொல்வது வழக்கம்.

**3. அழைப்பிதழ் :**

திருமண அழைப்பிதழில் தங்கள் நகரக் கோவிலில் கோவில் கொண்டிருக்கும் இறை வன் இறைவியரைக் குறிப்பது தொன்று தொட்டுப பழக்கமாக இருந்து வருகிறது "நித்திய கல்யாணி உடனுறை கைலாசநாதர் திருவருளால்" என்று மணமகன் குடும்ப அழைப்புத் தொடங்கினால், அந்தக் குடும்பம் இளையாத்தக்குடிக் கோவிலைச் சேர்ந்தது என்பது பொருள். இவ்வாறே பெண் வீட்டு அழைப்பிதழில் அவர்களுடைய நகரக் கோவிலின் இறைவன்—இறைவியர் பெயர்கள் குறிப்பிடப்பட்டிருக்கும்

**4. இறைவனுக்கு அழைப்பு :**

நகரத்தார் திருமணத்தில் கோவில் மிக முக்கியமானது. எல்லோருக்கும் அழைப்பு அனுப்புவது போல் மண வீட்டார் தாங்கள் வழிபடும் இறைவன்—இறைவியரையும் அழைக்கக் கடமைப் பட்டுள்ளனர். இந் தச் சடங்கு குறிப்பிட்ட ஒரு நாளில் மட்டுமே நிகழும். சித்திரை 10 - ஆம் நாள் திருமணம் என்றால், சரியாக மூன்று நாட்கள் முன்னதாக அதாவது சித்திரை 7-ம் நாள் பங் காளி ஒருவர் நகரக் கோவிலுக்குச் சென்று கோவிலிலுள்ள பதிவு ஏட்டில் திருமணத் தைப் பற்றிய விவரங்களையெல்லாம் எழுதிக் கையெழுத்திட வேண்டும். கோவிலுக்குப் பாக்கு வைத்து விட்டால் எக் காரணத்தா லும் திருமணத்தைத் தள்ளிப் போட இயலாது.

திருமணப் பதிவு வேலையைப் பழந்தமிழ் நாட்டில் கோவில்கள் செய்து வந்தன என் பது இதிலிருந்து அறியப்படுகிறது. வெற் றிலையும் பாக்கும் வைத்துப் பதிவு செய்வ தால் இச்சடங்கு 'கோவிலுக்குப் பாக்கு வைத்தல்' என்று பெயர் பெறுகிறது.

கோவிலுக்குப் பாக்கு வைத்ததும் அழைப்பை ஏற்று, இறைவன் மணமக்களை வாழ்த்துகிறார். கடவுளர் கழுத்திலிருந்து இரு மாலைகளைக் கழற்றிக் கோவில் ஊழியர் மூலம் திருமண வீட்டுக்கு அனுப்பப்படும். கோவில் மாலையை மணமக்கள் அணிந்தால் தான் நகரத்தார் திருமணம் செல்லுபடி யாகும்.

**5. முன்னோர் வழிபாடு :**

கோவிலுக்குப் பாக்கு வைத்த மறுநாள் சுவாமிக்குப் படைக்கும் நாளாகும். மிக நெருங்கிய உறவினர் குழுமியிருந்து, அன்று அக்குடும்பத்து முன்னோர்களுக்குப் படைப்பார்கள். அல்லது சாஸ்தா முதலிய குல தெய்வங்களை எண்ணிப் பணம் முடிந்து வழிபடுவார்கள்.

**6. திருவிளக்கேற்றுதல் :**

சுவாமிக்குப் படைத்துத் திருமணம் தொடங்கும்போது, உள் வீட்டில் திருவிளக் கேற்றி வைப்பார்கள். திருமணம் முடியும் வரை, எத்துணை வகை மின்விளக்குகளால் அழகுபடுத்தனுலும் உள் வீடடில் இத்திரு விளக்கு ஒளி தநது கொண்டிருக்கும். இதனை அகநானூறு 'மணி விளக்குறுத்து' (86) என்று குறிப்பிடுகிறது. மனையின் கண் விளக்கேற்றி அஃது ஒளி தந்து கொண டிருககும்படி செயதலை இது குறிக்கும்.

அதன் பிறகு அனைவரும் ஊருணிக்குச் சென்று. ஊருணி மண்ணை அள்ளித் திருமண வீட்டுக்குக் கொண்டு வந்து மணமேடை அமைப்பர். இவ்விழாவிற்கு மணவறை போடுதல், அல்லது மணவறைக்கு மண் எடுத்தல் என்று பெயர்.

**7. உறவினரை அழைத்தல் :**

உறவினரைத் திருமணத்திற்கு அழைக்கும் உரிமை பங்காளிகளுக்கே உண்டு. அச்சிடட அழைப்பிதழ்கள் உறவினரல்லாதாருக்கு மட்டுமே வழங்கப்படும. பங்காளிகளையும் உறவினர்களையும் நேரிலேயே திருமணத்திற்கு அழைக்க வேண்டும். அவர்கள் வீடடுக்குப் போய்த் 'திருமணம் சொல்லவந்திருக்கிறோம், என்று அறிவித்ததும், அவர்கள் தடுக்குப் போட்டு வெற்றிலை பாக்குத் தருவார்கள். திருமணத்திற்கு அழைப்பவர் அந்தத்தடுக்கில் அமர்ந்து, திருமணத் தேதியைக் குறிப்பிட டு 'வருக' என அழைக்க வேண்டும். தடுக்குப் போடுதல் என்பது ஒப்புகலுக்கும (acceptance) தடுக்குப் போடாதது மறுத்தலுக்கும் (Refuse) பொருளாகின்றன.

''அவளுக்கெப்படிக் கல்யாணம் சொல்றது, அவள் தடுக்குப் போடல்லேன் னுட்டாளே!'' என்று கூறுவர்.

செட்டி நாட்டுத் தடுக்குத் தனிச் சிறப் புடையது. அழகு மிக்கது.

கண்ணகி கோவலனுக்குத்'தாலப்புல்லின் வால்வெண் தோட்டு கைவன் மகடூஉக்களின் பெறப்புனைந்த தவிசு. இட்டு உணவு படைத் தாள், என்பதைச் சிலப்பதிகாரம் கூறுகிறது' 'பனையினது தூய வெள்ளை நிற ஓலையைக் கொண்டு,தொழில் வன்மை படைத்த பெண் ணொருத்தி அழகு பெற மிடைந்த தொழிற் சிறப்புடைய தடுக்கு'என்பது இதன்பொருள்.

**கல்யாணம் சொல்லுதலில் வரிசை முறை :**

முதலில்நெருங்கிய பங்காளி ஒருவருக்கும் மணமகன்(மணமகள்) உடைய தாய் மாமன் குடும்பத்துக்கும் நாள் பார்த்துத் திருமணம் சொல்லுவர். அன்று முதல் திருமணம் நிறை வேறி மணமக்களுடன் தாய்மாமன் குடும்பத் தில் பாராட்டு விருந்து (காய்ச்சி ஊற்றுதல்) கொள்ளும்வரை, மணம் நடத்தும் குடும்பத் தார் மங்கலமில்லாத எவ்வித நிகழ்ச்சியிலும் கலந்து கொள்வதில்லை.

**8. ஊர்க் கலியாணம் சொல்லுதல் :**

''ஊர்க் கலியாணம் சொல்லுவது'' என்பது நகரத்தார் பழக்கங்களில் ஒன்று. திருமணத்திற்கு முதல் நாளிரவு உள்ளூரில் சில வீடுகளில் சென்று கதவைத் தட்டி அழைத்து, உயர்ந்த வகைக் கொழும்புப் பாக்கும் வெற்றிலையும் வைத்துக் கலியாணம் சொல்லுவர். சிலப்பதிகாரம் மங்கலவாழ்த் துப் பாடலில் 'மாநகர்க்கு ஈத்தார் மணம்' என்றபகுதி காவிரிப்பூம்பட்டினத்து மக்களுக் குக் கண்ணகி—கோவலனுடைய கலியாணம் சொன்ன செய்தியைக் கூறுகிறது. அன்று யானை எருத்தத்தின் மேலேறிக் கூறினர். இன்று யானைகள் இல்லை என்பதற்காகப்பூனை களாகி விடவில்லை. நடந்து சென்றே, அம் முறையை நிறைவேற்றுகின்றனர்.

**9. ஊர்ச் சீனி :**

திருமணம் முடிந்ததும் ஊரார் அனை வருக்கும் சர்க்கரையும் பாக்கும் வழங்கி, மங்கல நிகழ்ச்சி இனிது நிறைவேறியதன் மகிழ்ச்சியை மண வீட்டார் ஊராருடன் பங்கு கொள்வர். ஒரு வண்டியில் சர்க்கரை (சீனி) மூட்டையை ஏற்றி வீடு வீடாகச் சென்று வலிந்து அன்பளிப்பர். இன்று சர்க்கரை பெற'கியூ'வரிசையில் மணிக்கணக் கில் காசும் பையும் ஏந்திக் கால் நோகக் காத் திருக்கும் காட்சியிலிருந்து இது எவ்வளவு மாறுபட்டது!

முதல் குழந்தை பிறந்தவுடனும் இவ்வாறு ஊர்ச்சீனியிடும் பழக்கம்இருந்தது. ஒவ்வொரு குடும்பத்துக்கும் கொடுக்கும் சர்க்கரை, பிறந்த குழந்தையின் எடை அளவு இருந்தது. அத்தகைய பழக்கம் மஹாராஷ்டிரத்தில் சில சமூகங்களில் இன்றும் நிலவுகிறது. மீண்டும் மீண்டும் குழந்தையைத் தராசில் நிறுத்தி ஊர் முழுவதும் சர்க்கரையை வழங்குகிறார்கள்.

**10. வடித்துப் போடுதல் :**

ஏழை எளியவர்க்குத் திருமண நினைவாக ஒரு வேளை வடித்துப் போடும் வழக்கும் திருமண நிகழ்ச்சி நிரலில் ஒரு பகுதி. சில குடும்பங்கள் இன்னும் இப்பழக்கத்தைக் கடைப்பிடிக்கின்றனர்.

**11. மாப்பிள்ளை வீட்டார் வருகை :**

சுவாமிக்குப் படைத்த மறுநாள் மாப்பிள்ளை வீட்டார் தங்கள் ஊரிலிருந்து பெண் வீட்டு ஊருக்கு வருவார்கள். மணமகன் வந்து இறங்கி விட்டதை அறிவிக்க அதிர் வேட்டு வெடிக்கப்படும். வேட்டு ஒலி கேட்டதும் பெண்வீட்டார் முறைப்படி அவர்களை வரவேற்பார்கள். கோவிலில் அல்லது கோவிலைச் சார்ந்த ஒரு பொது மன்றத்தில் இந்த வரவேற்பு நடைபெறும்.

பெண் வீட்டைச் சேர்ந்த முதிய ஆடவர் ஒருவர் மணமகனுக்கு மோதிரம், கழுத்துச் சங்கிலி, கைக்கடிகாரம், சரிகை வேட்டி, பூமாலை முதலியன அணிவித்து அவர் நெற்றியில் திருநீறு பூசி வாழ்த்துவார்.

இதனைத் தொடர்ந்து பெண் வீட்டார் மணமகனையும் அவரைச் சார்ந்தவர்களையும் மங்கல வாத்தியங்கள் முழங்க, வாணங்கள் வெடிக்க, அவர்கள் தங்குவதற்காக ஏற்பாடு செய்யப் பெற்ற மாளிகைக்கு அழைத்துச் செல்வார்கள். (இந்நாளில் திருமணம் நடைபெறும் பெண் வீட்டுக்கே அழைத்து வந்து விடுகிறார்கள்.)

**12. சீர்வரிசை :**

பெண் வீட்டார் பெண்ணுக்குத் தங்கம், வெள்ளி, எவர்சில்வர், வெண்கலம், பித்தளை, செம்பு, மரம், மங்கு, கல் முதலிய பல வகைகளில் ஒவ்வொன்றிலும் அடுக்கடுக்காகவும் விதம் விதமாகவும் பொருள்கள் அன்பளிப்பார்கள். இருவருக்கும் ஆடைகள், படுக்கைக் கட்டில், பஞ்சு மெத்தை, அலங்காரப் பொருள்கள் ஆகியவையும் இருக்கும். வாழ் நாள் முழுவதும் செல்வச் செழிப்புடன் மணமக்கள் வாழ வசதியாக, இங்கு இல்லாதது இல்லை என்று எண்ணுமபடி எல்லாப் பொருள்களும் வைக்கப்பட்டிருக்கும். அவர்களுக்குப் பிறக்கும் குழந்தைகளுக்கு வேண்டும் விளையாட்டுச் சாமான்கள் சீர்வரிசையில் இடம் பெறும். பெண் குழந்தை பிறந்தது முதல் இவற்றைச் சேர்க்கும் பணியில் நாள்தோறும் நாழிகைதோறும் பெற்றோர்கள் ஈடுபடுவர். பொருள்கள் அடுக்கப்பட்டிருக்கும் முறை வரிசையாயும் கவர்ச்சியாயும் இருக்கும். செட்டி நாட்டுக்கு முதல் தடவை வருபவர்கள் திருமண வீட்டிற்குப் பதிலாக ஏதோ பொருட் காட்சிக் கூடத்திற்குள் வந்து விட்டோமோ என்று ஐயப்படுவார்கள்.

**13. உப்பு :**

திருமணத்திற்கு முந்திய இரவு பெண் வீட்டார் மணமகன் வீட்டில் ஒரு மூட்டை உப்பு கொண்டு போய்ப் போடுவர் பழங் காலத்தில் நகரத்தார் உப்பு வணிகராய் இருந்ததற்கு இது சான்று.

**14. மாப்பிள்ளை அறிதல் :**

திருமணத்தன்று அதிகாலையில் பெண் வீட்டார் அனுப்பும் நாவிதன் மாப்பிள்ளைக்கு முகச் சவரம் முதலிய யாவும் செய்வார். உடனே தெரிவிக்க வேண்டிய முக்கியமான உடற் கோளாறு எதுவும் இருப்பின் பெண் வீட்டார்க்கு அவர் அறிவிப்பார்.

**15. கூறை கொடுப்பது :**

மாப்பிள்ளை வீடடார் மணச்சடங்கின் போது திருமணப் பெண்ணுக்குச் சேலை வழங்குவர். இதற்குக் கூறை கொடுத்தல் என்று பெயர். கூறை நாட்டுச் சேலை கொடுத்ததால் இப்பெயர் ஏற்பட்டிருக்கலாம். கூறை கொடுப்பதென்பது தாலி கட்டுவதற்குச் சமமானது. தாலி கட்டுவது பிற்கால வழக்கமாய் இருக்கலாம்.

**16. காப்புக் கட்டுதல் :**

மங்கல நிகழ்ச்சிகளில் அந்நிகழ்ச்சிக்கு உரியவர்கள் கையில் காப்புக் கட்டுவது வழக்கம். நிகழ்ச்சி தொடங்கும்போது, இக் காப்புக் கட்டப் பெற்று, நிகழ்ச்சி முடிவடைந்த பின்னர் அவிழ்க்கப் பெறும். அகநானூற்றில் திருமணத்தன்று நிகழும்

நிகழ்ச்சிகளை விவரிக்கும் பாடலில் அறுகம்புல் தண்டுகளால் வெள்ளி நூலிற் கோத்த ஒரு காப்புக் கட்டப் பெற்றதாக வருகிறது. கீழ் வருமாறு கூறப்பட்டுள்ளது.

''மெல்லிய பூவையுடைய வாகையின், சிறிய புறத்தையுடைய, கவர்த்த வாகை இலையையும், பள்ளத்தில் படர்ந்ததும், முதன் மழைக்குத் தழைத்ததும், நீலமணி போலும் நிறமுடையதுமாகிய அறுகினது பாவை போலும் கிழங்கிடத்துள்ள தண்ணிய நறுமணமுள்ள அரும்பையும் சேரக் கூடிய வெள்ளிய நூலைக் காப்பாகச் சூடுவர்'' (அகம். 136)

### 17. மணமக்களை வாழ்த்தும் முறை :

பூவும் நெல்லும் கலந்து மணமக்களை வாழ்த்தும் முறை இன்றும் நகரத்தார்களின் திருமணங்களில் இருந்து வருகிறது. ''நெல்லொடு தூஉய்'' என்னும் அகநானூற்றுப் பாடலில் இது கூறப் பெற்றிருக்கிறது.

மணவிழாவில், மணமக்கள் தலையில் அட்சதை, நெல், அறுகம் பூ(புல்) ஆகியவற்றைப் போட்டு அறுகிடுதல் இன்றும வழக்கமாக இருந்து வருகிறது. 'மங்கைக்கு அறுவிட வந்திருந்தார மணப்பந்தலில்' என்ற ஔவையார் பாடலை இங்கு நினைவூட்டலாம்.

### 18 மணமிடுதல் :

பூவையும நெல்லையும் கொண்டும் மணமக்களைத் தொட்டு, நெருங்கிய உறவினர்கள் வாழ்த்துதல் இன்றும் செட்டிநாட்டில் வழக்கமாக இருக்கிறது. இதைப பூமணமிடுதல், அரிமணமிடுதல் என்று கூறுவர். 'அரி' என்பது அரிசி என்ற பொருளில் சங்க இலக்கியத்தில் ஆளப் பெற்றிருக்கிறது களத்தில் அறுவடையாகும்போது முதலில் தெய்வத்திற்கு 'அரி' எடுத்து வைத்து வணங்குவார்கள். அரி என்பது நெல்லைக் குறிக்கும். மணம் என்பது பூவைக் குறிக்கும். இரண்டையும் கூட்டி வாழ்த்துதல் வளமும், இன்ப வாழ்வும் பெறுக என்பதற்கு அடையாளம். அகநானூற்றில் :

''நீரொடு சொரிந்த ஈரிதழ் அலரி
பல்லிருங் கறுப்பின் நெல்லொடு
தயங்க'' (அகம்: 86).

நீரில் நனைத்துச் சொரிந்த புதுமலர்களும் நெல்லும் மணமகளின் கூந்தலில் விளங்க வாழ்த்தினர் என்பதுதான் இதன் பொருள்.

### 19. முளைப் பாலிகை :

''மாமுது பார்ப்பான், மறைவழி காட்டிடத் தீவலம் செய்து'' கோவலன் கண்ணகி திருமணம் நடைபெற்றது. இன்றும் அம்முறை வழக்கிலிருக்கிறது. அதற்கும் மேலாகக் கண்ணகி திருமணத்தை வாழ்த்திய மகளிர் கைகளில் ''விரித்த பாலிகை முளைக் குடி நீரையும்'' இருந்தது போல நகரத்தார் திருமணங்களில், இன்றும ''முளைப்பாலிகை'' மணமக்களுக்கு அருகே இருக்கிறது. காலம் மாறுதல் உண்டு; எனினும் மூலம் மாறவில்லை.

### 20. வள்ளுவப் பை :

மாப்பிளளை அழைப்பு முதல் மண நிகழ்ச்சி முறறுப் பெறும் வரை மாப்பிள்ளை ஒரு பையைத் தோளில் போட்டுக் கொண்டு செல்லுதல் வழக்கம். அதன் பெயர் வள்ளுவப்பை. இதில் ஒரு சிறப்பு இருப்பதாகத் தெரிகிறது. 'வரை விடை வைத்துப் பொருள் வயிற்பிரிதல்' என்பது அகத்திணை மரபுகளில் ஒன்று. காதலித்த பெண்ணை மணப்பவன் தானே பொருள் தேடி வந்து மணக்க வேண்டும் என்பது பழங்காலச் சமுதாயப் பழக்கம். அங்ஙனம பொருள் சேர்த்து வந்ததற்கு அடையாளமாகத்தான் இன்னும் இப்பையை இக்கால மணமகன் சுமக்கிறான் போலும்.

### 21. வேவு எடுத்தல் :

சீர் வரிசைகளை, ஊர்வலம் போலக் கூலியாட்களின் தலையிலேற்றிக் கொண்டு செல்லுதலை இன்று ''வேவு எடுத்தல்'' என்ற சடங்காகக் குறிப்பர். ஆடி வேவு, கார்த்திகை வேவு, பொங்கல் வேவு, பிள்ளையார் நோன்பு வேவு, மாம வேவு என இவை பலவகை பெண் வீட்டார் மாப்பிள்ளை வீட்டார்க்குக் கொண்டு செல்வனவும், மாமன் முறையினர் தம் தங்கை தமக்கையரின் விசேடங்களுக்கு அலுவல்கட்குக் கொண்டு செல்வனவும் ஆகிய சீர்வரிசைகளை இது குறிக்கிறது. எப்படிப் பார்த்தாலும் மாப்பிள்ளை வீட்டார்க்கே வருமானம் என்ற ''பொருட் சிறப்பை''ப் போற்றுபவர்கள் இதன் உட்பொருளையும் அறிதல் நலமாகும். தமது

பெண் சென்ற இடத்தில் சிறப்போடு வாழ, அவளுக்குத் தந்தை சொத்தில் பங்கில்லை என்ற உரிமைக்குறையைஅகற்ற, அவளுடன் பிறந்த ஆண்மக்கள், அவள் வீட்டில் நடைபெறும் ஒவ்வொரு விசேடத்திற்காகும் அனைத்து உணவு வகைகளையும் தலைத்தூக்காகத் தாமே தம ஊரிலிருந்து தூக்கிச் செல்வது தொன்மையான பழக்கம். பின்னர் கூலியாட்களைக் கொண்டு தூக்கிச் சென்றனர். இன்றைய வேவுச் சடங்குகளில் வேவு இறக்குதலையும் கவனித்தால் இதன் சிறப்பு விளங்கும்.

வேவு எடுக்கும் போது, வேவுப் பொருள்களை அன்பளிக்கும் குடும்பத்தைச் சேர்ந்த ஆண்மக்கள் அனைவரும் வயது முறைபபடி ஒவ்வொருவராகத் தலையில் கடகம் அல்லது ஓலைப்பெட்டியை வைத்து, பெண்மகள் வீட்டாரிடம் கொடுப்பர். ஆண்மக்களுள் பிறந்த குழந்தை கூட வேவு எடுப்பது வாழையடி வாழையாக வந்துள்ள வழக்கம். இதில் அடங்கியுள்ள தத்துவம், 'என்னுடன் பிறந்த அல்லது என் தந்தையுடன் பிறந்த பெண்மக்களுக்கு வேண்டும் உணவுப் பொருள்களை என் இறுதி மூச்சுவரை நான் கொடுப்பேன்'' என்பதை இளஞ் சிறார்க்கு வலியுறுத்துவதாகும்.

### 22 அணிகலன்கள் :

திருமணத்தின் சின்னமாக விளங்குவது தாலி. நகரத்தாரில் மணப்பெண் அணியும் தாலிக்கு 'ஐம்படைத்தாலி' என்று பெயர். காத்தற் கடவுளாகிய திருமாலுடைய ஐந்து ஆயுதங்கள் போலப் பொன்னாற் செய்யப்படுதலின், இது இப்பெயர் பெற்றது சங்கு, சக்கரம், கதை (கதாயுதம்), கடகம், வில் (சாரங்கம) என்பவற்றின் வடிவமாக இது அமைக்கப்பெற்றது எத்தனை பவுன் உடைய தாலியாயிருந்தாலும் நூற் கயிற்றில் மஞ்சள் தடவி அதிலேயே தாலியின் உறுப்புக்களைக் கோப்பது வழக்கம்.

நகரத்தார் பெண்மக்கள் விசேட காலங்களில் யாழ்ப்பாணம் மாதர்கள் போன்றும் காதுக்குக் கொப்பு என்னும் அணிகலனையும், 'முடிச்சுக் கடுக்கன்' என்ற சவடியையும், 'பிறைத் தேவி' என்னும் தலையணியையும், தங்கமணியும் பவளமுஞ் சேர்ந்த மணிக் கோவையையும், வெள்ளியாற் செய்த ''இடைஞ்சூரி''யையும், தங்க மணிகளும், பவளங்களுஞ் சேர்ந்த கைக்கட்டையும். காலிலும் கையிலும் வெள்ளி மோதிரங்களையும், வெள்ளிக் கங்கணக் காப்புகளையும் அணிந்து கொண்டிருந்தார்கள் என்று மகா மகோபாத்தியாய பண்டிதமணி கதிரேசச் செட்டியார் அவர்கள் ஒரு நூலில் குறிப்பிட்டுள்ளார்கள்.

### 23. இசைவுப் பிடிமானம் :

திருமணச் சடங்கு முடிந்தவுடன் இரு வீட்டாரும் ஓர் உடன்படிக்கை எழுதிக் கொள்வர். மணமகனின் தந்தை மணமகளின் தந்தை ஆகியோரும் அவரவர்களின் பங்காளிகளும் இதில் கையெழுத்திடுவர். இவர்கள் கொடுத்த சீர்வகைகள் இதில் இடம்பெறும்.

திருமணம் நடைபெற்றதற்கு அத்தாட்சியாக இருக்கும் இந்த ஆதாரம் கல்வெட்டுத் தமிழ் நடையில் அமைந்திருக்கிறது. சோழ பல்லவ கால நாணயங்களும இதில் குறிக்கப் பெறுகின்றன.

### 24. குதிரை ஏறுதல் :

மணமகன் குதிரை மீதேறி, பெண் வீட்டுக்கு வருவது வழக்கம திருமணச் சடங்கு முடிந்ததும குதிரை மீதே மணமகன் ஊர் முழுவதும் ஊர்வலமாக அழைத்துச் செல்லப்படுவார். ஊரிலுள்ள அனைவருக்கும் மணமகனை அறிமுகப்படுத்துவதற்காக இந்த ஏற்பாடு. வீடுதோறும் அவருக்கு ஆரத்தி எடுத்து ஊ வர் வாழ்த்துவர்.

### 25. பெண் எடுக்கிக் காட்டுதல் :

திருமணப் பெண்ணை முதல் தடவையாகத் திருமண நாளில்தான் பார்க்கும் வாய்ப்பு முன்னாளில் இருந்தது மணமகளின் அத்தைமார் பெண்ணை அலங்கரித்து வீட்டு வாயிலில் உறவினர்கள் புடைசூழ, குதரை மீது இருக்கும் கணவன் பார்க்குமபடியாக இரண்டு நிமிடங்களுக்கு நிறுத்துவார்கள்.

குழந்தைத் திருமணம் நிகழ்ந்த காலத்தில் அத்தைமார் மணப்பெண்ணைத் தம கைகளால் தூக்கிக் காட்டினர். எனவே இப்பெயர் ஏற்பட்டது.

முறைப்படி பெண், தன் அத்தை மகனுக்கே உரியவள். வெளிக் குடும்பத்தில் அவளைக் கொடுப்பதில் தங்களுக்குத் தடையில்லை என்பதை அறிவிக்கவே, அத்தைக்கு இந்தச் சடங்கு, திருமண நாளில் ஏற்படுத்

தப்படுகிறது. மாமனும் இவ்வாறு தன் உரிமைப் பெண்ணை விட்டுக் கொடுப்பதை ஊர் அறிய அவன் மாமச் சடங்கு செய்ய வேண்டும். பெண் எடுக்கிக் காட்டுவதும் மாமச்சடங்கு செய்வதும் No Objection Certificate போன்றவை.

***26. மஞ்சள் நீர் :***

உபசரிப்பிலும், கொடுக்கல், வாங்கல் சிக்கல்களிலும் நெருங்கிய உறவினர்களின் தொண்டைகள் திருமண காலத்தில் வறண்டு விடும். எனவே மணமக்களுக்கு எண்ணெய் தேய்த்து மஞ்சள் நீராட்டும போது வந்திருக் கும் எல்லோரும், வடநாட்டில், ஹோலி பண்டிகையில் தெளிப்பது போல ஒருவர் மீது ஒருவர் மஞ்சள் நீரைத் தெளித்துக் கொள்வர்.

***27. திருவாதிரை :***

பருவமடைந்த பெண்களுக்கு திருவா திரை என்னும் சடங்கைச் செய்யும் பழக்கம் நகரத்தாருள் உண்டு மணிமேகலையால் உயர்ந்தவள் என்று கருதப் பெற்ற ஆதிரை போல, தம் குலத்து மகளிரெல்லாம் விளங்க வேண்டு மென்பது இவ்விழாவின் கருத்துப் போலும். மணிமேகலை, பாத்திரம் பெற்ற வுடன் பத்தினிப் பெண் ஒருத்தியிடம் முதலில் பிச்சை பெற வேண்டுமென்ற நியதியை அறிந்து, ஆதிரை என்பவளிடம் பிச்சை கேட்டாள் "பாரக மடங்கலும் பசிப்பிணியறுக" என்று சொல்லி அவளிடட பிச்சை பெருகி உலகப் பிணியை நீக்கிற்று. அவ்வாறே இப்போது "திரு ஆதிரை" செயது கொள்ளும் பெண்கள் வீடு வீடாகச் சென்று,

"ஆடி ஆடி வாரோம் அவரக்காய்
போடுங்க
பாடிப் பாடி வாரோம் பாடவரங்காய்
போடுங்க
கூடிக்கூடி வாரோம் கொத்தவரங்காய்
போடுங்க"

என்று இன்னும் உணவுப் பொருள்களையே விரும்பிக் கேட்டு வருகின்றனர். இந்த விழா ஆண்டுதோறும் மார்கழித் திருவா திரை நாளில் நடைபெறும். எதிர்கால மணமகளை விளம்பரப் படுத்தும் நாளாக இது அமைகிறது. திருவாதிரைச் சடங்கு நடைபெற்ற பெண்ணையே திருமணம் செய்வது 1942 வரை வழக்கமாயிருந்தது.

***28. மொய்ப்பணம் :***

திருமணத்தில் கலந்து கொள்ளும் பங்காளிகளும் உறவினர்களும் பணம் எழுது வர். மாமக்காரர் மட்டுமே கணிசமான தொகை நன்கொடை கொடுப்பார். ஏனை யோர் பெயரளவுக்கு ஒரு மிகச் சிறு தொகை கொடுப்பர்.

மொய்ப்பணம் எழுதுவதன் நோக்கம் வருவாயக்கு அல்ல; திருமணத்திற்கு யார் யார் வந்திருந்தனர் என்பது பிற்காலத்திற் குத் தெரிய உதவும் வருகைப் பட்டியலே. வர உரிமையுள்ள நெருங்கிய உறவினர் வராதிருந்து விட்டால் அவர் பெயரை எழுதிப் பணம் போடாமல் விட்டு விடுவர்.



விட்டுக் கொடுப்பவன் கெட்டுப் போவதில்லை
கெட்டுப் போகிறவன் விட்டுக் கொடுப்பதில்லை.

"பழமொழி"

# இலுப்பைக்குடியில் திருக்குட நன்னீராட்டு விழா

நகரக் கோயில்களுள் ஒன்முன இலுப்பைக்குடிக் கோயிலின் திருக்குட நன்னீராடடு விழா 8—2—85 வெள்ளியன்று பகல் சுமார் 12-40 மணி அளவில் சிறப்பாக நடைபெற்றது.

3—2—85 அன்று யாகசாலை தொடங்கப்பெற்று 6 நாட்கள் சிறப்புற நடைபெற்றது.

சுவாமிக்கு (தான்தோன்றி ஈசுவரர்) 9 ஓம குண்டங்களும் அம்பாளுக்கு (சௌந்தரநாயகி) 9 ஓம குண்டங்களும் வயிரவருக்கு 9 ஓம குண்டங்களும் பரிவார தெய்வங்களுக்கு 12 ஓம குண்டங்களும் ஆக 39 ஓம குண்டங்கள் வைக்கப் பெற்றிருந்தன.

சர்வ சாதகம் சிவாகம ஞான சாகரம் திருக்கோலக்கா இராமநாத சிவாச்சாரியார் அவர்கள் தலைமையில் கோனேரிராஜபுரம் திருவாவடுதுறை, மயிலாடுதுறை மற்றும் பல ஊர்களிலிருந்து சுமார் 60 சிவாச்சாரியார்களும் வேதபாராயணர்கள் 9 பேரும் தேவார மூர்த்திகள் 10 பேரும் திருக்குட நன்னீராடடு விழாவில் பங்கு கொண்டு சிறபபித்தனர்.

தமிழக இந்து அறநிலையத்துறை ஆணையாளர் கு. ஆளுடையா பிள்ளை அவர்களும் பாகுரக்குடி மடாலயக் குரு ஸ்ரீ ரவீந்திரநாத சுவாமிகளும் கலந்து கொண்டு சிறப்பித்தனர்.

இக் கோயிலின் ராஜகோபுரம் புதிதாகத் திருப்பணி செய்யப்பெற்றது. லெட்சுமி நாராயண சுவாமிகளின் (மகாவிஷ்ணு) சிலை நின்ற திருக்கோலத்தில் புதிதாக பிரதிஷ்டை செய்யப் பெற்றது.

விழாவிற்கான ஏற்பாடுகளை ஒக்கூர் சிக. அரு. சோம. இராமநாதன் செட்டியார் அவர்களைத் தலைவராகக் கொண்ட குழுவினர் சிறப்புறச் செய்திருந்தனர்.

திருக்குட நன்னீராட்டு விழாவையொடடி கலை, இலககிய இசை நிகழ்ச்சிகள் ஏற்கனவே அறிவிக்கப் பெற்றபடி சிறப்புற நிகழ்ந்தன.

விழாவிற்கு வந்திருந்த பொது மக்களுக்கு விழாக் குழுவினர் சகல ஏற்பாடுகளையும் சிறப்புறச் செய்திருந்தனர்.

சாப்பாட்டிற்கென விழாக் குழுவினர் நிறுவியிருந்த மூன்று சாப்பாட்டுக் கொட்டகைகளும, மூன்று 'டூரிங் டாக்கீஸ்'களாகக் காட்சி தந்தன.

—'நகரத்தார் குரல்'

## யாகங்கள்

ஸ்ரீசௌந்தரநாயகி யாகம்
தான்தோன்றீஸ்வரர் யாகம்
ஸ்ரீ வயிரவமூர்த்தி யாகம்
சுயம்பிரகாச விநாயகர் யாகம்
சண்டிகேஸ்வரர் யாகம்
பரிவார விமான யாகம்
மகாலெட்சுமி யாகம்
விஸ்வநாதர் யாகம்
சுப்பிரமணியர் யாகம்
நவக்கிரக யாகம்
மகாவிஷ்ணு யாகம்
உற்சவமூர்த்தி யாகம்
ராஜகோபுர யாகம்
தட்சிணாமூர்த்தி யாகம்
சுந்தர விநாயகர் யாகம்

(இலுப்பைக்குடிக் கோயில் திருக்குட நன்னீராட்டு விழாவையொட்டி இலுப்பைக்குடியில் அமைக்கப்பெற்ற யாகங்கள் இவை.)

—'எல்லெஸ்'

பழி வாங்கும் பசியையும் பல சுவை உணவையும்
பதறுமல் கொள்ள வரம் தா

- கவிஞர் கண்ணதாசன்

# நவ மணிகளின் சிறப்பு

சி. வீர. ராமனுதன் என்ற சேவுகஞ்செட்டியார்

அன்னை ஒருத்தி தன்னுடைய இளம் குழந்தையைத் தொட்டிலில் இட்டு தாலாட்டுகிருள். இது தமிழ் நாட்டு வழக்கம். அப்படியே இந்த தாயும் தாலாட்டுப் பாட்டு ஒன்றைப் பாடிக்கொண்டே தொட்டிலே ஆட்டிக்கொண்டு இருக்கிருள். குழந்தையும் அவளுடைய இனிய பாட்டின் இசையில் தன்னை மறந்து உறங்கத் தொடங்குகிறது. அவள் பாடும் பாட்டை நாமும் கேட்போம்.

'கொட்டி வைத்த முத்தே !
குவித்த நவ ரத்தினமே !
கட்டிப் பசும் பொன்னே !
கண்மணியே ! கண்வளராய் '

இப்பாட்டில் தன் குழந்தையினுடைய அருமையை அவள் தெரிவிக்கிருள். தன்னுடைய அருமை மைந்தனைக் 'கொட்டி வைத்த முத்தே' என்றும், 'குவித்த நவரத்தினம்' என்றும், 'கட்டிப் பசும் பொன்' என்றும் பாராட்டி இந்த அன்னை பாடுகிருள். இறைவனுடைய திருவருளால் தனக்குக் கிடைத்த அந்தக் குழந்தைக்கு உவமையாக உலகில் வள வாழ்வுக்குரிய சில பொருள்களைச் சொல்கிருள்.

நவமணிகளின் பிறப்பிடம் இரண்டு. நீரில் பிறப்பவை, நிலத்தில் பிறப்பவை என்று சொல்லலாம். முத்தும் பவளமும் நீரில் பிறப்பவை. மற்றவை யாவும் நிலத்தில் பிறப்பவை. மேல் நாட்டில் இந்த நவரத்தினங்களை மதிப்பு உயர்ந்த கற்கள் (PRECIOUS STONES) என்று இவற்றை சொல்வது வழக்கம். மணிகள் (GEMS) என்றும் சொல்வார்கள். நாமும் மணிகளை கல் என்று சொல்லுகிறோம்.

## நவமணிகள் ஒன்பது

| | | |
|---|---|---|
| வைரம் | — | DIAMOND |
| முத்து | — | PEARL |
| மரகதம் | — | EMERALD |
| மாணிக்கம் | — | RUBY |
| நீலம் | — | SAPPHIRE |
| புட்பராகம் | — | TOPAZ |
| வைடூரியம் | — | CAT'S EYE |
| கோமேதகம் | — | ZIRCON |
| பவளம் | — | CORAL |

என்பவையாகும்.

நவமணிகளில் தலை, இடை, கடை என்ற வகையுண்டு. வைரம், முத்து, மாணிக்கம், மரகதம் ஆகிய நான்கும் தலைமணிகளாவன. நீலம், புட்பராகம், வைடூரியம் ஆகிய மூன்றும் இடைமணிகளாவன. கோமேதகம் பவளம் இரண்டும் கடை மணி களாவன. நவரத்தினங்களை மஹாரத்தினம் உபரத்தினம் என்று இருவகைப் படுத்துவதும் உண்டு. மஹாரத்தினங்கள் ஐந்து. அவை முத்து, வைரம், மாணிக்கம், நீலம், மரகதம் என்பன. இவற்றை பஞ்சரத்தினம் என்று சொல்வதும் உண்டு. ஒன்பது ரத்தினங்களில் இவை ஐந்தும் மிகவும் சிறப்பு பெற்றவை. ஏனைய நான்கும் உபரத்தினம் என்ற பகுப்பில் அடங்கும்.

## ஒன்பதின் உயர்வு

ஒன்பது என்ற பகுப்பு இந்த நாட்டின் பல பொருள்களுக்கு அமைந்துள்ளது. சிவபெருமான் ஒன்பது வகையான உருவங்களுடன் விளங்குகிறார் என்றும், அவற்றுக்கு நவந்தருபேதம் என்று பெயர் என்றும் சாத்திரங்கள் கூறுகின்றன. பிரம்மா, விஷ்ணு, உருத்திரன், மகேசுரன், சதாசிவம், சிவம், சத்தி, நாதம், விந்து என்பவை அவை.

உலகத்தை ஒன்பது கண்டங்களாக பிரித்து அவற்றை நவகண்டம் என்று தொகுத்து கூறுவது வழக்கு. அவை பரதகண்டம் ஏமகூடகண்டம், நிஷதகண்டம், இரை விருதகண்டம், நீலகண்டம், சுவேதகண்டம், குருகண்டம், பத்ராச்வகண்டம், கேதுமால கண்டம் என்பவை அவை.

அநாதிநாதர், ஆதிநாதர், கடேந்திரநாதர், கோரக்கநாதர், சதோகநாதர், சத்திய நாதர், மச்சேந்திரநாதர், மதங்கநாதர், வகுளிநாதர் என்று சித்தர்களில் நவநாத சித்தர் கள் இருந்துள்ளார்கள்.

இதுபோன்று மேகங்களில் சிறப்புடையன ஒன்பது. அவை ஆவர்த்தம், சம்வர்த்தம், புட்களம், துரோணம், நீலம், கானம், வாருணம், வாயுவம், தமம் என்பன.

நாகங்களில் நவநாகம் ஒன்பது. அவை அனந்தன், ஆதிசேடன், கார்க்கோடன், குளிகன், சங்கபாலன், தக்கன், பதுமன், மகாபதுமன், வாசுகி என்று பெயர்,

இதுபோன்று தர்மங்களை அமுதயீதல், அருச்சித்தல், ஆசனத்திருத்துதல், எதிர் கொளல், தாள்கழுவுதல் தீபங்காட்டல், தூபங்கொடுத்தல், பணிதல், புகழ்தல் என்பதாக நவபுண்ணியம் என்று சொல்வது.

இந்த ஒன்பது என்ற தொகுப்புக்குள்ள பெருமையை விளக்கிட காரணம் இந்த வரிசையில் நவக்கிரகமும் நவரத்தினமும் உள்ளது என்பதாலாகும். இதிலிருந்து நவம் என்பது மிகவும் சிறப்பு பெற்றிருப்பது என்பது புலப்படும்,

நவரத்தினங்களை சுவாமிகளை பிரதிஷ்டை செய்யும்போது விக்கிரகங்களுக்கு அடியில் போடுவதும், வீடுகள் கட்டும்போது நிலைப்படியின் அடியில் போடுவதும் மேலும் அபிஷேக கலசங்களிலும் போடுகிறார்கள். இதிலிருந்து நவரத்தினங்கள் மிகவும் ஜீவசக்தி உடையது என்பது நன்கு புலப்படும்.

## நவரத்தினமும் — நவக்கிரகமும்

ஒன்பது நவரத்தினமும் ஒன்பது கிரகங்களுடையவை. நவரத்தினங்களை வழிபட்டால் நவகிரகங்களை வழிபடும் பயனை பெறலாம்.

மாணிக்கம் சூரியனுக்கும், முத்துக்கள் சந்திரனுக்கும், பவளம் செவ்வாய்க்கும். மரகதம் புதனுக்கும், புட்பராகம் குருவுக்கும், நட்சத்திரம் போன்ற ஒளியுடைய வைரம் சுக்கிரனுக்கும், நீலம் சனிக்கும், கோமேதகம் ராகுக்கும், வைடூரியம் கேதுக்கும் மகிழ்ச்சியை உண்டாக்கும்.

குற்றமற்ற நவரத்தினங்களை அணிபவர்களுக்குச் செல்வம், வண்மை, புகழ், நீண்ட ஆயுள் ஆகிய நான்கும் மிகும்.

ஜாதகத்தில் கிரகங்களின் அமைப்புக்கு ஏற்றபடி அந்தந்த கிரகபலன்களுக்கு உரிய ரத்தினங்களை அணிந்து கொள்வதால் கிரகத்தின் தீமை நீங்கி நன்மையை பெறலாம். நவரத்தின மோதிரம் அணிந்து கொள்வது மிகவும் நல்லது. நவரத்தின லிங்கங்கள் அமைத்து பூசிப்பதால் நல்ல பயன் உண்டாகும். கீழ்க்கண்ட லிங்கங்களுக்கு கீழ்க்கண்ட பயனை பெறலாம்.

| | | |
|---|---|---|
| மரகத லிங்கம் | — | புஷ்டி |
| பதுமராக லிங்கம் | — | பொருள் |
| வைடூரிய லிங்கம் | — | நீண்ட ஆயுள் |
| பளிங்கு லிங்கம் | — | மக்கட்பேறு |
| பவள லிங்கம் | — | இராசவசியம் |
| வைர லிங்கம் | — | வசதி, சக்தி |
| மாணிக்க லிங்கம் | — | சர்வ சித்தி |
| நீல லிங்கம் | — | மோட்சம் |
| புட்பராக லிங்கம் | — | பகைமை ஒழியும் |

# நவரெத்தின மோதிரத்தில் அமைக்கும் முறை

| | | |
|---|---|---|
| (வடமேற்கு) புட்பராகம் குரு | (வடக்கு) வைடூரியம் கேது | (வடகிழக்கு) மரகதம் புதன் |
| (மேற்கு) நீலம் சனி | மாணிக்கம் சூரியன் | (கிழக்கு) வைரம் சுக்கிரன் |
| கோமேதகம் ராகு (தென்மேற்கு) | பவளம் செவ்வாய் (தெற்கு) | முத்து சந்திரன் (தென்கிழக்கு) |

மக்களில் பெரும்பான்மையானவர்களுக்கு நவரத்தினங்களின் தோற்றம், அமைப்பு, பயன் ஆகியவைபற்றித் தெரிந்திருக்க முடியாது. ஆகவே நம் முன்னோர்கள் எழுதிவைத்துள்ள பல விவரங்களை தொகுத்து விளக்கியிருக்கிறது.

இதன் மூலம் பலரும் நவரத்தினங்களைப்பற்றி நன்கு தெரிந்துகொண்டு பயன் அடைய வேண்டுகிறேன்.

நன்றி

---

# நகரத்தார் வரலாற்று செய்திகள்

ஆதியில் நகரத்தார் நாக நாட்டில் இருந்து கலியுகஞு 204ல் காஞ்சிபுரம் வந்து அங்கிருந்து மேற்படி வருடம் 2312ல் காவிரிப்பூம்பட்டினம் வந்து அங்கிருந்து மேற்படி வருடம் 3808இல் பிலவங்க ஞு வைகாசி மீ" 21உ சுக்கிர வாரம் பாண்டிய தேசம் வந்து சேர்ந்தனர்.

| | | |
|---|---|---|
| கலியுக ஞு | 3808ல் | இளையாற்றங்குடிக் கோவிலும் |
| ,, | 3813ல் | மாத்தூர்க் கோவிலும் |
| ,, | 3813ல் | வயிரவன் கோவிலும் |
| ,, | 3815ல் | இலுப்பைக்குடி கோவிலும் |
| ,, | 3815ல் | இரணியூர்க் கோவிலும் |
| ,, | 3815ல் | பிள்ளையார்பட்டிக் கோவிலும் |
| ,, | 3815ல் | நேமம் கோவிலும் |
| ,, | 3819ல் | சூரைக்குடிக் கோவிலும் |
| ,, | 3819ல் | வேலங்குடிக் கோவிலும் |

ஆக ஒன்பது கோவில் நகரத்தார் எனப் பெயர் வழங்குகிறது.

இப்பொழுது கலியுக ஞு 5085 பாண்டிய நாட்டுக்கு நம் நகரத்தார் வந்து 1277 ஞு ஆகிறது.

---

# இருதய நோய்

திரு. ட. சண்முகம் செட்டியார்

முற்காலத்தில் 'மாரடைப்பு' நோயை முற்றும் நீக்க இயலாமல் பலர் ''சிரமப் பட்டார்கள்.'' ஆனுல், இன்றைய நவீன விஞ்ஞானிகள் மாரடைப்பை நீக்கும் புதிய மார்க்கங்களை—மருத்துவங்களைக் கண்டறிந் திருக்கிறுர்கள்! ஒரு கைப்பிடி அளவே இருக்கும் இருதயம் நமது உடலுக்குள் நல்ல இரத்தத்தை எல்லா உறுப்புகளுக்கும் பாயச் செய்கிறது. அதேபோல எல்லா உறுப்பு களிலிருந்தும் சுத்தமில்லாத இரத்தத்தை இருதயத்திற்குக் கொண்டு வந்து சுத்தம் செய்யும் பணியையும் செவ்வனே செய்து வருகிறது. உயிருக்கு உயிரான இவ் விதயத்தைப் பாதுகாக்க நாம் புதிய மார்க் கங்களைத் தெரிந்து கொள்ள வேண்டும்.

மனித இருதயம் கருவில் உருவாகத் தொடங்கியதும் வடிவம் கூடப் பெருது செல் கட்டமாக இருக்கும் பொழுதே துடிக்கத் துவங்கி விடுகிறது. நன்கு வளர்ச்சியடைந்த இருதயத்தை நான்கு பகுதிகளாகப் பிரிக்க லாம். மேலும் கீழும் உள்ள அறைகள் தொடர்பு உள்ளவை. இடது புறமும் வலது புறமும் உள்ள அறைகள் ஒன்றுக் கொன்று தொடர்பில்லாதவை. இடது பக்கத்தில் நல்ல இரத்தமும், வலது பக்கத்தில் அசுத்த இரத்தமும் பாய்கிறது. இடது பக்கத் திலிருந்து மட்டும் 60 மில்லி இரத்தம் 'அயோட்டா' என்ற பிரதம இரத்தக் குழாய் மூலம் உடலுக்குள் பாய்கிறது. இருதயம் வேலை செய்வதற்கான இரத்தத்தை அது தனக்குத்தானே எடுத்துக் கொள்கிறது. இந்த இரத்தக் குழாய்களுக்குத்தான் ''கோரோனரி ஆர்ட்டரீஸ்'' (Coronary Arteries) என்று பெயர்.

எனக்கும் கடந்த 7, 8 ஆண்டுகளாக நெஞ்சிலே ஒரு சிறிய வலி எப்போதாவது வரும். சிலதினங்களுக்கு வராது. அவ்வப் பொழுது சென்னை, கோவை, கொச்சினில் மருத்துவர்களிடம் காண்பித்து மருந்து, மாத்திரைகள் சாப்பிட்டு வந்தேன். கடந்த ஒரு வருடமாக வலி சற்றுக் கூடுதலாக இருந்தது. தினமும் இரண்டு, மூன்று முறை கூட வலி ஏற்படும். எனவே, சென்னை அப்போலோ மருத்துவமனை டாக்டர் திரு. பிரதாப்ரெட்டி அவர்களிடம் காண்பித்தேன். மேற்படி டாக்டர் அவர்களும் மருந்து, மாத்திரைகள் தந்தார்கள். அதை சாப்பிடும் பொழுது மட்டும் வலி இராது.

ஒரு நாள் பம்பாய் விமான நிலையத்தில் இரவு 8 மணிக்கு வலி வந்து மற்ற நாட்களை விட மிகக் கூடுதலாக இருந்தது. மறுநாள் சென்னைக்கு வந்து டாக்டர் பிரதாப் ரெட்டி அவர்களைச் சந்தித்தேன். அவர்கள் E.C.G. and Anjiogram Test கள் செய்து ''Artery Block'' அதாவது ''தமனி அடைப்பு'' அதிக மான அளவில் இருப்பதாகவும், உடனடியாக அறுவைச் சிகிச்சைதான் இதற்குரிய ஒரே வழி என்றும் கூறி, இரண்டொரு மருத்து வர்களைக் கலந்தாலோசித்து உறுதிப் படுத்தினுர்கள்.

கோவை இருதய நோய் நிபுணர்களும் அறுவைச் சிகிச்சை செய்து கொள்வதுதான் நல்லது என ஆலோசனை கூறினுர்கள். இந்த விவரம் என் தம்பி திரு. எல். சபா ரெத்தினம் அவர்கள் மூலம் என் முதலாளி டாக்டர் M. A. M. இராமசாமி அவர் களுக்குத் தெரிய வந்தது. திடீர் என ஒரு நாள் அவர்கள் தொலைபேசியில் தொடர்பு கொண்டு ''உங்களுக்கு அறுவைச் சிகிச்சை செய்யப் போவது அமெரிக்காவைச் சார்ந்த ஹூஸ்ட்டனிலுள்ள டாக்டர் டென்டன் கூலி அவர்கள் தான்'' என்ருர்கள். எனக்கு ஒரே திகைப்பாக இருந்தது. புகழ்பெற்ற இருதய அறுவைச் சிகிச்சை நிபுணர் டென்டன்

கூலியிடம் சிகிச்சை பெற்றுக் குணமான வர்கள் சுமார் எழுபதாயிரம் பேர் என்பதை நான் அறிவேன். அத்தகு மேதையிடம் அறுவைச் சிகிச்சைக்காக அமெரிக்கா செல் வதற்கு, ஒரு வாரத்திலேயே பாஸ்போர்ட், விசா முதலியவை ஏற்பாடு செய்யப்பட்டன. டெலக்ஸ் மூலம் டாக்டர் கூலி அவர்களுடன் தொடர்பு கொண்டு அறுவைச் சிகிச்சைக் கான தேதி நிச்சயம் செய்யப்பட்டது. சென்னை விமான நிலையத்தில் பெருந்திரளாக எங்கள் சென்னை, கோவை அலுவலகங்களைச் சார்ந்தவர்கள் குடும்ப சகிதமாக வந்திருந்து என்னையும் என் தம்பி சபாரெத்தினத்தையும் நல் வாழ்த்துக்கள் கூறி அவர்கள் பயணம் செய்து வைத்த காட்சி இன்றும் என் மனதில் பசுமையாக இருக்கிறது.

குறிப்பிட்டபடி ஹூஸ்டன் சென்றோம். மருத்துவமனையில் பரிசோதனைகளுக்குப்பின் மறுநாள் காலை மயக்க ஊசிபோட்டு அறுவைச் சிகிச்சையை துவக்கினார்கள். அங்கு 12 டாக்டர்கள் கொண்ட குழு ஒன்று இருந்தது. முதலில் வலது காலில் சிறிது பிளந்தபின் மார்பு எலும்புக் கூடைப் பிளந்து இருதயத்தை துணியில் தனியாக வைத்து விட்டு, மாற்று இருதயக் கருவி மூலம் இருதய இயக்கத்தைச் சிறிது சிறிதாகக் குறைத்து முடிவில் பூரணமாகவே நிறுத்தி விட்டார் கள். இதற்கு அவர்கள் எடுத்துக் கொண்ட நேரம் 3 மணிகள். புதிதாக இணைக்கப்பட்ட மாற்று இருதயக் கருவி இரத்த ஓட்டத்தை இயக்கிக் கொண்டு இருந்தது. பின்னர் இருதயத்தில் எந்தக் குழாயில் இரத்த அடைப்பு ஏற்படுகிறது என்பதைக் கண்ட றிந்து பாதிக்கப்பட்ட அளவுக்கு வலது காலில் இரத்தக்குழாயை வெட்டி எடுத்துப் பொருத் தினார்கள். பழைய பாதிக்கப்பட்ட குழாய் அப்படியே இருந்தது. பின்னர் மாற்றுக் கருவியை நீக்கி இரத்த ஓட்டத்தை முன் போல இருதயத்துடன் இணைத்தார்கள். இதற்கும் 3 மணி நேரம் ஆகியது. இருதயம் படிப்படியாக இயங்கத் தொடங்கியது. அறுவைச் சிகிச்சை ஆண்டவன் அருளால் வெற்றிகரமாகியது. இப்படி நாள் ஒன்றுக்கு 12 முதல் 14 அறுவைச் சிகிச்சை வரை செய்கிறார்கள்.

டாக்டர் டென்டன் கூலி ஒரு நடமாடும் தெய்வம் என போற்றப்படுகிறார். சமீபத்தில் பம்பாயில் அவரை கவுரவித்து 'அவார்டு' ஒன்று கொடுக்கப்பட்டது. என் முதலாளி திரு. M. A. M. அவர்கள் இவ் வைத்தியத் திற்குச் செய்த உதவி மறக்க முடியாதது. மாயாஜாலம் போல இருக்கிறது.

நானும் முற்றும் குணமாகிவிட்டேன்! நம்மில் பலர் நெஞ்சுவலி எனும் மாரடைப்பு நோயைக் கண்டு மனோபயம் அடைகிறார்கள். அவர்களுக்கு ''யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்'' என்ற தாயுமான சுவாமி களின் நல்வாக்கைக் கூறி தக்க வைத்தியம் செய்து ''மாரடைப்பு எனும் மறலியை வெல்வோம்'' என்றும் ஸ்ரீ தான்தோன்றி ஈஸ்வரர் உடனுறை சௌந்தர நாயகி அம்பாள், வயிரவ சுவாமிகள் துணையோடு அனைவரும் நோயற்ற வாழ்வும், குறைவற்ற செல்வமும் பெற்று நீடூழி வாழப் பிரார்த்திக்கிறேன்.

வணக்கம்

✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻

பைரவர் வணக்கம்

விரித்தபல் கதிர்கொள் சூலம், வெடிபடுத மருகம் கை
தரித்த தோர் கோலகால வைரவன் ஆகி வேழம்
உரித்து, உமைஅஞ்சக்கண்டு ஒண்திரு மணிவாய்விள்ள
சிரித்து அருள் செய்தார் சேறைச் செந்நெறிச் செல்வனாரே

✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻

# சுவர்ணாகர்ஷண பைரவர்

ராம. சம்பந்தம், பி. காம்

*நச்சாந்துபட்டி*

தான்தோன்றீஸ்வரர்க்கு பக்கமதில்
தான்தோன்றி நிற்கும் திருஉருவே
அண்டமெலாம் காப்பதற்கு கையில்
தண்டமுடன் இருக்கும் பைரவா போற்றி.

அபயக்கரம் உண்டு அழகிய முகம் உண்டு
கையில் பூரண குடம் உண்டு சூலம் உண்டு
தையல்உண்டு அலங்கார தோற்றம் கொண்ட
சுவர்ணாகர்ஷண பைரவா போற்றி போற்றி.

தங்க மனம் படைத்தாய் நீ
தங்க அடியார் மனம் பிடித்தாய்
தங்கமே உருவானாய் பார்புகழ
தங்க பைரவர் பெயர் பெற்றாய் போற்றி.

அட்டமி திதியில் உனைப் பணிந்தாலும்
வட்டநிலா காலமதில் நினைந்தாலும்
நலம்தரும் நாயகனே போற்றி
உலகம் உய்ய வந்தவனே போற்றி.

தஞ்சமென வரும் அன்பர்க்கு அன்பால்
அஞ்சேல் என அபயக்கரம் காட்டி
நெஞ்சமதை நிறைக்கும் கயிலை
செஞ்சடையான் மறுபிறப்பே போற்றி

தங்கத்தை அள்ளித்தரும் எம்
தங்கத் திருமகனே மக்கள்
எதுகேட்டாலும் நீதருவாய்
அதுவே உனது பெருமை!

## இலுப்பக்குடி நகரத்தார் வாழும் ஊர்கள் (1984 டிசம்பர்)

| எண் | ஊர் பெயர் | | புள்ளி விவரம் |
|---|---|---|---|
| 1. | தேவகோட்டை ஐந்து வீட்டார் | அரு. ராம. அரு. லெ. | 101 |
| | ,, ,, | க. முரு. வி. மு. ராம | 106 |
| | ,, | மெ. வகை | 147 |
| | ,, | முத்து க. வகை | 116 |
| | ,, | காத்தான் செட்டியார் வகை | 8 |
| | ,, | இருளப்ப செட்டியார் வகை | 31 |
| | ,, | சேந்தனியார் வகை | 15 |
| | ,, | ஏகப்ப செட்டியார் வகை | 188 |
| | ,, | காரைக்குடியார் வகை | 66 |
| 2. | கண்டனூர் | | 51 |
| 3. | பள்ளத்தூர் | | 56 |
| 4. | கொத்தமங்கலம் | | 3 |
| 5. | கடியாபட்டி (ராமச்சந்திரபுரம்) | | 6 |
| 6. | அரிமளம் | | 7 |
| 7. | நேமத்தான் பட்டி | | 53 |
| 8. | புதுவயல் | | 31 |
| 9. | காரைக்குடி முத்துப்பட்டினம் | | 20 |
| 10. | மானகிரி | | 24 |
| 11. | நாச்சியாபுரம் | | 138 |
| 12. | சிராவயல் | | 32 |
| 13. | பட்டமங்கலம் | | 6 |
| 14. | ஓ. சிறுவயல் | | 75 |
| 15. | கண்டரமாணிக்கம் | | 41 |
| 16. | கீழப்பூங்குடி | | 51 |
| 17. | ஒக்கூர் | | 48 |
| 18. | அலவாக்கோட்டை | | 45 |
| 19. | பனங்குடி | | 18 |
| 20. | நடராசபுரம் | | 36 |
| 21. | வி. லெட்சுமிபுரம் | | 77 |
| 22. | விரையாச்சிலை | | 42 |
| 23. | பனையப்பட்டி | | 33 |
| 24. | புதுப்பட்டி | | 11 |
| 25. | வலையப்பட்டி | | 23 |
| 26. | குளிபிறை | | 74 |
| 27. | பூலாங்குறிச்சி | | 39 |
| 28. | வேந்தன்பட்டி | | 77 |
| 29. | குருவிக்கொண்டான் பட்டி | | 2 |
| 30. | ராங்கியம் | | 69 |
| 31. | நச்சாந்துப்பட்டி | | 117 |
| 32. | கோனாபட்டு | | 171 |
| | | | 2254 |

# மலர்க்குழு உறுப்பினர்கள்

தலைவர்

1. எல். சோமு,
53-ஏ, மேற்கு சம்பந்தம் ரோடு,
ஆர். எஸ். புரம், கோயம்புத்தூர்.

2. பிச. சுப. சி. மெய்யப்ப செட்டியார்,
இரவு சேரிப் பாதை, தேவகோட்டை.

3. அர. சிங்கார வடிவேலன் செட்டியார்,
வெள்ளையன் ஊரணி மேல் கரை,
தேவகோட்டை.

4. எஸ். வி. என். சம்பந்தம் செட்டியார்,
இந்தியன் பேங்க் சென்ட்ரல் ஆபீஸ்,
31, இராஜாஜி தெரு,
த. பெ. எண். 1384, சென்னை-600 001.

5. வீர. வீரப்ப செட்டியார்,
ஜெனரல் மேனேசர்,
இந்தியன் ஓவர்சீஸ் பேங்க்,
44, பிசட்காடன், சென்னை-28.

6. எல். செந்தில்நாதன் செட்டியார்,
ஜெனரல் மேனேசர்,
பேங்க் ஆப் மதுரை லிட்.,
எண். 8, 6-வது புதுத்தெரு, நந்தனம்,
சென்னை.

7. அண. வெங்கிடாசலம் செட்டியார்,
ராம. மெ. லெ. தெரு,
தேவகோட்டை.

8. சித. நடராசன், நச்சாந்துபட்டி,
109, 4.வது தெரு,
இராமலிங்க நகர் தெற்கு, திருச்சி-17.

9. எல். சபாரெத்தினம் செட்டியார்,
செட்டிநாடு சிமெண்ட் கார்ப்பரேசன் லிட்.,
2, அரண்மனைக்காரன் தெரு,
சென்னை-1.

10. எம். சிதம்பரம் செட்டியார்,
பேங்க் ஆப் மதுரை லிட்.,
தெற்கு மாசி வீதி, மதுரை-625001..

11. பெ. ராம. லெ. ராம. ராமனுதன் செட்டியார்,
நச்சாந்துபட்டி,
பிளாட் எண் 616, கே. கே. நகர்,
மதுரை-20.

12. கே. ஆர். முத்தையா செட்டியார்,
முத்து. கரு. வீதி, தேவகோட்டை.

13. மெ. லெ. மெ. நாச்சியப்ப செட்டியார்.
திருப்பத்தூர் ரோடு, தேவகோட்டை,

14. ராம. அரு. அரு. வீர. பெரிய அருணுசலம் செட்டியார்,
இரட்டை அரு. வீடு. தேவகோட்டை.

15. எம். வெங்கிடாசலம் செட்டியார்,
டி. டி. எம்.
8, பி. டாக்டர் சிவானந்தா காலனி,
டாடா பேட், கோயம்புத்தூர்-12.

16. என். முத்தையா செட்டியார்,
மேனேசர், இந்தியன் ஓவர்சீஸ் பேங்க்,
தெற்கு ராஜ வீதி, தஞ்சாவூர்.

17. எஸ்எம். ரெங்கனுதன் செட்டியார்,
சிராவயல்.
10, ராமலிங்கநகர், கோயம்புத்தூர். 11.

18. எஸ். எம். எல். வெள்ளையன் செட்டியார்,
அக்ரோ கெமிகல் எண்டர்பிரைசஸ்,
மெயின்ரோடு, ஏற்காடு,
சேலம் மாவட்டம்.

19. சி. கரு. சிவ. ஆதப்ப செட்டியார்,
ஒக்கூர் அஞ்சல்.

20. எஸ். வடிவேல் செட்டியார்,
வைரம் பதிப்பகம், 50, பெல்ஸ் ரோடு,
திருவல்லிக்கேணி, சென்னை-5.

21. ராம. அருணுசலம் செட்டியார்,
எண் 1, அரு. லெ. வீடு,
தேவகோட்டை.

22. சுப. அருணுசலம் செட்டியார்,
சரஸ்வதி வாசக சாலை தெரு,
தேவகோட்டை.

23. எம். சிவலிங்கம் செட்டியார்,
எம். எல். ஆர். டிரிவ்ஸ், பேலஸ் ரோடு,
குப்பம்-சித்தூர் மாவட்டம், ஆந்திரா.

24. எம். தனலெக்ஷ்மி நாராயணன் செட்டியார்,
மேனேசர், இந்தியன் ஓவர்சீஸ் பேங்க்,
2, இராஜேந்திரா பேலஸ்,
புஷ்ரோடு, புதுடெல்லி-110 008.

25. என். அண்ணுமலை செட்டியார்,
ஜெயம் & கோ., ஆண்டர்சன் தெரு,
சென்னை.

26. கேஆர். செந்தில்நாதன் செட்டியார்,
சிலம்பணி அக்ரகாரம்,
தேவகோட்டை.

# வசூல் குழு

1. அரு. அரு. சோம. சுந்தரேசன் செட்டியார்,
உபதலைவர்,
பூசைக்கார நா. தெரு,
தேவகோட்டை.

2. எ. செ. செல்லப்ப செட்டியார்,
சம்பந்தர் தெரு,
தேவகோட்டை.

3. வி. மு. சுப. மீனாட்சி சுந்தரம் செட்டியார்,
செயலாளர், மைனர் தெரு,
தேவகோட்டை.

4. மெ. லெ. மெ. நாச்சியப்ப செட்டியார்,
திருப்பத்தூர் ரோடு,
தேவகோட்டை.

5. ராம. மெ. சித. ராம. வயிரவன் செட்டியார்,
செயலாளர், சத்திரத்தார் தெரு,
தேவகோட்டை-623302.

6. சேவு. ராம. அரு. சுப்பிரமணியன் செட்டியார்,
தி. ஊரணி கீழ்க்கரை,
தேவகோட்டை.

7. ராம. அருணாசலம் செட்டியார்,
அரு. லெ. வளவு,
தேவகோட்டை.

8. நா. லெ. வீர. வீர. வீரப்ப செட்டியார்,
செயலாளர்,
தொண்டியார் வீதி,
தேவகோட்டை.

9. முத்து. கரு. அரு. கரு. சுப்பிரமணியன் செட்டியார்,
தேவகோட்டை, உபதலைவர்,
சரவணா மெடிக்கல்ஸ்,
92, மெயின் ரோடு,
உத்தமபாளையம்,
மதுரை மாவட்டம்-626533.

10. நாக. ஏ. நாகப்ப செட்டியார்,
வெள்ளையன் ஊரணி வடகரை,
தேவகோட்டை.

11. சுப. அருணாசலம் செட்டியார்,
சரஸ்வதி வாசகசாலை,
ஆர்ச் பக்கம்,
தேவகோட்டை.

12. கி. கரு. ராம. சாமிநாதன் செட்டியார்,
உபதலைவர்,
இரவுசேரி பாதை,
தேவகோட்டை.

13. பி.ச. அரு. செந்தில்நாதன் செட்டியார்,
சிற்சபேசன் தெரு,
தேவகோட்டை.

14. தெ. அ. ராம. வீர. வீரப்ப செட்டியார்,
தேவகோட்டை,
1869 ராஜவீதி, கருந்தட்டான்குடி,
தஞ்சாவூர் ஜில்லா-613002.

15. முரு. அ. முரு. அண்ணாமலை செட்டியார்,
கன்வீனர்,
கருதாஊரணி பி. தெரு,
தேவகோட்டை.

16. பெரி. நா. நா. அ. தேவராஜன் செட்டியார்,
க. முத்துப்பட்டினம்,
காரைக்குடி-623001.

17. நாக. அ. பழ. பழனியப்ப செட்டியார்,
கண்டனூர்-623104.

18. சொ. லெ. அழகப்ப செட்டியார்,
காந்தி தெரு,
ஒ. சிறுவயல்.

19. சா. யீ. சிதம்பரம் செட்டியார்,
நேமத்தான்பட்டி.

20. மெ. மு. மு. ராம. முத்தழகப்ப செட்டியார்,
கோனாபட்டு, பொருளாளர்,
நாகப்பா சைக்கிள் மார்ட்,
136- ஏ, நேதாஜி ரோடு,
மதுரை.

21. மெ. சித. மெ. மெய்யப்ப செட்டியார்,
கோனாபட்டு-622503.

22. உ. சுப. அடை. மெய்யப்ப செட்டியார்,
வி. லெட்சுமி புரம்,
திருமயம் தாலுக்கா.

23. வெ. லெ. வெங்கிடாசலம் செட்டியார்,
விரையாச்சிலை,
4281, கீழ வம் வீதி,
புதுக்கோட்டை,

24. பெ. ராம. ராம. சித. ராமன் செட்டியார்,
உபதலைவர்,
நச்சாந்துபட்டி,
கணபதி இல்லம்,
1356, வடக்கு ராஜ வீதி,
புதுக்கோட்டை—622 001.

25. எல். சோமு,
நச்சாந்துபட்டி,
டி. எஸ். எண் 488, வெஸ்ட் சம்பந்தம் ரோடு,
ஆர். எஸ். புரம், கோயம்புத்தூர்.

26. வீர. மு. சுப்பையா செட்டியார்,
வீ. ஆர். எம். ஹவுஸ்,
நச்சாந்துபட்டி 622 404.

27. செ. ராம. செ. அ. ராமசாமி செட்டியார்,
புதுப்பட்டி 622 404.

28. பெ. சொ. பெரியகருப்பன் செட்டியார்,
ராங்கியம்,
டி 81, 8 —வது குறுக்குத் தெரு,
தில்லை நகர், திருச்சி—18.

29. சுப. சொ. சுப்பிரமணியன் செட்டியார்,
உபதலைவர்,
நாச்சியாபுரம்—723 207.

30. வயி, ச. மாணிக்கம் செட்டியார்,
நாச்சியாபுரம்—623 207.

31. சுப. கண. வெ. சுப்பிரமணியன் செட்டியார்,
அலவாக்கோட்டை,
சிவகெங்கை தாலுக்கா,

32. முத்து உல. சுப. உலகப்ப செட்டியார்,
நடராஜ புரம்,
16, கான்சா மேட்டுத் தெரு,
மதுரை—1. போன்—23463

33. சிக. அரு. சோம. ராமநாதன் செட்டியார்,
தலைவர்,
ஒக்கூர்,
147—ஏ, தெற்கு மாசி வீதி,
மதுரை.

34. க. அரு. க. அரு. கண்ணப்ப செட்டியார் என்ற சம்பத்
செயலாளர்,
கீழப்பூங்குடி,
245, வடக்கு மாசி வீதி,
மதுரை—1. போன்—30078

35. பெ. ராம. லெ. ராம. ராமனாதன் செட்டியார்,
நச்சாந்துபட்டி—622 404
பிளாட் எண். 616, கே. கே. நகர்,
மதுரை—20.

36. வயி. மு. முத்துப்பழனியப்ப செட்டியார்,
குளிபிரை—622 402.

37. ஏஆர். எஸ். ஆர். எம். சுப்பிரமணியன் செட்டியார்,
2/2, பாரதி தெரு,
பனையபட்டி—622 406.

38. வயி. ர. மா. ஏகப்ப செட்டியார்,
சிவரக்கோட்டையார் வீதி,
தேவகோட்டை,
உமா ஐஸ் கிரீம்.
47, சந்நதி தெரு,
திருவானைக் கோவில், திருச்சி—5.

39. எம். வெங்கடாசலம்,
மேனேசர், பி. ஒ. எம்.,
33, வடக்கு சித்திரை தெரு,
மதுரை—1.

40. சி. ஆர். ஆர். எம். ஒய். யேகப்பச் செட்டியார்,
குளிபிறை—622 402.

---

## கும்பாபிஷேகத்தில் பிராமண போஜனம் நிர்வாகம் செய்தவர்கள் விவரம்

(1) சுப. தியாகராசன் செட்டியார், நாச்சியாபுரம்

(2) பெ. சு. சீனிவாசன் செட்டியார், ,,

(3) லெ. ரெத்தினம் செட்டியார், மானகிரி

(4) லெ. அரு. லெ. அண்ணாமலை செட்டியார், மானகிரி

(5) வா. கரு. லெ. ராமசாமி செட்டியார், சிராவயல்

# நன்கொடை தந்த நம் மகளிர்

இலுப்பக்குடி அருள்மிகு தான்றோன்றிநாதர் சௌந்தரநாயகி அம்மன் திருக்கோயில் திருக்குட நன்னீராட்டு விழா யாகசாலை பூஜைக்குத் தேவையான பிரதான கலசங்களை இலுப்பக்குடி நகரத்தார் வீட்டிற் பிறந்த பெண் மக்கள் நன்கொடையாக அளித்துப் பேறு பெற்றனர். தேவகோட்டை திரு. எ. சி. எ. நா. முத. சிவலிங்கம் செட்டியார் அவர்களும் சிரமம் கருதாது பணியாற்றி கலசங்கள் சேகரம் செய்து உதவினார்கள். நன்கொடை ஈந்து நலமுறும் மகளிர் பெயர்களைக் கீழே தருகிறோம்.

## இ. நா. ந. டிரஸ்ட்டு

| | | | |
|---|---|---|---|
| 1. | உமு. சுப. லெ. அரு. காந்திமதி ஆச்சி | தேவகோட்டை | 100 |
| 2. | எஸ். லெட்சுமி ஆச்சி | ,, | 100 |
| 3. | பி. எஸ். செல்வாம்பாள் ஆச்சி | ,, | 100 |
| 4. | அ. தி. சுதி. ராம. மா. மங்கையற்கரசி ஆச்சி | ,, | 100 |
| 5. | முசு. பெரி. வீர. ராம. கற்பகவல்லி ஆச்சி | ,, | 100 |
| 6. | பழ. சோம. கயி. திரு. சோம. முத்துப்பெண் ஆச்சி | ,, | 100 |
| 7. | அ. மு. சித. அலமேலு ஆச்சி | ,, | 101 |
| 8. | கண. சி. லெ. ராம. செல்லம்மை ஆச்சி | ,, | 101 |
| 9. | உ. ராம. மெ. சுப. சேவு. மெ. சேவு. அலமேலு ஆச்சி | ,, | 100 |
| 10. | கும. கரு. ராம. சொ. கண்ணபுரம் ஆச்சி | ,, | 100 |
| 11. | ஆரு. மொ. வ. ராம. மெ. வ. முத்து ஆச்சி | ,, | 100 |
| 12. | ஆரு. மொ. வ. ராம. வ. தெ. வள்ளியம்மை ஆச்சி | ,, | 100 |
| 13. | உ. ராம. மெ. சுப. சேவு. ப. த. சிவகாமி ஆச்சி | ,, | 100 |
| 14. | மெ. அரு. மீனாள் ஆச்சி | ,, | 100 |
| 15. | சி. த. செ. தெய்வானை ஆச்சி | ,, | 100 |
| 16. | மு. பெரி. செ. ராஜாமணி ஆச்சி | ,, | 101 |
| 17. | மு. பெரி. செ. வ. வள்ளியம்மை ஆச்சி | ,, | 101 |
| 18. | கும. சு. ராம. கண. சோம. லெ. அலமேலு ஆச்சி | ,, | 100 |
| 19. | சிவ. சௌந்திரம் ஆச்சி | ,, | 101 |
| 20. | சி. ஏ. மு. சித. முத்துலெட்சுமி ஆச்சி | ,, | 101 |
| 21. | வெ. ஆ. ஆ. சொ. ஏ. லெ. இந்திராள் ஆச்சி | ,, | 101 |
| 22. | வெ. லெ. வெ. வீர. வெ. மணிமேகலை ஆச்சி | ,, | 101 |
| 23. | பழ. சேவு. கரு. செ. கமலா ஆச்சி | ,, | 101 |
| 24. | செ. மு. லெ.நா. ராம. அள. சா. ராம. அன்னபூரணி ஆச்சி | ,, | 101 |
| 25. | கும. ராம. பழ. அன்னபூரணி ஆச்சி | ,, | 101 |
| 26. | சோம. லெ. கா. அலமேலு ஆச்சி | ,, | 100 |
| 27. | சோம. லெ. முத்துலெட்சுமி ஆச்சி | ,, | 100 |
| 28. | சோம. அரு. சோம. முத்துலெட்சுமி ஆச்சி | ,, | 100 |
| 29. | அரு. அரு. அரு. சிவகாமி ஆச்சி | ,, | 100 |
| 30. | மகா. விஜயலெட்சுமி ஆச்சி | ,, | 100 |
| 31. | மெ. லெ. மீனாட்சி ஆச்சி | ,, | 100 |
| 32. | அரு. அரு. அரு. உண்ணாமலை ஆச்சி | ,, | 100 |
| 33. | கும. சு. ராம. கண. லெ. ஞானம்பாள் ஆச்சி | ,, | 100 |
| 34. | சேவு. லெ. ராம. நா. லெட்சுமி ஆச்சி | ,, | 101 |
| 35. | அள. சுப. பழ. திரு. சித. லெட்சுமி ஆச்சி | ,, | 101 |
| 36. | மா. முரு. சேதுக்கரசி ஆச்சி | ,, | 101 |
| 37. | வ. மு. தெய்வானை ஆச்சி | ,, | 101 |
| 38. | வ. மு. வள்ளியம்மை ஆச்சி | ,, | 101 |

| | | | |
|---|---|---|---|
| 39. | எ. சி. எ. நா. முத. கா. குடும்பத்தார் | ,, | 100 |
| 40. | மானகிரி ராம. தையல்நாயகி ஆச்சி | மானகிரி | 100 |
| 41. | ராம. சொ. தெய்வானை ஆச்சி | கோனாபட்டு | 101 |
| 42. | அ. சித. ந. சீதை ஆச்சி | ,, | 101 |
| 43. | அ. சித. ந. தெ. ந முத்தாத்தாள் ஆச்சி | காரைக்குடி | 101 |
| 44. | கா. சுப. சு. கதி. கா. மீனாட்சி ஆச்சி | பாகனேரி | 100 |
| 45. | சி. அரு. சின. அரு. கல்யாணி ஆச்சி | அலவாக்கோட்டை | 100 |
| 46. | மெ. அ. சௌந்திரம் ஆச்சி | விரயாச்சிலை | 101 |
| 47. | சுப. கும. வள்ளிக்கண்ணு ஆச்சி | ஆவினிப்பட்டி | 101 |
| 48. | பழ. ராம. சகுந்தலா ஆச்சி | செவ்வூர் | 101 |
| 49. | மு. பழ. மு. நாகம்மை ஆச்சி | கொப்பனாபட்டி | 101 |
| 50. | நா. ராம. நா. ஆனந்தவள்ளியம்மை ஆச்சி | குளிபிறை | 101 |
| 51. | பெரி. ராம. நாகம்மை ஆச்சி | வலையப்பட்டி | 101 |
| 52. | முரு. உ. கண்ணாத்தாள் ஆச்சி | நடராஜபுரம் | 101 |
| 53. | கா. சுப. சுப. கதி. கா. சோம. உண்ணாமலை ஆச்சி | பாகனேரி | 101 |
| 54. | கு. ராம. கும. ராம. வள்ளியம்மை ராமநாதன் | நற்சாந்துபட்டி | 100 |
| 55. | சி. க. மெ. கா. மெ. கமலா மெய்யப்பன் | புதுப்பட்டி | 100 |
| 56. | அ. உமையாள் ஆச்சி | குளிபிறை | 101 |
| 57. | சித. மீனாட்சி ஆச்சி | கோட்டையூர் அழகாபுரி | 101 |
| 58. | முரு. பழ. மெ. மீனாக்ஷி ஆச்சி | விராய்சிலை | 101 |
| 59. | மெ. அழ. மெ. அழ. மீனாக்ஷி ஆச்சி | காரைக்குடி | 101 |
| 60. | தெ. அ. ராம. வீர. உமையாள் ஆச்சி | தேவகோட்டை | 101 |
| 61. | வீர. ராம. நா ராம. சித. அலமேலு ஆச்சி | ,, | 100 |
| 62. | வீர. ராம. நாகு. அரு. லெட்சுமி ஆச்சி | ,, | 100 |
| 63. | அள. வீர. வெ. பெ. வீர. பெ. உமையாள் ஆச்சி | ,, | 100 |
| 64. | ராம. வயி. வயி. நாகம்மை ஆச்சி | மிதிலைப்பட்டி | 101 |
| 65. | எ. சி. கரு. சுப. லெட்சுமி ஆச்சி | தேவகோட்டை | 101 |
| 66. | சொ. ராம. மா. செ. மீனாட்சி ஆச்சி | ,, | 101 |
| 67. | அரு. சோம. சு. லெ. மக்கள் | ,, | 100 |
| 68. | அரு. சோம. சு. அரு. மக்கள் | ,, | 100 |
| 69. | லெ. ராம. ராம. மக்கள் | ,, | 100 |
| 70. | அரு. வசந்தாள் ஆச்சி | ,, | 101 |
| 71. | அரு. லெட்சுமி ஆச்சி | ,, | 101 |
| 72. | மெ. நா. அரு. ராம. அலமேலு ஆச்சி | ,, | 100 |
| 73. | கும. செ. கும. கும. சீதை ஆச்சி | காரைக்குடி | 101 |
| 74. | சுப. செ. மீனாக்ஷி ஆச்சி | ஆவனிப்பட்டி | 101 |
| 75. | ராம. செல்வம் ஆச்சி | மகிபாலன்பட்டி | 101 |
| 76. | சுப. பழ. முத்துலெட்சுமி ஆச்சி | கோனாபட்டு | 101 |
| 77. | சு. செ. சேவு. மெ. உமையாள் ஆச்சி | தேவகோட்டை | 101 |
| 78. | ஆவி. க. தி. அரு. மீனாக்ஷி ஆச்சி | ,, | 101 |
| 79. | செ. வீர. எ. கண. சபா. மணிமேகலை ஆச்சி | ,, | 101 |
| 80. | சித. முரு. வீர. ராம. சிவகாமி ஆச்சி | ,, | 101 |
| 81. | ராம. வ. காளியம்மாள் ஆச்சி | ,, | 100 |
| 82. | கும. சு. ராம. கண. லெ. கண. சௌந்திரம் ஆச்சி | ,, | 101 |
| 83. | நா. அரு. அ. மீனாக்ஷி ஆச்சி | ,, | 101 |
| 84. | சி. நா. சரோஜா ஆச்சி | கண்டிரமாணிக்கம் | 101 |
| 85. | சித. லெ. ராம. அரு. அரு. லெட்சுமி ஆச்சி | தேவகோட்டை | 101 |
| 86. | எ. சித. லெ. சித. கோதை ஆச்சி | குளிபிறை | 101 |
| 87. | சேவு. ராம. அரு. ராம. அரு. ராமசௌந்திரம் ஆச்சி | தேவகோட்டை | 101 |
| 88. | சேவு. ராம. அரு. ராம. அரு. ராம. உமையாள் ஆச்சி | ,, | 101 |
| 89. | முரு. சுப. சு. மீனாக்ஷி ஆச்சி | ஆவினிப்பட்டி | 101 |
| 90. | உ. மு. சுப. லெ. மெ. சோம. நளினி ஆச்சி | தேவகோட்டை | 101 |
| 91. | உ. ராம. உமு. அமு. சித. சொ. அன்னபூரணி ஆச்சி | ,, | 101 |
| 92. | ராம. கஸ்தூரி ஆச்சி | ,, | 101 |
| 93. | மு. ராம. சுப. அலமேலு ஆச்சி | ,, | 101 |

| | | | |
|---|---|---|---|
| | | | 9,357 |
| 94. | ராம. கரு. உமையாள் ஆச்சி | தேவகோட்டை | 101 |
| 95. | லெ. சொர்ணவல்லி ஆச்சி | ,, | 101 |
| 96. | சி. வள்ளியம்மை ஆச்சி | ,, | 101 |
| 97. | உ. லெட்சுமி ஆச்சி | ,, | 101 |
| 98. | சரஸ்வதி பிரகாசம் | ,, | 101 |
| 99. | சோம. உமையாள் ஆச்சி | ,, | 101 |
| 100. | கண்ணுள் சுப்பிரமணியம் | ,, | 101 |
| 101. | எம். முத்துலெட்சுமி ஆச்சி | ,, | 101 |
| 102. | லெ. ராம. சொ. ராம. அலமேலு ஆச்சி வங்காளத்தார் வீடு | ,, | 101 |
| 103. | அள. சித. ராம. அரு. ராம. ராம. அலமேலு ஆச்சி | ,, | 101 |
| 104. | முரு. லெ. பெரி. லெ. லெ. லெ. மணிமேகலே ஆச்சி | ,, | 101 |
| 105. | தி. ராம. தி. மா. லெ. இசைமணி ஆச்சி | ,, | 101 |
| 106. | வீர. ராம. பெ. மீ. மீனுள் ஆச்சி | ,, | 100 |
| 107. | சிவ. விசாலாக்ஷி ஆச்சி | ,, | 100 |
| 108. | லெ. அரு. லெ. நாச்சம்மை ஆச்சி | ,, | 100 |
| 109. | சொ. மீனுக்ஷி ஆச்சி | ,, | 100 |
| 110. | அரு. சோம. மா. லெ. வைஜயந்தி ஆச்சி | ,, | 100 |
| 111. | அரு. சோம. ராம. சோம. லெட்சுமி ஆச்சி | ,, | 100 |
| 112. | அரு. சோம ராம. சோம. மீனுள் ஆச்சி | ,, | 100 |
| 113. | மு. ப. சு. பழ. மு. லெட்சுமி ஆச்சி | ,, | 100 |
| 114 | உமு. சுப. லெ. மெ. அண. உண்ணுமுலே ஆச்சி | ,, | 101 |
| 115. | லெ. கும. லெ. சு. மீனுக்ஷி ஆச்சி | ,, | 101 |
| 116. | லெ. மீனுள் ஆச்சி | ,, | 101 |
| 117. | சு. லெ. ராம. தெய்வானே ஆச்சி | ,, | 101 |
| 118. | கும. கரு. ராம. சொ. சுப. சாந்தி ஆச்சி | ,, | 101 |
| 119. | வெ. ஆ. ஆ. சொ. மா. லெட்சுமி ஆச்சி | ,, | 100 |
| 120. | ராம. பெ. தனம் ஆச்சி | ,, | 100 |
| 121. | கும. ராம. பழ. லெ. அ. விசாலாக்ஷி ஆச்சி | ,, | 100 |
| 122. | அரு. சோம. அரு. காந்திமதி ஆச்சி | ,, | 50 |
| | | | 12,224 |

அனைவருக்கும் எங்கள் நன்றி.

---

## சுவாமி புறப்பாட்டுக் குழுவினர் விவரம்

| | | |
|---|---|---|
| (1) | நா. பழ. ஏகப்ப செட்டியார் | தேவகோட்டை |
| (2) | வ. முத்தையா செட்டியார் | ,, |
| (3) | எ. செ. செல்லப்ப செட்டியார் | ,, |
| (4) | ராம. சொக்கலிங்கம் செட்டியார் | ,, |
| (5) | எம். தனலக்ஷ்மி நாராயணன் செட்டியார் | ,, |
| (6) | ப. வெ. அருணுசலம் செட்டியார் | ,, |
| (7) | கு. எ. மெ. மு. ராமனுதன் செட்டியார் | ,, |
| (8) | எம். மீனுட்சிசுந்தரம் செட்டியார் | ,, |
| (9) | எஸ். முத்துமாணிக்கம் செட்டியார் | ,, |
| (10) | பி. எல். தணிகாசலம் செட்டியார் | ,, |

# இராஜகோபுரத் திருப்பணி

★ ★ ★

இலுப்பைக்குடி தான்தோன்றி ஈசர் திருக் கோயில் திருக்குட நன்னீராட்டுக்குழு வசூல் கமிட்டியின் வேலைகளும் வெகு வேகமாக நடந்து கொண்டிருந்த நேரம். நிதி வசூல் செய்வதற்காக வேந்தன்பட்டிக்கு அவ்வூர் சிவன் கோவில் கும்பாபிஷேக தினத்தன்று சென்றிருந்தோம். அங்கு காசிநாத் சிவனடி யான் அண்ணன் அவர்கள் இல்லத்தில் நம் குழுவினரும் வேந்தன்பட்டி பங்காளிகளும் கூடி உரையாடிக் கொண்டிருந்த நேரத்தில் விரையாச்சிலை வெ. லெ. வெங்கடாசலம் அவர்களும் இலுப்பைக்குடி கோயிலுக்கு மட்டும் இராஜகோபுரம் இல்லாத நிலைமை யைக் குறிப்பிட்டு இராஜகோபுரம் எழுப்ப வேண்டியது அவசியம் என்று வலியுறுத் தினர்கள். ஏனையோரும் அதன் இன்றியமை யாத தன்மையை உணர்ந்து சிந்தனை செய்து கொண்டிருந்தபோது நாச்சியாபுரம், சுப. சொ. சுப்பையா செட்டியார் அவர்கள் அருள் வாக்கு கொடுத்தது போன்று, "நாம் கண்டிப் பாக இராஜகோபுரம் கட்டத்தான் வேண்டும்" என்று உறுதியாகச் சொன்னர்கள்.

திருவருட் பயனுக கும்பாபிடேக நிதி எதிர் பார்த்ததற்கும் மேலாகக் குவிந்து கொண் டிருந்த நேரம். எனவே இராசகோபுரத் திருப்பணி செய்து கும்பாபிடேகம் செய்வது என்று துணிந்தோம்.

உடனே, இராஜகோபுரத் திருப்பணிக் குழு (கமிட்டி) ஒன்று கீழ்க்கண்டவாறு அமைக்கப் பட்டது. திருவாளர்கள் :

1. அரு. சு. ராம. சுப்பிரமணியன் செட்டியார், பனையப்பட்டி.

2. பெ. ராம. ராம. சித. இராமன் செட்டியார், நச்சாந்துபட்டி.

3. சி. கரு. ராம. சாமிநாதன் செட்டியார், தேவகோட்டை.

4. வெ. லெ. வெ. வெங்கிடாசலம் செட்டியார், விரையாச்சிலை.

5. வயி. மு. முத்தையா செட்டியார், குளிபிறை

6. பெ. அ. பெரியகருப்பன் செட்டியார், இராங்கியம்.

7. சேவு. ராம. அரு. ராம. சுப்பிரமணியன் செட்டியார், தேவகோட்டை.

உதவியாளர்கள்

1. அழ. பழநியப்ப செட்டியார், அரிமளம்.

2. அரு. சு. வி. ராம. செல்லத்தம்பி செட்டியார், பனையப்பட்டி.

3. AL. காசி செட்டியார், அலவாக் கோட்டை.

இராஜகோபுரம் கட்டுமானம் பற்றிய ஆலோசனைக்கு இன்ஜினீயர் கண்டனூர் திரு. RM. முத்து செட்டியார் அவர்களை அணுகியபோது காங்கிரீட் போடவும் மற்றும் கோபுரம் கட்டவும் அவர்கள் அன்புடன் ஆலோசனை (அட்வைஸ்) வழங்கி உதவினர் கள். இன்ஜினீயர் திரு. AL. ராகவனும் மற்றவர்களும் துணையாக இருந்து உதவினர் கள்.

இராஜகோபுரத்தின் அமைப்பு, நீளம், அகலம், உயரம் முதலியவற்றை முடிவு செய்யும் பொறுப்பு தீ. சித. இராமன் செட்டியார் அவர்களிடம் ஒப்படைக்கப் பட்டது. பின்னர் கீழ்க்கண்டவாறு அவைகள் நிர்ணயிக்கப்பட்டு நிறைவேற்றப்பட்டன.

ஐந்துநிலை கோபுரம். உயரம் 61½' அடி.

,, ,, அகலம் 27' அடி.

,, ,, பக்க சைடு 18¾' அடி.

சுதை வேலை, பொம்மைகளின் எண்ணிக்கை — 115.

புதியதாக ஸ்வர்ண ஆகர்ஷண பைரவர் போடப்பட்டுள்ளது.

மொத்த மதிப்பீட்டுத் தொகை ரூ. 2,50,000.

திருப்பணி வேலைகளுக்கு ஸ்தப்திகளிடமிருந்து கொட்டேஷன்கள் கோரப்பட்டன. கண்டனூர் VR. காசிநாத ஸ்தபதியும் இராஜ கோபுரத்தைக் கட்டி முடித்துத் தருவதில் வெகு ஆர்வத்துடன் காணப்பட்டார். அவருடைய தந்தையைப் பற்றியும் நகரத்தார்கள் நன்கு அறிவர். எனவே காசிநாத ஸ்தபதியுடன் லேபர் காண்ட்ராக்ட் மட்டும் செய்யப்பட்டு பணிகள் தொடரப்பட்டன.

இலுப்பக்குடியில் தங்கியிருந்து கட்டுமானப் பணிகளைக் கண்காணிக்கும் பொறுப்புகளைத் தலைவர் அவர்களும் கோனாபட்டு இராம. முத்தளகப்ப செட்டியார் அவர்களிடமும் பனையப்பட்டி. அரு. சு. ராம. சுப்பிரமணியன் செட்டியார் அவர்களிடமும் ஒப்படைத்தார்கள். அவர்களும் பெருந்தன்மையுடன் அதனை ஏற்றுக்கொண்டு சொல்லியவண்ணம் பொறுமையுடன் செய்து முடித்துப் பெருமை சேர்த்துக் கொண்டார்கள்.

அவ்வப்போது தேவைப்படும் பொருட்களை வாங்கிக் கொடுப்பதற்கும் இடையில் எதுவும் தடைகள் ஏற்படின் சிக்கல் தீர்க்கவும் தேவகோட்டை திரு. 'சாமி' அவர்களும், திரு. பாஸ்கரன் அவர்களும் பொறுப்பேற்றுக் கொண்டார்கள். மேனேஜிங் டிரஸ்டி திரு. இராம. அருணாசலம் செட்டியார் அவர்களும் தொடர்ந்து மிக ஒத்துழைப்புக் கொடுத்து வந்தார்கள்.

இர்ாசகோபுரம் புதியதாக அஸ்திவாரம் ருத்ரோத்காரி ஆண்டு ஆவணிமீ 6வ போடப்பட்டு இரக்தாட்சி ஆண்டு தைத்திங்கள் 26வ 8-2.'85 பூர்த்தி செய்யப்பட்டு குடநீராட்டு விழா சிறப்பாக நடந்தேறியது.

இராசகோபுரத் திருப்பணி வேலைகள் விறு விறு என்று வேகமாகவும் சிறப்பாகவும் நடந்ததற்குக் காரணம் அனைவரின் ஒருமித்த ஒத்துழைப்பும் நம் பங்காளிகள் நிதியினை அள்ளிக் கொடுத்த பாங்கும் அதைத் தடையில்லாது நம் தலைவரும் பொருளாளரும் அள்ளி வழங்கியதுமேயாம். கை சோர்வுறுது கணக்கெழுதி உதவிய கோனாபட்டு சீனியண்ணன் அவர்களின் பணியினையும் நாம் இங்கு குறிப்பிடாமல் இருக்க முடியாது.

கற்களை மேலே உயரத்தில் ஏற்றி நிறுத்துவதற்குத் துணைபுரிந்து... ரூம்ஸ் & லிப்டிங் மாஸ்ட் தந்துதவிய காரைக்குடி சென்ட்ரல் எலக்ட்ரோ கெமிக்கல் ரிசர்ச் இன்ஸ்டிடியூட் (CECRI) அவர்களுக்கு எங்களின் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

அருள்மிகு சௌந்தரநாயகி உடனுய தான்றோன்றியீசர் வயிரவமூர்த்தி சுவாமிகள் கிருபையால் பணிகள் எவ்விதக் குறைவுமின்றி நிறைவேறின.

திருச்சிற்றம்பலம்

---

## அஷ்ட பந்தன மருந்து

உருண்டை 1க்கு ½ வீசை — 700 கிராம்

| | ரூபாய் எடை | கிராம் |
|---|---|---|
| சுண்ணாம்பு | 26 | 299 |
| கருங்குங்கிலியம் | 9 | 104 |
| கொம்பரக்கு | 3¾ | 42 |
| தேன் மெழுகு | 3¾ | 42 |
| கல் காவி | 7½ | 84 |
| பஞ்சு | 1 | 11.5 |
| ஜாதிலிங்கம் | 7½ | 84 |
| மிதப்பு (வெண்ணெய்) | 3¾ | 42 |
| | | 708.5 |

மருந்து இடியல் இடித்தது எட்டு இடியல்.
மருந்து இடித்து தயாரித்தது நேமம் கருப்பையாவும் குழுவினரும்

# இலுப்பக்குடி கும்பாபிஷேகம்

## நான் கண்ட சிறப்புகள்

N. இராமநாத சிவாச்சாரியார், திருக்கோலக்கா

இக் கலி காலத்தில் தருமத்தாயைக் காத்திட இறைவனுல் தோற்றுவிக்கப்பட்ட சமூகம் சுவர்ண தன மகுடவைசிய நகரத்தார் எனச் சிறப்புப் பெற்ற நாட்டுக்கோட்டை நகரத்தார் சமூகமாகும். நகரத்தார்கள் தங்கள் தாய்நாட்டில் மட்டுமின்றி சிங்கப்பூர், மலேசியா, தாய்லாந்து, பர்மா, போன்ற வெளிநாடுகளிலும் அறக்கொடைகள் ஈந்து அறப்பணிகள் செய்துள்ளனர். ஆலயத் திருப்பணிகள் மட்டுமல்லாது, கல்வித் துறை, மருத்துவம் ஆகியவற்றிலும் உரிய பணி செய்து கொடை மரபினராக இருந்து வருகிருர்கள்.

சிற்ப சாஸ்திரமானது ஆலயத்தை ஒரு புருட வடிவமாக அமைத்தது. அதில் பாதமாக உடையது இராஜ கோபுரமாகும். புருஷ வடிவான ஆலயத்தில் இறைவனின் திருவடியைத் தொழுது அவனடி பற்ற, பாதமாகிய இராஜகோபுரம் இல்லாத குறையை நீக்கி ஐந்து நிலே கொண்ட இராஜ கோபுரம் அமைதது்க் கும்பாபிஷேகத்தைச் சிறப்பாக நடத்திஞர்கள்.

கும்பாபிஷேகத்தில் வைதிக முறை வழுவாமல் பின்பற்றப்பட்டது. அதில் தேர்ந்த ஞானமும் அனுபவமும் மிக்க தேவகோட்டை சிவத்திரு. கி. கரு. ராம. சாமிநாதன் செட்டியார் அவர்கள் மேல்பார்வையில் யாகசாலே அமைத்து யாகசாலே பூஜைகளே ஆகம விதிப்படி நடைபெறப் பார்த்துக் கொண்டார்கள்.

வேத, ஆகம முறைப்படி அறுபது சிவாச்சாரியார்களேக் கொண்டு 15 யாகசாலேயும் 39ஹோம குண்டங்களேயும் அமைத்து, 8 கால யாக பூஜைகள் 4 வேதங்கள் தேவாரத் திருமுறைகள் ஒலிக்கச் சிறப்பாக நடந்தேறின.

கும்பாபிஷேகத்தில் நடைபெற்ற பாலர் கவியரங்கம் என்னே மிகவும் கவர்ந்தது. இளவயதினிலே மிகுந்த கவி நயத்துடன் பாடிய இளங் கவிஞர்கள் என் சிந்தையுள் இன்றும் நிலேத்து நிற்கின்றனர்.

அடுத்து இரண்டு நாட்களும் நடைபெற்ற விருந்தின் பெருமையை அறியாதார் இல்லே. அன்னபூரணியே இலுப்பக்குடிக் கும்பாபிஷேகத்தில் தன் பணியை நகரத்தார் வடிவில் நடத்துவது போல் இருந்தது.

வாழ்க நகரத்தார்கள்! வளர்க அவர்கள் இறைத்தொண்டு!

---

## ஆடிக்கு அழைத்தல்

ஆடி வேவுக்குப் பெண் வீட்டார் பணம் கொடுப்பது இப்போது ஒரு சம்பிரதாயமாக அல்லது பணத்தைக் கறக்கும் சடங்காக மாறிவிட்டது.

இதற்கு ஒரு வரலாறு உண்டு. ஆடி மாதத்தில் கரு தரித்தால் சித்திரை மாதம் அதாவது கடுமையான கோடையில் பிள்ளேப் பேறு நிகழும். இது பிள்ளே பெறும் இளம் பெண்ணுக்கு மிகவும் அல்லல் கொடுக்கும்.

ஜாதக ரீதியாகவும் முதல் இரண்டு குழந்தைகளுக்குச் சூரியன் உச்சமாக இருப்பது குடும்பத்திற்கு நல்லது அல்ல.

எனவே, முதற் பிரசவத்தின் போதும் இரண்டாம் பிரசவத்தின் போதும் மணமக்கள் ஆடி மாதத்தில் ஒன்ருக இருப்பதைத் தடுப்பது நகரத்தாருடைய வழக்கம். ஆடி மாதம் முதல் தேதியன்ருே அதற்கு ஓரிரு நாள் முன்னதாகவோ பெண்ணின் பெற்ருேர்கள் அவளேத் தங்கள் வீட்டுக்கு அழைத்துக் கொண்டு வந்து விடுவர்.

இந்தப் பழக்கம் இப்போது கைவிடப்பட்டிருக்கிறது. "உங்கள் மகள் ஆடி மாதம் பூராவும் உங்கள் வீட்டில் இருந்தால் உங்களுக்குச் செலவு வரும். அதற்குப் பதிலாக ரொக்கமாக ஒரு தொகையை ஆடி வேவுக்கு என்று தந்து" விடுமாறு கல்யாணச் சீர்முறைக் கணக்குப் பார்க்கும்போது கேட்பது பண ஆசை நம்மைப் படுத்துகிற பாட்டுக்கு ஒரு சான்ருகும்.

— 'சோமலெ.'

# நடப்பதெல்லாம் நன்மைக்கே

K. KR. RM. KR. பழனியப்பன், தேவகோட்டை



மந்திரி, தனது அரசன் எதைக் கேட்ட போதிலும் "ஈஸ்வரனது இயற்கையமைப்பு நடப்பதெல்லாம் நன்மைக்கே" என்றே பதில் கூறிக்கொண்டிருந்தான். மந்திரி எதற்கும் ஒரே மாதிரியாக பதில் கூறுவது மூடத்தன மென்று அரசன் எண்ணினான். அரசன் தனது இடது கைச் சுண்டு விரலை நறுக்கிக் கொண்டு 'இது எதற்கு?' என்று கேட்டான். மந்திரி அதற்கும் "அதுவும் ஒரு நன்மைக்கே" என்றான். தனக்கு ஏற்பட்டிருக்கும் தீமையை நன்மையெனக் கூறும் மந்திரியிடம் அரசன் மிகக் கோபம் கொண்டு அவனை சிறை யிலடைக்க உத்தரவிட்டான். அப்போதும் மந்திரி "இதுவும் ஒரு நன்மைக்கே" என்றான். அரசன் மந்திரியைப் பித்துப்பிடித்தவனாக எண்ணினான்.

நான்கு நாட்களுக்குப் பின் அரசன் தனியே காட்டிற்கு வேட்டையாடச் சென்று களைத்து ஓர் ஆலமரத்தடியில் படுத்து அயர்ந்து தூங்கிப் போனான். ஒரு புலி மோப்பம் பிடித்து அரசனை வந்து பார்த்த பொழுது ஒருவித துர்நாற்றம் வீசவே அரசனை கவனித்துப் பார்த்தது. நறுக்குண்ட சுண்டு விரல் சீழ் பிடித்தது தெரிந்தது. உடலில் துர்நாற்றமிருந்தால் மிருகங்கள் மனிதர் களைத் தின்னாது. ஆகவே புலி திரும்பி விட்டது. புலி தன்னைத் தொட்டதும் அரசன் வேகமாக விழித்தெழுந்து, புண்பட்டதால் புலி நம்மை ஒன்றும் செய்யவில்லை என்றெண்ணினான். உடனே அரண்மனைக்குச் சென்று மந்திரியை விடுவித்து வரவழைக்கச் செய்து அவருடைய "நடப்பதெல்லாம் நன்மைக்கே" என்ற வசனத்திற்கு மதிப்புக் கொடுத்து பரிசளித்து அவருக்கு உயர்பதவியுமளித்தார். "நன்மையென்றெண்ணுவதே நலம் தரும்"

# வாக்கின் சுத்தம்

பன்னிரண்டாண்டு நிரம்பிய சிறுவன் ஒருவன் அயலூருக்குப் போகும் வழியில் கள்வர் தலைவன் கையிலகப்பட்டான். எனக்கு என்ன கொண்டு வந்தாய் எனக் கேட்டான். என் தாயார் எனக்கு செலவிற்குக் கொடுத்த ஐந்து ரூபாய் மட்டும்தான் மடியில் இருக்கிறது என்றான். அடே! மூடா! என்னிடம் ஒன்றுமில்லை என்று சொல்லித் தப்பித்துக் கொள்ளாமல் உண்மையைச் சொல்லி அகப் பட்டுக்கொண்டு விட்டாயே என்றான் கள்வர் தலைவன். ஐயா! நான் அடுத்த ஊருக்குப் பிழைக்கப் போகிறேன். அதற்காக என் தாயார் கொடுத்த ரூபாய்தான் இது. என் தாயார் ரூபாயைக் கொடுத்து "உயிர் போனாலும் உண்மையைக் கைவிடாதே" என்று கூறியதைக் காப்பாற்றுவதைவிட இந்த ரூபாய் எனக்குப் பெரிதல்ல என்றான். அதைக்கேட்ட கள்வர் தலைவன் மிகவும் வெட்கி இச்சிறுவனுக்குள்ள உண்மையும் உறுதியும் எனக்கில்லாமல் என் ஜன்மாவைப் பாழாக்கி விட்டேனே என மிகவும் வருந்தி சிறுவனுக்குப் பரிசளித்து அனுப்பினான். பின்னர் தானும் தன் சகாக்களையும் நல்வழிப் படுத்தி சத்தியநெறிமுறையிலிருந்தே காலங் கழித்து வந்தான். "உண்மையுள்ள சிறுவனால் திருந்திய கள்வன்."



